TIC 54 a

**1938** கல்யாணமானவுடன் தனராஜ், தனது புதிய ஹெர்குலிஸ் சைக்கிளுக்கு தன் மைத்துனன் இவ்வளவு பலமாக போட்டியிடுவான் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

**இன்று** அதே சைக்கிளை தனது மாப்பிள்ளை எடுத்து உபயோகிப்பதை அவரால் தடுக்க முடியவில்லை; ஹெர்குலிஸ் அனைவருக்கும் மிக உபயோகமாகவிருப்பதே இதன் ரகசியம்.

**ஹெர்குலிஸ்** ஓர் சைக்கிள் மட்டும் அல்ல,

வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்றுணை



சுமார் 50 வருஷங்களாக உயர்தர சைக்கிள்களைத் தயாரித்துவரும் அனுபவமிகுந்தவர்களால் இப்பொழுது இந்த நுட்பவேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் சைக்கிள் டி. ஐ. சைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. அதன் உயர்தர அமைப்பையும், அதிகப் பிரயாசையில்லாமல் ஓடும் தன்மையையும் கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். சைக்கிள்களில் மிகச்சிறந்தது ஹெர்குலிஸ். ஆயினும் மிதமான விலையில் கிடைக்கிறது.

உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த முதலாகும். **ஹெர்குலிஸ்** உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானமாகும்.

இந்தியாவில் தயாரிப்பவர்கள்.

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

# கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



எந்த வேலைக்காயினும் சரி



அதற்கென்று, குறிப்பிட்ட ஒரு



ஷாலிமார் பெயிண்ட் இருக்கிறது.



be BRIGHT – specify




விவேகத்துடன் ஷாலிமார் பெயிண்டையே
குறிப்பிட்டு வாங்குங்கள்.

**ஷாலிமார்** பெயிண்ட்கள்

ஷாலிமாரின் எல்லாவித பெயிண்ட்களின் முழு விவரங்களுக்கு "ஷாலிமார் [illegible]" லீப்லெட்டை, தபால் பெட்டி, 68, கல்கத்தா-1 க்கு கேட்டு எழுதவும்.

SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO. PRIVATE LTD.

SPW 359



மலர் 17 இதழ் 18

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - *பாரதியார்*

ஹேவிளம்பி கார்த்திகை 16

# முதல் பிரச்னை

**உ**ணவுப் பிரச்னைதான் பாரத நாட்டிலுள்ள எல்லாப் பிரச்னைகளையும்விட மிக முக்கியமானது. மற்ற எல்லாப் பிரச்னைகளையும் ஒதுக்கி வைத்து இதையே கவனிப்பதும் கூட இன்றைய நிலைக்கு மிகவும் அவசியமாகும்.

பயிர்த் தொழில் செய்யும் ஒவ்வொரு குடியானவனும் தன்னுடைய நிலத்திலிருந்து எடுத்து வரும் மகசூலை நூற்றுக்குப் பதினைந்து சதவிகிதம் அதிகப்படுத்த வேண்டும். இதைச் செய்தால்தான் உணவுப் பிரச்னை தீரும்.

இது ஒரு பொது மக்களின் இயக்கமாக வேண்டும். மந்திரிகளும் உதவி மந்திரிகளும் உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்று பேசுவதில் பயனில்லை.

பொது மக்களின் இயக்கமாக உணவுப் பிரச்னையைச் செய்வதற்கு வழி என்ன ?

பயிர்த் தொழிலில் ஈடுபட்டு வரும் ஒவ்வொரு சின்னஞ் சிறு குடும்பமும் அந்தப் பயிர்த் தொழிலில் அக்கறை எடுத்துக்கொள்ளும்படியான நிலைமை ஏற்பட வேண்டும். சொந்தக்காரனுக்கும் உழுபவனுக்கும் இடையில் விவகாரங்களும் வேற்றுமைகளும் உண்டாக்கிவருவதைச் சர்க்கார் நிறுத்திவிட்டு, அந்தகைய வேற்றுமைகளுக்கு இடந்தரும் சட்டங்களை ரத்து செய்ய வேண்டும். 'இது என் வீடு, இது என் மாடு, இவள் என் மனைவி' என்று இருக்கிற உணர்ச்சியைப் போல் 'இது என் நிலம்' என்கிற உணர்ச்சியை மறுபடியும் உண்டாக்கித் தரவேண்டும்.

'இது என் நிலமாயிருந்தது. ஆனால் இப்போது இதில் எனக்கு என்ன உரிமை? புதுச் சட்டம் வந்து மாறிவிட்டது' என்று எண்ணுகிற நிலைமையை மாற்ற வேண்டும்.

குடியானவனும் தற்போது, 'நான் ஏன் உழைக்க வேண்டும், வந்தது போதும் சொந்தக்காரன் பார்த்துக் கொள்ளட்டும்' என்று பயிர்த்தொழிலில் கொஞ்சமும் கவனம் செலுத்தாமல் இருக்கிறான்.

யாருக்குமே அக்கறையில்லாத நிலைமை பயிர்த் தொழிலில் ஏற்பட்டுவிட்டது. இது புதுச் சட்டங்களின் விளைவு. புதுச் சட்டங்களைக் காட்டிலும் அரசியலாரின் பேச்சுக்களின் விளைவே என்றும் சொல்லலாம்.

தத்தம் நிலத்தில் சொந்தக்காரர்களுக்கு அக்கறையும் பூரண நம்பிக்கையும் உரிமை புணர்ச்சியும் உண்டாக்கினால் ஒழிய உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவது அசாத்தியம். நாம் சொல்லியபடி நிலைமை மாறவேண்டுமானால் அரசியலாரின் பேச்சு புதுப் பாணியில் நடைபெற வேண்டும். அந்த நல்ல காலம் நாட்டுக்கு ஏற்பட்டால் ஒவ்வொருவனும் தன்னுடைய நிலத்திலிருந்து ஒரு கலத்துக்கு ஒரு மரக்கால் அதிகப்படியாக விளைச்சல் எடுப்பான்.

இது செய்யாவிடில் அன்னிய தேசங்களிலிருந்து கோதுமையும் நெல்லும் இறக்குமதி செய்து கொண்டே யிருக்க வேண்டியதாகும். அதற்குத் தகுந்தவாறு வேறு பொருள் ஏற்றுமதிக்கு இடமில்லாமல் தவிர்ப்பதே நமது சாசுவத நிலையாகும்.

# ஒரு நக்கீரர்

“நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம், குற்றமே!” என்று புலவர் நக்கீரர் சிவபெருமானைப் பார்த்துச் சொன்னாராம்.

இந்தக் கதையை வைத்துத் தமிழ்த் தலைவர்களுடைய அஞ்சா நெஞ்சத்தையும், நேர்மைத் திறனையும் பற்றிப் பல ஆண்டுகளாக மிக வீரதீரப் பிரதாபத்தோடு பேசிவந்ததைப் பலர் கேட்டிருப்பார்கள்; படித்திருப்பார்கள்.

இந்த வீரப் பண்பு திடீரென்று தமிழ் நாட்டில் வற்றிவிட்டதோ என்ற ஐயம் பலருக்குச் சமீபத்தில் ஏற்பட்டது! திரு ஈ. வெ. ரா. அவர்களின் பேச்சைக் கண்டித்து அவர் வெறுப்புக்கு ஆளாகாத மற்ற ஒரு தலைவரும் ஒரு அறிக்கைகூட விடவில்லையே என்று ஏங்கிக் கொண்டிருந்தனர்?

அந்தச் சமயத்தில் நக்கீரர் பரம்பரை தமிழ் நாட்டில் வற்றி விடவில்லை என்று சொல்வதுபோல் ஒரு குரல் வெளிப்பட்டது!

காந்தி மகானைப் பின்பற்றி - அந்தக் காலத்திலேயே, அதாவது காங்கிரஸ் அதிகாரத்துக்கு வருவதற்கு முன்னுலிருந்தே - உண்மையில் நின்று, சாந்தியையும் சமாதானத்தையும் நாடிப் பாடிய உத்தம தமிழ்க் கவிஞர் நாமக்கல் ராமலிங்கம்பிள்ளை, ‘நக்கீரர் பரம்பரை நாட்டில் அழிந்து விடவில்லை’ என்று சொல்வது போல் எழுந்து சென்னை மேல் சபையில் அற்புதமாகப் பேசினர்.

சில உண்மைகளை அழுத்தம் திருத்தமாகப் பேசினர். பலப் பல பெரியார்கள் பலமுறை எடுத்துக் காட்டிய உண்மைகளைச் சொன்னர்:

தமிழ்நாட்டுப் பிராம்மணர்கள் எங்கோ வடக்கேயிருந்து வந்தவர்கள் அல்ல. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தொல்காப்பியம் எழுதப்பட்டது. அதற்கு முற்பட்ட காலத்திலேயே பிராம்மணர்கள் தமிழ் நாட்டில் வசித்து வந்தார்கள்! அவர்கள் தமிழர்கள்! வேறு எங்கிருந்தோ வரவில்லை என்ருர்.

மதிப்புக்குரிய பிராம்மணப் பெண்கள், இந்தத் துவேஷப் பிரசாரம் காரணமாகப் பல இன்னல்களுக்கு உட்பட்டு வருகிருர்கள். அவற்றை யெல்லாம் அவர்கள் பொறுமையுடன் சகித்து வருகிருர்கள் என்று நெஞ்சம் நெகிழச் சொன்னர்.

அதற்கு மேலும் சொன்னர்: பிராம்மண சமுதாயத்தைப் பற்றி இன்று பேசப்படுவது போல் வேறு எந்தச் சமுதாயத்தைப் பற்றி

## பின்னல் நடக்காதீர்கள்!




“விஞ்ஞான வளர்ச்சியின் சிகரத்தையே இருவரும் எட்டி விட்டீர்கள். இனியும் பின்னுக்கு நடந்து பயனில்லை. முன்னேறி நடந்து நட்போடு வாழுங்கள்!” என்று விஞ்ஞான மேதை ரஸ்ஸல் மீண்டும் வல்லரசுகளுக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறர்.

# புலிக்கு ஆகாரமா?




ஐ. நா. சபைகளில் பிரிட்டனும், அமெரிக்காவும் பாகிஸ்தான் காஷ்மீரில் ஆக்கிரமித்துள்ளதைப் பற்றி ஆதரவு அளிக்கும் வகையிலேயே பேசி வருகிறார்கள்.

யாகிலும், பேசப்பட்டால் நாட்டில் பல "முதுகெலும்பற்ற ..." — 

யாகிலும், பேசப்பட்டால் நாட்டில் பல "முதுகுளத்தூர்கள்" ஏற்பட்டிருக்கும் என்றார்.

"பிராம்மணர்களுக்கு நான் கைப்பாவை என்று சித்திரிக்கப்படுகிறேன்" என்றாலும் உண்மையை எடுத்துச் சொல்லியே தீருவேன் என்று மேற்கண்டவாறு தைரியமாக எடுத்துச் சொன்னார். அவரைப் பாராட்டுகிறோம். தமிழ்நாட்டில் உண்மைக்கு ஒருவராகிலும் இருக்கிறாரே என்று மகிழ்கிறோம்.

இந்தப் பேச்சைக் கேட்டு நமது போலீஸ் மந்திரி திரு பக்தவத்சலம் அவர்கள், நாமக்கல் கவிஞரின் பேச்சு மிக உருக்கமாக இருந்தது என்று குறிப்பிட்டார்.

தமிழ்நாட்டில் உள்ள தமிழ் மக்கள் கோடிக்கணக்கான நல்லவர்கள் நமது கவிஞரைப் போலவே எண்ணி வருகிறார்கள். அவர்கள் அத்தனை பேருடைய குரலாகவே நமது நாமக்கல் கவிஞர் மேல் சபையில் பேசினார்.

மகாகவி ரவீந்திரநாத் டாகூர் ஓர் இடத்தில், "பல்லாயிரக்கணக்கான மக்கள் உள்ளத்தில் உருவெடுக்க முடியாமல் தத்தளிக்கும் ஓர் உணர்ச்சியைக் கட்டிப் பிடித்துத் தன் சொற்களிலே வடித்து உருவம் கொடுப்பவனே கவிஞன்!" என்று கூறியிருக்கிறார். அந்த இலக்கணத்துக்கு ஏற்பத்தான் நாமக்கல் கவிஞர் தமிழ்ப் பெருமக்களின் உள்ளத்து உணர்ச்சியை அப்படியே வெளியிட்டார்.

துவேஷப் பிரசாரத்தினால் ஏற்பட்டிருக்கும் நிலைமையைப் பற்றி நமக்குப் பல ஊர்களிலிருந்து செய்திகள் வந்த வண்ணம் இருக்கின்றன. துவேஷப் பிரசாரங்களுக்குச் செவி சாய்ப்பது கிராமத்திலுள்ள ஒரு சில காலிகள்தான். ஆயினும் அவர்கள் பெருந்தீமையை உண்டாக்க முடியும். இந்த நிலைமை நீடித்தால் தமிழ் நாட்டுக்குப் பெருத்த அவமானம். மிகப் பழம் பெரும் பண்பாட்டைச் சேர்ந்த தமிழ்ப் பெருங்குடிகளுக்கு நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசர நிலை ஏற்பட்டுள்ளது.

தீமை வளருவதற்கும் தருமம் குன்றிப் போவதற்கும் முக்கிய காரணம் பயம் என்பது. உள்ளத்தில் தைரியம் குன்றிப்போனால், நல்லவர்கள் பயந்து போனால் காலிகளுடைய ஆட்சிதான் நடைபெறும். ஒவ்வொருவனுக்கும் பக்கத்தில் காப்பாக ஒரு போலீஸ்காரனை அரசாங்கம் நியமிக்க முடியாது. ஒவ்வொருவனும் தன்னுடைய உடலையும் சொத்தையும் மானத்தையும் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக எதையும் செய்யச் சட்டத்தில் உரிமையுண்டு. இந்த உரிமையே நாட்டின் அமைதிக்குப் பாதுகாப்பு.

ஒவ்வொரு ஊரிலும், சங்கங்கள் அமைத்து நாட்டில் அமைதியைப் பாதுகாக்க வேண்டும். அரசாங்கமும் போலீசும் இருக்கிறதே என்று சும்மா இருக்கக் கூடாது.

# பாட புத்தகங்கள்

சென்ற இதழில் பாட புத்தகங்களைப் பிரசுரம் செய்யும் பொறுப்பைச் சர்க்கார் ஏற்றுக் கொண்டால் ஊழல்கள்தான் விளையும் என்று எழுதினோம்.

நாம் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை என்று சொல்வதுபோல் புது தில்லியிலுள்ள 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகை நவம்பர் 22-ம் தேதி ஒரு தலையங்கம் எழுதியிருக்கிறது. அதில் இன்று பாரத நாட்டில் சிலராஜ்யங்களில் சர்க்காரே பாட புத்தகங்களைப் பிரசுரிக்கும் பணியை மேற்கொண்டுள்ளது; அங்கெல்லாம் சர்க்கார் முயற்சிகள் தோல்வியே அடைந்துள்ளன என்று கூறப்பட்டிருக்கிறது.

பீகார் ராஜ்யத்தில் சர்க்கார் பாட புத்தகப் பிரசுரத் தொழிலை மேற்கொண்டது. அதன் விளைவாகச் சென்ற வருஷம் முழுதும் பள்ளிக்கூட மாணவர்களுக்குச் சரியாகப் புத்தகங்கள் கிடைக்கவில்லை. இந்த வருஷம் நிலைமை அவ்வளவு மோசமாகவில்லை. சர்க்கார் போதிய புத்தகங்கள் பிரசுரித்துள்ளன. ஆனால் சில தனிப்பட்ட பிரசுரகர்த்தர்கள், சர்க்கார் புத்தகங்களைப்போல் அச்சிட்டுச் சர்க்கார் விற்ற விலைக்கும் குறைவான விலை வைத்து விற்றிருக்கிறார்கள். மாணவர்கள் குறைந்த விலைப் புத்தகத்தை வாங்கிச் சர்க்கார் புத்தகங்கள் அப்படியே தேங்கச் செய்து விட்டனர்.

பீகார் சர்க்கார் இந்த நிலைமையைச் சமாளிக்க என்ன வழி என்று யோசித்தனர். பிறகு, 'இந்த யோசனை செய்யும் பொறுப்பு நாம் எடுத்துக் கொள்வானேன்' என்று ஒரு கமிட்டியை நியமித்து விட்டனர்! இது ஹிந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகைச் செய்தி.

ராஜஸ்தானிலும் சர்க்காரே பாட புத்தகங்களைப் பிரசுரிக்கும் தொழிலை மேற்கொண்டுள்ளது. அங்கும் நிலைமை மேற்படி மேற்படியாகத்தான் இருக்கிறது.

படிக்கும் குழந்தைகளுக்குச் சர்க்காரினால் காலாகாலத்தில் புத்தகங்களைத் தர முடியவில்லை. இதைப் பற்றி ராஜஸ்தான் சட்டசபையில் கேள்வி எழுந்தபோது, மத்திய சர்க்கார் வெளிநாட்டுக் காகிதத்தின்பேரில் விதித்திருந்த இறக்குமதித் தடையின் காரணமாகவும், நாட்டில் பரவியிருந்த 'புளூ' ஜுரம் காரணமாகவும் குறித்த காலத்தில் புத்தகங்களை வெளியிட முடியவில்லை என்று சமாதானம் சொல்லியிருக்கிறார்களாம்.

இவையெல்லாம் சர்க்கார் கையில் ஒரு தொழில் போய்ச் சிக்கிக் கொண்டால் அது சரியாக நடைபெறுவதில்லை என்பதையே எடுத்துக் காட்டுகின்றன!

'முன்னால் போனவன் இடறி விழுந்தால் பின்னால் வருகிறவனுக்கு விளக்குப் பிடித்தாற் போல்' என்று ஒரு பழமொழியுண்டு. முன்னால் சென்றுள்ள பீகாரும், ராஜஸ்தானும் இடறி விழுந்துள்ளன. சென்னை அரசாங்கமும் இந்த விளக்கு வெளிச்சத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

சென்னை சர்க்கார் பல ஆண்டுகளாக எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களுக்குப் பாட புத்தகங்கள் வெளியிட்டு வருகிறார்கள். இந்த வருஷம் வெளியிட்டுள்ள புத்தகத்திலுள்ள ஒரு பாடத்தில், கண்ணன் பிருந்தாவனத்தில் குழல் எடுத்து ஊதுவதைப் பற்றி ஒரு பாடம் வருகிறது. அந்தப் பாடத்துக்குக் குறிப்புரை எழுதச் சர்க்கார் நியமித்த பிரகஸ்பதி 'பிருந்தாவனம் என்பது மைசூர் சமஸ்தானத்தில் உள்ள ஒரு பெரிய பூந்தோட்டம்' என்று எழுதி, அது பாட புத்தகத்தில் அச்சடிக்கப்பட்டிருக்கிறது. இதை ஒரு பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் எடுத்துக் காட்டியிருந்ததை நமது வட்டமேஜைப் பகுதியில் நேயர்கள் பார்த்திருக்கலாம்!

பாடபுத்தகங்களைப் பிரசுரிக்கும் தொழிலைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை; அது பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கும் அபாயம். பிரசுரத் தொழிலுக்கும் இடைஞ்சல்; வேலையில்லாத மக்கள் தொகையை அதிகப்படுத்துவானேன்?

# அழகுத் தெய்வம்

மங்கியதோர் நிலவினிலே கனவிலிது கண்டேன்
வயது பதினாறிருக்கும் இளவயது மங்கை.
பொங்கிவரும் பெருநிலவு போன்ற வொளி முகமும்
புன்னகையின் புதுநிலவும் போற்றவரும் தோற்றம்
துங்கமணி மின்போலும் வடிவத்தாள் வந்து
தூங்காதே எழுந்தென்னைப் பாரென்று சொன்னாள்
அங்கதனிற் கண்விழித்தேன் அடடாவோ! அடடா!
அழகென்னும் தெய்வந்தான் அதுவென்றே யறிந்தேன்!

கவிதைக் கலைக்கும் சித்திரக் கலைக்கும் எப்பொழுதுமே நெருங்கிய தொடர்புண்டு.

இருவருமே கற்பனை உலகில் திளைப்பவர்கள். கவிஞனின் கற்பனை பாடல்களாக உருவெடுக்கும்; சித்திரக்காரரின் கற்பனை வண்ண ஓவியமாக உருவெடுக்கும்.

இரண்டு கலைகளும் ரஸிக்கத் தெரிந்த நாம் பாக்கியசாலிகள். பாரதியாரின் மேற்கண்ட கவிதையை எத்தனை தடவைகள் படித்துப் படித்து அனுபவித்திருக்கிறோம்.

ஓவியர் கனுவின் இந்தச் சித்திரத்தைப் பார்த்தவுடன் நமக்குப் பாரதியாரின் பாடல்தான் நினைவுக்கு வருகிறது! பாட்டுக்கேற்ற சித்திரமாக அமைந்திருக்கும் அழகைக் கண்டு வியக்கிறோம்! இந்த இரண்டு கலைஞர்களுக்கும் கிடைக்காத பேறு நமக்குக் கிடைக்கிறது! இதுதான் கலைஞராக இருப்பதைவிடக் கலா ரஸிகனாக இருப்பதிலுள்ள அரும் வாய்ப்பு!

# அருள் வாக்கு

வேத தாத்பர்யம் என்ன வென்பது புரியாமல் சிலர் வெவ்வேறு விதமாக அபிப்பிராயம் கூறுகிறார்கள். பல தேவதைகளைப் பற்றிச் சொல்வதால் பல தேவதைகளை ஹிந்துக்கள் பூஜித்தார்கள் என்று சில ஆராய்ச்சியாளர்கள் சொல்லுகிறார்கள். பூமி தத்துவ சாஸ்திரத்தைப் பற்றிச் சொல்வதாக ஸ்ரீ டி. பரமசிவ அய்யர் என்பவர் ஒரு அபிப்பிராயம் கூறினார். மற்றும் சிலர், வேதகாலத்தில் இருந்தவர்களுக்குப் பார்த்ததெல்லாம் ஆச்சர்யமாகப் பட்டது; அவற்றை யெல்லாம் தேவதைகள் என நினைத்து ஏதோ ஸ்தோத்திரங்களைப் பாடினார்கள். அதுதான் வேதம் என்று ஒரு சாரார் அபிப்பிராயப்பட்டனர். இவையெல்லாம் ஆராய்ச்சியாளர் எனப்படுவோர் தங்கள் மனத்துக்குத் தோன்றியதைச் சொன்னவையாகும்.

ஆனால் வேதம் ஒரே பரம்பொருளைத்தான் சொல்கிறது. பல தேவதைகள், பல யாகங்களைப் பற்றிச் சொன்னாலும் அவற்றைக் காட்டிலும் வேறு பட்டதான ஒரு பரம்பொருள் உண்டு என்று அறுதியிடப்படுகிறது. யாகங்கள் செய்வது கோபுரம் கட்டுவது போன்ற காரியங்களால் நல்ல அப்பியாஸம் ஏற்பட்டு மனத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே தாத்பரியம். என்ன துக்கம், கஷ்டம் வந்தாலும் அதை லட்சியம் செய்யாமல் இருந்தால் துக்கமே ஏற்படாது. அவ்வித நிலைமையை சமஸ்காரங்களினால்தான் அடைய முடியும். வியோகம்தான் யோகம். அதாவது சேர்க்கை யில்லாததுதான் சேர்க்கைக்கும் உதவும். இக்கருத்தை பகவான் கீதையில் மூன்றாவது அத்தியாயத்தில் உபதேசிக்கிறார். மனிதனுக்குத் துக்கம் ஏற்படலாம். ஆனால் அந்தத் துக்கத்தினால் உபத்திரவம் இல்லாமல், பாதிக்காமல் செய்து கொள்ள வேண்டும். தன் துக்கத்தைப் பற்றியே சிரிக்கும் மனோநிலை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அதுதான் இந்த யோகம். நமது துக்கம் துக்கமே இல்லை. பிறர் துக்கம் நேர்ந்தால் அதில் கருணை காட்ட வேண்டும். காருண்யத்தால் செய்யப்படுவதுதான் லோக ஸங்க்ரஹம்.

சித்தத்தில் உள்ள அழுக்குப் போய், காமம், கோபம், அசூயை முதலியனவற்றை ஒழித்து மன சஞ்சலத்தை அகற்ற வேண்டும். அதற்காகத்தான் பல்வேறு கர்மாக்களும் மந்திரங்களும், பரிகாரங்களும் நியமங்களும் கூறப்படுகின்றன. 'சித்தமலம் அறுவித்து' என்று மாணிக்கவாசகரும் வற்புறுத்துகிறார். சைவத்தில் வித்தியாப்பியாசத்தையும் யௌவனத்தினால் விஷயாதிகளில் ஈடுபாட்டையும், மகா கவி காளிதாஸன் முக்கியமாகக் கூறுகிறார். இதற்கெல்லாம் முக்கிய நோக்கம் பரம்பொருளான ஒன்றை அறிவதுதான். அதை அடைந்து விட்டால் வேறொன்றை அடைய வேண்டுமென்ற எண்ணம் ஏற்படாது. அதனால்தான் வியோகத்துக்கு யோகம் என்று பெயர்.

— ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# பொருளாதாரமும் பொதுமக்களும்

நாம் இரண்டு வாரங்களுக்கு முன் 'ஸ்டர்லிங் நிதியும் அவசரச் சட்டமும்' என்ற தலையங்கம் எழுதியதிலிருந்து தமிழ் மக்களிடையே ஒரு புது விழிப்பு ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ள முடிந்தது.

பொருளாதாரத் துறையில் நீண்ட காலம் அனுபவம் பெற்ற நண்பர் திரு எம். எஸ். சிவஸ்வாமி அந்தத் தலையங்கத்தைப் படித்து உற்சாகமுற்று "நமது ஏற்றுமதி வர்த்தகம்" என்றும், "நமது இறக்குமதி வர்த்தகம்" என்றும், இரண்டு அரிய கட்டுரைகள் எழுதி உதவினார். இந்தக் கட்டுரைகள் கல்கி வாசகர்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கியுள்ளன என்ற உண்மை நமக்கு வந்த பல கடிதங்களிலிருந்து தெரிந்து கொண்டோம்.

உதாரணத்துக்கு இதோ, நாமக்கல்லிலிருந்து ஒரு நண்பர் எழுதியுள்ள கடிதத்தைப் பாருங்கள்!

*தங்கள் 17-11-57 இதழில் நமது ஏற்றுமதி வர்த்தகம் பற்றிப் பொருளாதார நிபுணர் ஸ்ரீ எம். எஸ். சிவஸ்வாமி அவர்கள் மிகவும் தெளிவாக, குறைந்த பொருளாதார ஞானமுள்ளவர்களும் எளிதில் புரிந்து கொள்ளும்படி வரைந்துள்ளது போற்றத்தக்கது. இதே போல் தாங்கள் தொடர்ந்து இந்தியாவின் பொருளாதார விஷயங்களைப் பற்றிய கட்டுரைகளை வெளியிடும்படி வாசகர்கள் சார்பாகப் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.*

நாமக்கல்
20-11-57 கே. வி. கிருஷ்ணன்

கல்கி நேயர்களுக்குப் பாரத நாட்டின் பொருளாதார நிலையைப்பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அளவு கடந்து ஏற்பட்டிருப்பதையே இவையெல்லாம் எடுத்துக் காட்டின!

கல்கி நேயர்களின் பேர் ஆர்வத்துக்குத் தகுந்தபடி நாம் அவர்கள் ஆசையை நிறைவேற்றிவைக்க வேண்டுமே என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தபோது, தமிழ் மக்களின் பேரன்புக்கும், பாரதத்தின் பெருந்தலைவர்களின் பெரு மதிப்புக்கும் பாத்திரராகி விளங்கும் நண்பர் திரு க. சந்தானம் தமக்கே உரிய அடக்கமான குரலில் நான் "பொருளாதாரமும் பொது மக்களும்" என்ற தலைப்பில் ஒரு புத்தகம் எழுதி வைத்திருக்கிறேன் என்றார்.

அவரிடமிருந்த கையெழுத்துப் பிரதியை வாங்கிப் படித்துப் பார்த்தோம். கல்கி நேயர்களின் ஆர்வத்துக்கு ஏற்ப ஒவ்வொரு அத்தியாயமும் அதில் சுடர்விட்டுப் பிரகாசித்தது. முதல் அத்தியாயத்தின் தலைப்பே உள்ளத்தைக் கவர்ந்து விடுகிறது. "பாரதியாரின் கனவு" அடுத்தாற்போல், "நாடும் மக்களும்" "உணவும் விவசாயமும்" "பயிரும் பாசனமும்"—இப்படி இருபது அத்தியாயங்களில் பொருளாதார நிலையைப் புள்ளிவிவரங்களுடன் மிக அருமையாக எழுதியிருக்கிறார்.

திரு க. சந்தானம் தேசத்தொண்டராக இருந்து பன்முறை சிறை சென்றிருக்கிறார். கிராம சேவை செய்திருக்கிறார்; ராஜாஜியின் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் பல காலம் பணி புரிந்திருக்கிறார். பத்திரிகை ஆசிரியராக இருந்திருக்கிறார். பல நூல்களை எழுதியிருக்கிறார். மத்திய அரசாங்க மந்திரியாக இருந்திருக்கிறார். கவர்னராக இருந்திருக்கிறார். கடைசியாக அவர் வகித்த பதவி நிதிக் கமிஷன் தலைமைப் பதவி. அவர் எந்தப் பதவி வகித்தாலும் அதைத் திறம்பட நிர்வகிப்பவர் என்ற புகழ் அவருக்கு எப்பொழுதும் உண்டு. ஆனால் அவர் எந்தப் பதவி வகித்து, எங்கிருந்தாலும் தமது தமிழ் நாட்டையும் தமிழ் மக்களையும் தமிழ் மொழியையும் மறக்காதவர் என்பது அவரை நெருங்கி அறிந்தவர் எல்லோருக்கும் தெரியும். அவர் நிதிக்கமிஷன் வேலை முடித்துச் சற்று ஓய்வு கிடைத்த நேரங்களில் இந்த அரிய பொருளாதார நூலைத் தமிழில் மிகரஸமாக எழுதியிருக்கிறார்.

பாரத தேசம், அரசியல் சுதந்திரம் பெற்ற பின், சென்ற பத்தாண்டுகளாகப் பொருளாதாரச் சுதந்திரத் துறையில் போராடி வருகிறது.

பொருளாதாரச் சுதந்திரப் போராட்டத்தின் உருவமே முதல் ஐந்தாண்டுத் திட்டமும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டமும். இவற்றை வைத்துத்தான் இன்று நாட்டில் பலத்த சர்ச்சைகளும் காரியங்களும் நடைபெற்று வருகின்றன!

இவற்றையெல்லாம் சரியாகத் தெரிந்து கொள்ள நம் நாட்டின் அடிப்படையான பொருளாதார நிலையை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ளவேண்டும் அல்லவா? அதற்கு நம் அன்பர் திரு க. சந்தானம் உதவுகிறார்.

அடுத்த வாரத்திலிருந்து, பொருளாதாரமும் பொது மக்களும் என்ற தொடர் கட்டுரை ஆரம்பமாகிறது. பாரதியாரின் கனவை நாமும் திரு க. சந்தானம் அவர்களுடன் டிசம்பர் 8ம் தேதி 'கல்கி' இதழில் சேர்ந்து பார்ப்போம்!

## பிரார்த்தனைக் கூட்டம்

— கிண்டி ராஜபவனம் —

## காந்தி மண்டபத்தில்

நவம்பர் 29-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு

சென்னை திரு சி. கதிர்வேலுப்பிள்ளை கோஷ்டியாரின் நாகஸ்வர இன்னிசை, அடையாறு கலாக்ஷேத்திரக் கலைஞர்கள் துதி கீதங்கள் பாடுவார்கள். புலால் மறுத்தல் மகாநாட்டின் மேல்நாட்டு அங்கத்தினர்களும் ராஜாஜியும் பேசுவார்கள்.

தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள், சாரதா வித்தியாலய போதனாமுறை பயிற்சிப் பள்ளி மாணவிகள், நூற்புயக்ஞம், கீதை பாராயணம், ராமநாம பஜனை


இதோ
உங்களுக்கு
முற்றிலும் புதிய
மாதிரியான
இரு பவுடர்கள்


"GOKUL"
SANTOL
TOILET POWDER
GOKUL
SANDAL
TOILET POWDER
ஸாண்டால்
சந்தனத்துடன் கூடிய
டால்கம் பவுடர் ...
ஸாண்டல் வுட்
டாய்லட் பவுடர்
சுத்தமான தனி
சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது.
டி.எஸ்.ஆர். & கோ
கும்பகோணம்
A.K.GOPAL

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

6

**ம**னைவி எப்பேர்ப்பட்டவளாக இருந்தால் வாழ்க்கைத்துணை யாவாள்–அதாவது கணவனுடைய வாழ்க்கையில் உண்மையான துணையாவாள்?

இல்வாழ்க்கை நடத்துவதில் பிரியமும், அதற்கு வேண்டிய குணமும், அறிவும் படைத்தவளாக இருக்க வேண்டும். இல்லாவிடில் இடையூறும் இடுக்கணும் ஆவாள். இல்வாழ்க்கைக் கடமைகளை நடத்துவதில் உள்ளத்திலும் உழைப்பிலும் கணவனுக்கு உதவியாக இருக்கும் மாண்பு அவளிடம் இருக்க வேண்டும்.

கணவனுடைய பொருள் நிலையும் அந்தஸ்தும் உணர்ந்து அவற்றுக்கு இயைந்த முறையில் வீட்டைப் பார்த்துக் கொள்ளும் திறமை இருக்க வேண்டும்.

மனைத்தக்க மாண்புடையள்
ஆகித்தன் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்
துணை.

[மனைத்தக்க - தன் வாழ்க்கைக்கு இயைந்த. தன்கொண்டான் வளத்தக்காள் - தன்னைக் கொண்டவனுடைய வளம், அதாவது பொருள் நிலைக்குத் தகுந்தவாறு தன்னை மாற்றிக் கொள்ளும் திறமையைக் கொண்டவள்.]

எந்தக் குடும்பத்தில் மணமாகிப் புகுந்து வாழ்க்கை நடத்துகிறாளோ, அந்தக் குடும்பத்தின் பண்பாட்டுக்கும் செல்வ நிலைக்கும் தகுந்தபடி மனைவி நடந்து கொள்ள வேண்டும். இல்லாவிடில் குடும்ப வாழ்க்கையில் சுகம் உண்டாகாது. பிறந்த அகத்தின் நிலைக்கும் புக்ககத்தின் நிலைக்கும் ஏற்றத் தாழ்வு இருக்கும். தன்னுடைய பிறந்தகத்தை முற்றிலும் மறந்துவிட்டு, கணவனுடைய பொருள் நிலைக்குத் தக்கவாறு நடந்து கொள்ள வேண்டும். கணவன் மனைவி இருவரும் மனம் ஒன்றிய பண்பாட்டில் வாழ்க்கை நடத்தவேண்டும்.

மாண்பு, வளம் இரண்டிலும் புருஷனுடைய அளவுக்கு மனைவி இருக்க வேண்டும். மிஞ்சவும் கூடாது. குறையவும் கூடாது. இல்லற இன்பத்துக்கு இது இன்றியமையாதது. ஏழையின் குடும்பத்தில் அதிகச் செலவாளியான மனைவி வந்து சேர்ந்தால் ஆபத்து. அது போலவே பொருள் படைத்த குடும்பத்தில் வந்து சேர்ந்த மனைவி, தரித்திரத்தினால் தனக்கு ஏற்பட்ட வழக்கங்களை மாற்றிக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் வாழ்க்கை அழகு பெறாது. செல்வத்தைப் போலவே பண்பாடும். சுற்றத்தார், ஊரார், நண்பர், விருந்தினர் — இவர்களிடம் நடந்து கொள்வதில் இருவரும் ஓரே பண்பாட்டை அனுசரிக்க வேண்டும். 'மாண்பு' என்று முனிவர் குறிப்பிட்டது பண்பாட்டை. 'வளம்' என்றது செல்வத்தை. இப்படியெல்லாம் இருவரும் ஒன்றுபட்டால்தான், மனைவி வாழ்க்கைத் துணையாவாள். இல்லாவிடில் துணையாகாத மனைவியாகத்தான் இருப்பாள்.



இல்வாழ்க்கையில் பல கடமைகள் உண்டு. அவற்றையெல்லாம் சரியாக நிறைவேற்றினால்தான் இல்லறம் பூரண அழகு பெறும். இவற்றில் மனைவியின் பங்கு பெரிய பங்கு. இதற்கு வேண்டிய பண்பாடும் அறிவும் மனமும் வீட்டு யஜமானியிடம் இல்லாவிடில், எவ்வளவு செல்வம் இருந்தாலும் வாழ்க்கை மாண்படையாது.

**மனைமாட்சி இல்லாள்கண்**
**இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினும்**
**இல்.**

மனைவியானவள் மனைமாட்சி படைத்திராதவளாக ஆயின், அந்தக் குடும்பத்துக்கு வேறு வகையில் எவ்வளவு மாட்சியிருந்தும் இல்லாதது போலவே முடியும்.

மனைமாட்சி என்பது பெண்களுக்கு உரிய ஒரு தனிப் பண்பு. புருஷனுடன் ஒன்றுபட்டு இல்லறத்துக்கு உரிய உயர்ந்த கடமைகளைச் செய்து முடிக்கும் திறமை. இந்தத் திறமை மனைவிக்கு இல்லையாயின் புருஷன் எவ்வளவு பண்பட்டவனாயினும், பொருள் படைத்தவனாயினும், அந்தக் குடும்பத்தின் வாழ்க்கை அதற்குரிய மாண்பை அடையாது. "வாழ்க்கை எனைமாட்சித்தாயினும், இல்" என்பது திருவள்ளுவரின் தனி நடை.

குறிப்பு:— "செயல்" என்பது ஏவல் வினை முற்று என்று 27-10-57ம் தேதி இதழில் குறிப்பிட்டிருப்பது பிழை. வியங்கோள் வினைமுற்று என்று சொல்லியிருக்க வேண்டும்.



# கி. ரா. கோபாலன் குடும்ப உதவி நிதி

| | | |
|---|---|---|
| திரு ஆர். வெங்கடேசலு, பாப்ப நாயக்கன் பாளையம் | 20 | 00 |
| திரு ஏ. கே. பட்டுசாமி, சென்னை | 10 | 00 |
| மெஸர்ஸ் ரமணா அண்ட் கோ திருச்சி - 2. | 10 | 00 |
| திரு எம். வி. வெங்கடராகவன், 'ஸ்ரீஹரி' சென்னை - 6 | 10 | 00 |
| திரு ஏ. கோஸகன், கோலாலம்பூர் மலேயா | 6 | 63 |
| திரு க. சிவம், மலேயா | 5 | 30 |
| ஸ்ரீமதி சரோஜா ராமமூர்த்தி, ஆதம்பாக்கம், சென்னை - 16 | 5 | 00 |
| திரு எஸ். பலராமன், சென்னை-14 | 5 | 00 |
| திரு எஸ். சீனிவாசன், பாபட்லா | 5 | 00 |
| திரு க. ப. கோ. நாராயணசாமி, நாச்சியார்கோவில் | 5 | 00 |
| திரு என். வெங்கடசுப்ரமணியன் சென்னை - 8 | 5 | 00 |
| திருமதி ராஜலக்ஷ்மி ராகவன், திருவனந்தபுரம் - 1 | 5 | 00 |
| திரு தா. சே. தக்ஷிணாமூர்த்தி, திருவண்ணாமலை | 5 | 00 |
| திரு பி. ஆர். சுப்பிரமணியன், திருச்சி - 2 | 5 | 00 |

ரூ. 3—00 கொடுத்த அன்பர்கள்: திரு ஆர். வெங்கடாசலம், கல்கி ஏஜண்ட், ஆல்வாய்: திரு வி. கணேசன், சென்னை - 15.

ரூ. 2—00 கொடுத்த அன்பர்கள்; திருமதி கே. ஆண்டாள், சென்னை; திருவாளர்கள் வெங்கடரத்தினம், ஹீராகுட்; டி. எஸ். சுந்தரமூர்த்தி, பழவேற்காடு; எம். ராஜ கோபாலன், புதுதில்லி; எஸ். ஜயராமன், புதுதில்லி; பி. ஆர். சேஷாத்திரி, போபால்.

ரூ. 1—11 கொடுத்த அன்பர்கள்: திருமதி விமலா வைத்தியநாதன், அருவங்காடு. கருணாம்பாள் யக்ஞேசுவரன், அருவங்காடு.

ரூ. 1—00 கொடுத்த அன்பர்கள்: திருவாளர்கள் நு. சுப்பிரமணியம், திருப்பாச்சேத்தி; கே. ராமசாமி, விளான்குப்பம்; ஜி. ஜனார்த்தன குப்தா, ஈரோடு; திருமதி அருந்ததி ஆழ்வார், சென்னை - 3; எஸ். எஸ். சுந்தரம், குர்தா பிரிட்ஜ்; பி. எஸ். நரசிம்மன், சென்னை - 1.

கரக்பூர் திரு ஏ. வி. ஏ. ஈஸ்வரன் அவர்கள் மூலம் கரக்பூர் அன்பர்கள் அளித்த நன்கொடை ரூ. 80-க்கு விவரம்:

ரூ. 2—00 கொடுத்த அன்பர்கள்: திருவாளர்கள், ஆர். வி. சீனிவாசன்; ஜி. தியாகராஜன்; சௌந்தரராஜன்; ஆர். ஆர். ஹரிஹரன்; எஸ். எஸ். ராமன்; ராஜகோபாலன்.

ரூ. 1—00 கொடுத்த அன்பர்கள்; திருவாளர்கள், பி. சுந்தரேசன்; புரொபசர் ராமமூர்த்தி; கே. வி. செல்லம்; எஸ். எஸ். என். அய்யர்; ஆர். ஜி. அய்யர்; எஸ். ஜி. சீனிவாச ஐயர்; எஸ். எச். சுப்பிரமணியம்; வி. எஸ். ராஜன்; ஜி. ராமச்சந்திரன்; எம். வி. சுப்பிரமணியன்; டி. எஸ். ராமமூர்த்தி; கே. ஆர். சுப்பிரமணியன்; ஆர். ராஜகோபாலன்; வி. கே. ராமனும், வி. சீனிவாசனும்; ஏ. எம். ஐயர்; ஜே. ஆர். கந்தசாமி; எம். எஸ். ஜயராமன்; எஸ். எஸ். ராமன் (லோக்கோ); எஸ். பி. எஸ். மணியன்; எம். வெங்கடராமன்; ஆர். நடேசன்; கே. வி. கே. சர்மா; என். வி. ஆர். எஸ். மணியன்; சீதாபதி ராவ்.

12 அணா கொடுத்த அன்பர்: திருவாளர் ஏ. வி. ஏ. ஈசுவரன்.

8 அணா கொடுத்த அன்பர்கள்: திருவாளர்கள், பி. எஸ். தேவராஜன்; வி. பரமசிவன்; வி. பி. ராஜு; என். ஜயராமன்; வி. ஹரிஹரன்; வி. சத்தியமூர்த்தி; ஆர். எஸ். வாஸன்; எம். முருகேஷ்; ஆர். ராகவன். கே. பஞ்சநதம், பி. கணபதிராவ்; கே. கோவிந்தன்; எஸ். ஜி. சாரி; வி. சீனிவாசன். வி. எச். ராமகிருஷ்ணன்; எஸ். வி. பலராமன்; டி. கணேசன்; கே. சுந்தரராமன்; எம். கணேசன்: டி. எஸ். பட்டாபிராமன்; ஏ. கணேச அய்யர்; எஸ். ஐ. ஜானிபாஷா; கே. வி. ராஜன்; பி. சீதாராமன்; எஸ். கணேசன்; ஜே. சுந்தரராமன்; டி. வி. கணேசன்; என். குப்புசாமி; பி. ஆறுமுகம்; எஸ். டி. சம்பந்தம்; ஜி. பத்மநாபன்; வி. சிங்காரவேலு; ராமதாஸ்; பி. ராமகிருஷ்ணா; பாக்ராஜ் சாமுவேல்; எஸ். நாகராஜன்; சாரங்கபாணி; எம். சாந்தப்பன்; ரணேந்திரகுமார் போஸ்; பாலகுருநாதன்; ஈ. கிருஷ்ணமூர்த்தி; கே. வி. ராமநாதன்; விசுவநாத அய்யர்; கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி; பி. எஸ். வி. ராமானுஜம்; வி. மூனிருதீன்; எஸ் சுவாமிநாதன்; ஏ. கச்சிபாபு; கே. வி. ஐயர்; முத்துராமன்; பி. ஆர். ஈசுவரன்; ஆர். கே. தேசிகன்; எஸ். வெங்கடாசலம்; பி. எஸ். கே. அய்யர்; பி. ராஜகோபாலன்; வி. நாராயணசாமி; டி. சிவமணி; எம். சீதாபதி; எம். முத்து நாராயணன்; பி. சொக்கலிங்கம்; என். எஸ். ராமச்சந்திரன்; பி. டி. பத்ரி; கே. பார்த்தசாரதி; டி. ஆர். ஆர். ஐயர்: என். எஸ். பாலச்சந்திரன்; என். எஸ். பார்த்தசாரதி; ஆர். ராஜாராமன்; என். எஸ். ஆர். சர்மா; டி. நாகராஜன்; ஆர். சீனிவாசன் (இன்ஜினியரிங்); பி. சீனிவாசலு; ஏ. ஆர். சுந்தரம்; ஏ. ராஜாங்கம்; என். ஆர். மகாதேவன்; கே. பராங்குசம்; டேவிட்; ஜே. வி. செல்வராஜ்; வி. தேவதாஸ்; ஆர். சங்கரன்; ஏ. என். ஜே. ரத்தினம்; சுரேஷ்வர் தாஸ்: ஜி. எஸ். சுந்தரம்; என். பார்த்தசாரதி; சி. எச். ஆர். ப்ரம்மானந்தம்; ஆர். எஸ். மணி; எஸ். எம். எஸ். மணியன்; 4 அணா கொடுத்த அன்பர்: எம். ஆர். சந்திரன்.

| | | |
|---|---|---|
| முன் வரவு | ரூ. 1265 | 58 |
| ஆக ரூ. | 1473 | 73 |

# தக்ஷிண ரெயில்வே

## டெண்டர் நோட்டீஸ் நெ. S. 51/V/1

ஆறுமாத காலத்திற்கு ரெயில்வேக்குத் தேவையான யூனிபாரம் உடைகளைத் தைத்து சப்ளை செய்ய சீலிட்ட டெண்டர்கள் தக்ஷிண ரெயில்வே, கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸில் (அயனாவரம் போஸ்ட், சென்னை-23) 12-12-57 பிற்பகல் 3 மணி வரை ஏற்றுக் கொள்ளப்பட்டு, 13-12-57 பகல் 11 மணிக்கு கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் அவர்களால் பார்வையிடப்படும்.

டெண்டர் பாரத்தை பிரதி ஒன்றுக்கு ரூ. 10/- விதம் ரொக்கமாகவோ மணியார்டர் மூலமாகவோ செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். வேறு எவ்வகையிலும் அனுப்பப்படும் தொகை அங்கீகரிக்கப்பட மாட்டாது.

டெண்டருக்கான ஜாமீன் தொகை ரூ. 1000/-த்தையும் சீப் காஷியர், தக்ஷிண ரெயில்வே சென்னை-3, என்ற விலாசத்துக்கு 11-12-57க்குள் அனுப்பி வைக்க வேண்டும்.

டெண்டர் பாரங்கள் 9-12-57 பிற்பகல் 3 மணிக்குப் பிறகு கொடுக்கப்படமாட்டாது.

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸ்
சென்னை-23

P. N. TALATI
கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்

---

# பாலூஸேரி பெனிபிட் சிட் பண்டு
## (பிரைவேட்) லிமிடெட்

3. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 ... மதராஸ் - 5
தந்தி: 'EVERMANS' ... போன்: 85834

சேரக் கடைசி தேதி 18-12-1957 ... முதல் ஏலத் தேதி 20-12-1957

25 மாதங்கள் | **மாதாந்திர சீட்டுகள்** (3-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது (போர்டார் உத்திரவுப்படி.)

எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

**எங்கள் சேவை உங்களுக்குத்தேவை**

டெல்லி கிளை ஆபீஸ்: B. 6, பிளாக் III ஆஸப் அலி ரோட், புது டெல்லி

பெங்களூர் கிளை ஆபீஸ், "ஜெனகத் பில்டிங்ஸ்" ஸில்வர் ஜூபிலி பார்க் ரோட், பெங்களூர்-2



# சுரங்கச் செல்வங்கள்

டாக்டர் எம். எஸ். கிருஷ்ணன்

பாரத நாடு பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே சுரங்கத் தொழிலில் சிறந்து விளங்கி வந்திருக்கிறது. இது சரித்திரம் கண்ட உண்மை. மகாபாரத காலத்தில் சீரும் செல்வமும் சக்தியும் வாய்ந்து விளங்கிய ராஜ்யங்களில்கூட, உலோக உற்பத்திக் கலையும் சுரங்கங்களிலிருந்து கிடைக்கும் சாதனங்களை உபயோகிப்பதும் முக்கிய இடம் பெற்றிருந்தன. இரண்டாயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முந்திய கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தில் கூடச் சுரங்கங்கள், உலோக உற்பத்தி நிர்வாக சம்பந்தமான விதிகளைக் காண்கிறோம். நாணய உற்பத்தி போன்ற விஷயங்களையொட்டி அரசாங்கத்தின் கடமைகள் என்னவென்பதும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சுரங்கங்களும் உலோக உற்பத்தியும் செயல்பட ஆரம்பித்த பல ஆண்டுகளுக்குப் பிறகுதான் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் எழுதப்பட்டிருக்க வேண்டும். எனவே, சுரங்கத்தொழில் இந்தியாவில் பண்டைக் காலத்திலிருந்தே நடைபெற்று வந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை.

பண்டைக் காலத்திலே இந்தியாவில் உள்ள பல இடங்களிலும் ஆயிரக்கணக்கான சிறிய உலைகளில் இரும்பு செய்து வந்தார்கள். கிறிஸ்துவ சகாப்தத்துக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவின் பல பாகங்களிலும் இரும்பு உற்பத்தித் தொழில் மும்முரமாக நடந்து வந்தது.

அன்றிருந்து இன்று வரையில் வாழையடி வாழையாகப் பல குடும்பங்கள் அத்தொழிலை வைத்துக் கொண்டிருக்கின்றன. இப்போது அது மிக மிகக் குறைந்து மறைந்துபோகும் கலையாக இருந்து வருகிறதெனினும், இன்றும் கூட அந்தத் தொழிலை இருப்புப் பாதையிலிருந்து அதிக தூரமுள்ள சில இடங்களில் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

* * *

கிறிஸ்துவ சகாப்தத்துக்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் இந்தியாவின்மீது படையெடுத்து வந்த மகா அலெக்சாண்டருக்கு, பாஞ்சால மன்னனை போரஸ் சுத்த இரும்பாலான சாதனங்களைப் பரிசளித்ததாகச் சரித்திரம் கூறுகிறது. அதற்கு வெகு காலத்துக்கு முன்புகூட இந்தியாவில் செய்யப்பட்ட இரும்புச் சாதனங்கள் மத்தியதரைக் கடல் பிரதேசங்களில் விலை போயின. அப்பிரதேசத்தைச் சேர்ந்த நாடுகளில் பிரசித்தமாக விளங்கிய "டமாஸ்கஸ் எஃகு" உண்மையில் இந்தியாவில் உற்பத்தியான சரக்குதான். அக்காலத்தில் இரும்புச் சாதனங்களுக்கு அப்பிரதேசங்களில் அதிகமான கிராக்கி இருந்தது. கிறிஸ்து பிறப்பதற்கு 666 ஆண்டுகளுக்கு முன் எகிப்தின்மீது படையெடுத்து அசைரியர்கள் பெற்ற மகத்தான வெற்றிக்கு இந்திய இரும்பு ஆயுதங்கள்தான் காரணம் என்று சரித்திரம் கூறுகிறது.

கிழக்கு இந்தியா கம்பெனியின் கீழ் வேலை செய்த ஜே. எம். ஹீத் என்பவர் சேலம்

கலெக்டராக இருந்தபோது அப்பதவியை ராஜிநாமா செய்துவிட்டு, இரும்பு உற்பத்தி ஆராய்ச்சியில் ஈடுபடுவதற்காக இங்கிலாந்து சென்றார். அங்கு பெறும் பயிற்சியையும் அனுபவத்தையும் கொண்டு இந்தியாவில் நவீன இரும்புத் தொழிற்சாலை ஒன்றை ஸ்தாபிக்க வேண்டும் என்பதே அவரது நோக்கமாகும்.

ஸ்ரீ ஹீத், நவீனத் தொழிற்சாலை அமைப்பு முறைகள் பற்றி இரண்டு வருஷங்கள் வரையில் இங்கிலாந்தில் ஆராய்ச்சி செய்தபின் இந்தியாவுக்குத் திரும்பிவந்து திருவண்ணாமலை, மேட்டூரிலிருந்து பத்து மைல் தூரத்திலிருக்கும் புலம்பட்டி கிராமம், மலையாளத்தைச் சேர்ந்த வயலூர் முதலிய இடங்களில் இரும்புத் தொழிற்சாலைகளை அமைத்தார்.

அத் தொழிற்சாலைகளை அமைப்பதற்கு எத்தனையோ இடையூறுகள் இருந்தன. முதலாவதாக ஏராளமான கரி தேவையாக இருந்தது. அங்கு அவ்வளவு கரி கிடைக்கவில்லை. எனவே, முப்பது அல்லது நாற்பது வருஷங்கள் நடந்தபின் அத் தொழிற்சாலைகளை மூடிவிடும்படி நேர்ந்தது.

இந்திய இரும்பு உற்பத்தித் தொழில் பற்றி ஸ்ரீ ஹீத் வெளியிட்டுள்ள பிரசுரங்களில் அது சம்பந்தமான பல அற்புதமான தகவல்கள் அடங்கியிருக்கின்றன. அந்தப் பிரசுரம் ஒன்றில் அவர் கீழ்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:

''எகிப்தில் உள்ள மாபெரும் பிரமிட் கோபுரங்கள் இரும்புக் கருவிகளின் உதவியினாலேயே கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. மேற்படி கருவிகள் இந்தியாவிலிருந்தே தருவிக்கப்பட்டிருக்க வேண்டும். பிரமிட்களில் உபயோகிக்கப் பட்டுள்ள கருங்கற்களை வைத்துக் கட்ட இந்தியாவிலிருந்து கல் 'தச்சர்களை அழைத்துக்கொண்டு சென்றிருப்பார்கள் என்று தோன்றுகிறது.''

அது எப்படியாயினும் இரும்பு சாதன உற்பத்தி இந்தியாவில் பண்டைக் காலம் முதல் இருந்து வந்திருக்கிறது என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அது சம்பந்தமான அறிவும் பயிற்சியும் இந்தியாவிலிருந்துதான் நாளடைவில் சிரியா, கிரீஸ், எகிப்து முதலிய நாடுகளுக்குப் பரவியிருக்க வேண்டும்.

வெகு காலம் வரையில் ஐரோப்பாவில் இரும்பு உற்பத்தி சிற்சில இடங்களில் மாத்திரமே நடந்து வந்தது. அப்போது கூட இந்தியாவில் உற்பத்தியாகும் இரும்பின் ரகமே சிறந்ததாக இருந்தது.

*　　　*　　　*

உலோக வகைக்கனிகள், உலோகவார்ப்பு இவற்றைத் தவிர பண்டைக்கால இந்தியர்கள் தங்கள் கலை, கைத்தொழில் பொருட்களுக்கும், நகைகளுக்கும், சித்திரவேலைப்பாடுகளுக்கும் பலவிதமான உலோகச் சரக்குகளை உபயோகித்து வந்தார்கள். மொஹஞ்சதரோவிலிருந்தும் மற்ற இடங்களிலிருந்தும் தோண்டி எடுக்கப்பட்டுள்ள சாதனங்களிலிருந்து, அக்காலத்தில் இந்தியா சிறந்த சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய பாத்திரங்களைத் தயாரித்தது என்பது தெரிகிறது.

ராஜஸ்தானைச் சேர்ந்த சரஸ்வதி பள்ளத்தாக்கிலிருந்து கிடைத்துள்ள புதை








பொருள்கள் புராதன இந்திய நாகரிகத்தின் சிறப்பை எடுத்துக் காட்டுகின்றன.

பண்டைக் கால இந்தியர்கள் விலையுயர்ந்த நவரத்தினங்களை உபயோகித்து வந்தார்கள் என்பதற்கும் ஆதாரங்கள் இருக்கின்றன. கற்களிலிருந்து பளபளப்பான அழகான மணிகளும் ஆபரணங்களும் செய்யும் வழக்கம் அக் காலத்தில் இருந்து வந்தது. காஷ்மீர், ஆப்கானிஸ்தான், துருக்கிஸ்தானம், பர்மா, சயாம் முதலிய நாடுகளிலிருந்தும் இந்தியாவுக்கு ரத்தினங்கள் வந்தன. எனவே, அந்த நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் வெகு காலத்துக்கு முன்பே நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது. குறிப்பாக, சயாம், இந்தோனேஷியா, இந்தோசீனு முதலிய இடங்களில் இந்திய மன்னர்கள் ஆட்சி புரிந்திருக்கிறார்கள் என்பது. இன்றும் அந்த நாடுகளில் உள்ள கலைச் சின்னங்களிலிருந்து வெளியாகின்றன.

வெகு காலத்துக்கு முன் இந்தியாவில் உள்ள பல இடங்களிலும் ஏராளமான சுரங்கங்கள் இருந்தன. அவைகளிலிருந்து தங்கம், வெள்ளி, தாமிரம், ஈயம், துத்தநாகம் முதலிய உலோகங்கள் எடுக்கப்பட்டன.

மைசூரிலும், ஹைதராபாத்திலும் பல நூற்றாண்டுகளுக்கு முன் ஏராளமான தங்கச் சுரங்கங்கள் வேலை செய்து வந்தன.

அந்த இடங்களில் இப்போது செடி கொடிகள் படர்ந்து கிடக்கின்றன. எனினும், முற்காலத்தில் அங்கிருந்து தங்கம் எடுத்த சின்னங்கள் இன்றும் காணப்படுகின்றன.

சுரங்கச் செல்வங்களை எடுப்பதற்கு இப்போது இருப்பது போல் அக்காலத்தில் யந்திர சாதனங்கள் இல்லை. கையால் செய்யப்பட்ட சாதாரணக் கருவிகளைக் கொண்டே சுரங்கங்களிலிருந்து உலோக வகைகளை எடுத்தனர். அக்காலத்தில் தென்னிந்தியாவிலிருந்து சுரங்கத் தொழிலாளர்கள் தங்கனியகா, கென்யா முதலிய வெளிநாடுகளுக்கும் சென்றார்கள். அவ்விடங்களில் இன்று ஏராளமாகப் புளிய மரங்கள் இருக்கின்றன. அங்கு சென்ற இந்தியத் தொழிலாளர்களே, புளிய மரங்கள் வைத்திருக்கிறார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இல்லாவிடில், தென்னிந்தியர்கள் குடியேறிய பிரதேசங்களில் மாத்திரம் புளிய மரங்கள் இருப்பதற்குக் காரணம் இல்லை அல்லவா? தங்களுடைய அவசியமான தேவைக்காக உழைப்பில் சிறந்த தென்னிந்தியர்கள் புளியமரங்களை வைத்து வளர்த்திருக்க வேண்டும் என்று எண்ணவேண்டியிருக்கிறது.

சுமார் எழுபது ஆண்டுகளாகத் தங்கம் எடுக்கப்பட்டு வரும் பிரசித்தி பெற்ற கோலார் தங்கவயல்கள்கூடப் பண்டைய காலத்தில் தங்கம் எடுக்கப்பட்ட இடங்களில் ஒன்றுதான். கோலார் சுரங்க மண்டலம் வடக்கேயிருந்து தெற்கு நோக்கிப் பல மைல்கள் தூரம் வரையில் செல்லுகிறது. அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த பல இடங்களில் ஏராளமாகத் தங்கம் இருக்கலாம். அனந்தபூர் ஜில்லாவிலும் ரெய்ச்சூர் ஜில்லாவிலும் கண்டுபிடிக்கப்பட்ட தங்கச் சுரங்கங்களும் பண்டைக் காலத்தில் இருந்த சுரங்கங்கள்தான். இந்தத் தங்கச் சுரங்கங்களை அபிவிருத்தி செய்யும் பட்சத்தில், மிகுந்த பலனும் லாபமும் ஏற்படும்.

# திருவல்லிக்கேணி ஆர்ட்ஸ் அகாடமி (Regd.)

573, பைக்ராப்ட்ஸ் ரோடு - திருவல்லிக்கேணி - சென்னை - 5



**ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ... பாட்டு**

ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி ... பிடில்

ஸ்ரீ வி. நாகராஜன் ... மிருதங்கம்

உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராம அய்யர் ... கடம்

★

8 - 12 - 57 ஞாயிற்றுக்கிழமை மாலை 5 - 30 மணிக்கு

திருவல்லிக்கேணி ஹிந்து உயர்நிலைப்பள்ளியில்

டிக்கெட் விவரம்: ரூ. 10/-, ரூ. 5/-, ரூ. 3/- & ரூ. 2/-

உலகிலே வெகுகாலம் வரை இந்தியாவில் மாத்திரமே வைரம் உற்பத்தியாகி வந்தது. கோல்கொண்டா என்ற பெயர் உலகப் புகழ் பெற்றது அல்லவா? கர்நூல் மண்டலம் என்று பூகத்துவ நிபுணர்கள் கூறும் கர்நூல், அனந்தபூர், கடப்பை, கிருஷ்ணா, குண்டூர் ஜில்லாவைச் சேர்ந்த பிரதேசங்களில் சிறந்த வைரங்கள் உற்பத்தியாகி வந்தன. வைரங்கள் கோல்கொண்டாவில் உற்பத்தி யாகவில்லையெனினும், அவை கோல்கொண்டாவில் பட்டை தேய்த்து விற்கப்பட்டு வந்தன. பதினாறிலிருந்து பதினெட்டாவது நூற்றாண்டு வரையில் அப் பிரதேசங்களில் வைர உற்பத்தி மிகவும் மும்முரமாக இருந்து வந்தது.

பத்தொன்பதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்தியாவில் உற்பத்தியான வைரங்கள் உலகப் பிரசித்தி பெற்று விளங்கின. பிறகுதான் பிரேஸில் முதலிய மற்ற நாடுகளில் வைரங்கள் உற்பத்தியாகத் தொடங்கின. அதிலிருந்து ஐம்பது வருஷங்களுக்குப் பிறகுதான் தென்னாப்பிரிக்காவில் வைரச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அதன் பின் தென்மேற்கு ஆப்பிரிக்காவிலும் கிழக்கு ஆப்பிரிக்காவிலும் வைரச் சுரங்கங்களைக் கண்டு பிடித்தார்கள். மேற்படி வைரச் சுரங்கங்கள்தான் இன்று உலகிலே மிகச் சிறந்த சுரங்கங்களாக விளங்குகின்றன.

ஆனால், இந்தியாவில் பிறகு வைரச் சுரங்கங்கள் க்ஷீணதசை அடைந்து இன்று அடியோடு மறைந்து விட்டன. மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ரீவாவில் மாத்திரம் இன்றும் குறைந்த அளவில் வைரங்கள் உற்பத்தியாகின்றன. அனந்தபூர் ஜில்லாவில் இப்போது சில இடங்களில் வைரங்கள் கிடைப்பதாகத் தெரிகிறது. எனினும், அங்கு அவற்றின் உற்பத்திக்குப் பெரும் அளவில் முயற்சி எதுவும் நடைபெறவில்லை.

பல நூற்றாண்டுகளாக இந்தியாவில் தாமிரம், ஈயம், துத்தநாகச் சுரங்கங்கள் இருந்து வந்துள்ளன.

உலோகச் சுரங்கங்களைத் தவிர, சிற்ப வேலைகளுக்கு இன்றியமையாத கற்கள் எடுப்பதிலும் இந்தியர்கள் பண்டைக்காலத்தில் சிறந்து விளங்கியிருக்கிறார்கள். கருங்கற்களையும் பாறைகளையும் தீயின் உதவியால் பிளந்து, தங்களுக்குத் தேவையான அளவுக்குக் கற்களைத் தயாரித்து வந்துள்ளனர். முப்பது அல்லது நாற்பது அடி நீளம் உள்ள பெரும் தூண்கள், உத்தரங்களைக்கூட அம்முறையைக்கொண்டே உருவாக்கியிருக்கிறார்கள். அத்தகைய ஏராளமான பெருங் கற்கள் அடங்கிய கோவில்கள், மாளிகைகள், கோட்டைகள் முதலியவை இன்றும் காட்சி யளிக்கின்றன. பாறைகளில் குடையப்பட்ட குகைகள் போன்ற கட்டடங்கள் பதினைந்து அல்லது இருபது நூற்றாண்டுகளுக்கு முன் ஏற்பட்டவை. பௌத்தர் ஆலயங்கள், ஸ்தூபிகள், அசோகர் காலத்திலும் அதற்குப் பிறகு மொகலாயர் காலத்திலும் உருவான பிரபல ஆலயங்கள், கோட்டைகள், கொத்தளங்கள் யாவும் பண்டைக் கால இந்தியச் சிற்பிகளின் திறமையை உலகத்துக்குப் பிரகடனப்படுத்துகின்றன.




## கருத்துமிக்க தலையங்கம்

'சட்டமா, சமாதானமா?' என்ற தலையங்கத்தை 17-11-57 கல்கி இதழில் படித்தேன். அதை எழுத்துக்கு எழுத்து அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. விளக்கமாகவும் விவரமாகவும் எழுதிப் பாமர மக்களின் அறிவுக்குக் கூடப் புரியும்படி செய்து இந்த இக்கட்டான நிலையில் மக்களின் அறிவுக் கண்ணைத் திறக்கச் செய்திருக்கிறீர்கள். இம்மாதிரியான பணி கல்கிக்குப் புதுமையானது அன்று.

படைத்தல், காத்தல், அழித்தல் இம்மூன்று காரியங்களும் மும்மூர்த்திகளின் இடைவிடாத தொழில் என்று புராணம் சொல்லுகிறது. ஆனால் இம்மும்மூர்த்திகளையும் சேர்த்து ஒன்றாகப் பெரியார் அழித்தல், உடைத்தல், எரித்தல் என்ற காரியங்களைச் செய்து வருகிறார் என்பது தென்னகம் வாழ் மக்கள் அனைவரும் அறிந்ததே. நல்ல சமயத்தில் நல்லதொரு கருத்துரையை வழங்கியதற்குக் கல்கி பத்திரிகையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இராணிப்பேட்டை
14—11—57
திருவேங்கடம்

## ரயில்வே அதிகாரிகள் கவனிப்பார்களா?

காஞ்சியிலிருந்து செல்லும் பாஸ்ட் பாஸஞ்சர் காலையில் ஏழு மணி இருபது நிமிஷத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தது. பிறகு அதை 7-10 ஆக மாற்றினார்கள். இது முக்கியமாகக் காரியாலயத்துக்குச் செல்லுபவர்களுக்காகவும், கல்லூரி மாணவர்களுக்காகவும் ஏற்படுத்தப்பட்ட புகைவண்டி என்றால் மிகையாகாது. அக்டோபர் மாதத்திலிருந்து இது காலையில் 6-58க்குப் புறப்படுகிறது. சென்னைக்குச் செல்ல எடுத்துக்கொள்ளும் காலத்திலோ அதிக மாறுதல் இல்லை. ஏறக்குறைய மூன்று மணி நேரம் எடுத்துக்கொள்ளுகிறது.

குளிர்காலத்தில் தினசரி காலையில் எழுந்து 6-58க்குள் எல்லாக் காரியங்களையும் முடித்துக்கொண்டு புறப்படுவது கடினமான காரியம். முன்பு வழக்கத்திலிருந்தபடி 7-20 என்று மாற்றினால் புகைவண்டியை நம்பியிருக்கும் பலருக்கு உதவியாக இருக்கும். தற்சமயம் ரயில்வே கட்டணமும் உயர்த்தப்பட்டிருக்கிறது. தினசரி சென்னைக்குச் சென்று வருபவர்களுக்குப் புகைவண்டிதான சௌகரியம். பஸ்களில் 'பாஸ்' கொடுத்து விட்டால், புகைவண்டியில் யாரும் செல்ல மாட்டார்கள். எனவே, புகைவண்டியை நம்பியிருக்கும் மாணவர்களுக்காகவும், காரியாலயத்தில் வேலை செய்கிறவர்களுக்காகவும், ரயில்வே அதிகாரிகள் தற்போதுள்ள அசௌகரியமான நேர அட்டவணையை மாற்றுவதற்கு முன்வருவார்களா?

சின்னக்காஞ்சீபுரம்
15—11—57
இரமாசர சீனிவாசன்

## பொக்கிஷம்

நாங்கள் 'கல்கி'யைச் சென்ற 1950-ம் வருஷத்திலிருந்து தொடர்ந்து வாரந்தோறும் வாங்கிப் படிப்பவர்களில் நானும் ஒருவன். என்னிடம் இந்த ஏழு வருடக் கல்கி புத்தகங்கள் அப்படியே இருக்கின்றன. இவற்றையெல்லாம் பழைய பேப்பர்காரரிடம் போட்டுவிடுவோம் என்றால் ஒவ்வொரு வாரமும் 'கல்கி'யில் ஒவ்வொரு விதமான செய்திகளும், கட்டுரைகளும், மேல் அட்டைகளும் வருகின்றன. அதனால் அவற்றை விலக்கிவிட மனம் வரவில்லை.

அதோடு நம் அரும்பெரும் தலைவர் ராஜாஜி அவர்கள் எழுதும் வள்ளுவர் வாசகம் கல்கியில் இடம் பெற்றிருப்பது மிகவும் மெச்சத்தக்கது. அதனாலேயே கல்கியைப் பேப்பர்காரரிடம் போடுவதற்கு மனம் இடம் தரவில்லை.



அப்படியே போக்கிஷம் போல் வைத்திருக்கிறேன். பின்னால் என் பிள்ளைகளுக்கு இவை தேவைப்படும் என்பது நிச்சயம்.

வேலூர்
19-11-57

பி. சின்னசாமி

## தபால் நிலயம் தேவை

எங்கள் ஊரிலும் மற்றும் அடுத்துள்ள கிராமங்களிலும் சுமார் மூவாயிரத்துக்கு அதிகமாக மக்கள் வசிக்கிறார்கள். ஒருசிலரைத் தவிர மற்றெல்லாரும் அன்றாடக் கூலியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் தொழிலாளர்கள். அவர்கள் தங்கள் அவசரத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளப் பக்கத்தில் ஒரு தபால் நிலயம் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். கார்டு, கவர் வாங்கவோ, மற்றும் அவசரமாகத் தந்தி கொடுக்கவோ ஏழு மைல்களுக்கு அப்பால் உள்ள ஆர்டிபெட் தபால் நிலயத்துக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. ஐந்து ரூபாய் மணியார்டர் செய்ய வேண்டுமென்றாலும் எண்பத்தி ஏழு நயா பைஸா பஸ் சார்ஜ் கொடுக்க வேண்டியிருக்கிறது!

இதனால் இங்குள்ள ஏழை மக்களுக்கு ஏற்படும் கஷ்டங்களை ஊகிக்கலாம். பொது மக்களின் சௌகரியத்தை உத்தேசித்துத் தபால் நிலயங்களை அதிகப்படுத்த வேண்டுமென்று கூறப்படுகிறது. ஆயிரம் ஜனங்கள் உள்ள கிராமங்களில் தபால் நிலயங்களை ஏற்படுத்தப் போவதாகச் சில மாதங்களுக்கு முன் பத்திரிகைகளில் படித்தேன். ஆதலால் இங்குள்ள மக்களின் நன்மையை உத்தேசித்து எங்களுக்குள்ள குறைபாட்டை நிவர்த்திக்க வேண்டுமாய் அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறேன்.

சேக்கல்முடி
15—11—57

ஏ. சாலமோன் ராஜா

## பாலாற்றுப் பிரச்னை

பாலாறு நமது நாட்டின் நதிகளில் பிரசித்தி பெற்றது. சரித்திர முக்கியத்துவம் கொண்டது. வற்றாத ஜீவநதி. நாட்டின் மக்களை ரட்சிக்கும் கங்காபவானி என்று பாலாற்றுக்குப் பலவித பாணியில் பாவலர்களும், நாவலர்களும், புலவர்களும் பாமாலை பாடியும் வர்ணனைகள் புரிந்தும் உள்ளனர். பார் புகழ் கொண்ட பாலாறு சுமார் அறுபது ஆண்டுகளாக வறண்ட பாலைவனமாகக் காட்சியளிக்கிறது.

இதைக் கண்டு தமிழ்ப் பெரு மக்களும் உழவர்களும் தங்களை வளமுடன் வாழ வைத்த வற்றாத பாலாறு காய்ந்ததமைக்குக் காரணம் யாதோ என்று அவரவர்கள் இஷ்ட தேவதைகளுக்குப் பூஜை போடத் தொடங்கினார்கள். இந்தச் சமயத்தில்தான் ஸ்ரீ ஏ. எஸ். அய்யங்கார் வந்தார். 'பாலாறு வற்றுவதற்கு மைசூர்ராஜ்யம்தான் காரணம். ஆகவே, பாலாற்றில் பண்டைக் காலத்தைப் போல் நீர் ஓடும் வரை ஓயேன்' என்று சபதம் பூண்டு வட ஆற்காட்டுக்கும் செங்கல்பட்டுக்கும் தைரியமூட்டினார்.

மைசூர் நாட்டில் தங்கவயல் அருகில் பேத்தமங்கலம், ராமசாகரம், வளைவல் சொருவு போன்ற ஏரிகளை அந்த ராஜ்ய சர்க்கார் உயர்த்தியும், பாலாற்றை வளைத்துப் பலவித நீர்த் தேக்கங்கள் கட்டியும் நமது பங்கு தண்ணீரெல்லாம் அங்கே நின்றுவிடும்படி செய்துவிட்டார்கள். அங்கு தங்கவயலுக்கு ஆண்டு ஒன்றுக்குப் பாலாற்று நீரை நாலு லட்சரூபாய்க்கு விற்பனை செய்கிறார்கள்.

இதனை விளக்கி வந்த ஏ. எஸ். அய்யங்காரை மரணதேவன் கொண்டு போய் விட்டான். இப்பொழுது பாலாற்றில் கோதாவரித் தண்ணீரைக் கொண்டுவரப் போவதாகக் கேள்விப்படுகிறோம். கொண்டுவரும் நீரைக் கங்குந்தி குப்பத்தருகில் பாலாற்றில் கலந்தால் வட ஆற்காடும் வாழும்; செங்கற்பட்டும் செழிக்கும். புத்தூர் ஆரணியாற்றில் கலந்தால் என்றும் வட ஆற்காடு ஜில்லா வறட்சியில்தான் இருக்க நேரிடும். இதைத் தவிர மைசூர் நந்திமலையிலிருந்து பாலாற்றைப் பரிசோதனை செய்தால் நமது பங்கு தண்ணீர் கிடைக்கும். ஆகவே நமது சென்னை அரசாங்கம் இதில் அக்கறை அதிகம் செலுத்தக் கோருகிறேன்.

வாணியம்பாடி
18—11—57

வி. என். நந்தப்பன்
காரியதரிசி, விவசாயிகள் சங்கம்.









உள்ளமைந்த

# ரேஞ்ச்பைண்டருடன்

அக்பா தரத்தில், அப்பட்டமான அக்பா
லென்சுடன் கூடிய ஒரு காமிராவின்
விலை ரூ. 189 மட்டுமே!

உருவம் எவ்வளவு தூரத்திலிருக்கிறது என்று ஊகிப்பதில் பொழுதை வீணாக்காதீர். மிகப் பிரசித்தி பெற்ற அக்பா ஐஸோலெட் III காமிராவை பார்த்தமாத்திரத்தில் காமிராவுக்கும் உருவத்திற்குமுள்ள தூரம் சரியாக தெரிந்துவிடும்—இந்த பிரபல காமிராவை உபயோகித்து புகைப படக் கலையில் வெற்றி பெறுக.




# * ஐஸோலெட் III

காமிராவில் அக்பா அபோடார் 4.5 லென்ஸ், உள்ளமைந்த ரேஞ்ச் பைண்டர் (தூரம் அளவிடும் கருவி), பிராண்டோர் 4 விதவேகமுள்ள, பிளாஷ் பொருத்தக்கூடிய ஷட்டர் ஸெல்ப்டைமர், இரட்டை எக்ஸ்போஷரைத் தடுக்கும் கருவி முதலிய வசதி உள்ளது.
படத்தின் அளவு 2¼" x 2¼"



* அக்பா ஏ. ஜி. லெவர்குஸனின் டிரேட் மார்க்

இந்தியாவில் பூரண விநியோகஸ்தர்கள் :

**அக்பா இந்தியா** பிரைவேட் லிட். 198, ஜாம்ஷெட்ஜீ டாட்டா ரோடு பம்பாய்-1
கிளைகள்: பம்பாய் . புதுடில்லி . கல்கத்தா . மதராஸ்.

AGFA.57.20-A.TA




புகைவண்டி மிக வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. அதைவிட வேகமாகச் சிங்கப்பூரைப் பற்றிய சிந்தனை அலைகள் எங்கள் நெஞ்சத்திலே மோதிக் கொண்டிருந்தன.

தேசப் படத்திலே காணும் சிங்கைத் தீவின் வடிவம் சிறந்த தாமரை மலருக்கு ஒப்பானதே என்ற எண்ணம் எழுந்தது. ஆம்; நீலக் கடலிலே பூத்த வாடாத செந்தாமரையே சிங்கப்பூர் என்று சொல்வது மிகப் பொருத்தம். வாடும் மலர்களையே வண்டினங்கள் மொய்க்கும்போது, வாடாத தாமரையான சிங்கப்பூரை மாநிலத்து வணிகர்கள் மொய்த்துக் கொண்டிருப்பது விந்தையில்லையே!

இப்படி என்னவெல்லாமோ எண்ணிக் கொண்டிருந்த சமயம் எங்கள் சிந்தனையைக் கலைப்பது போல் நண்பர் அஜீஸ் அவர்களின் குரல் கேட்டது.

"ஜோகூர் பாரு நெருங்கி விட்டது! சுங்கச் சோதனைக்குத் தயாரா யிருங்கள்!" என்பதுதான் திரு அஜீஸ் கொடுத்த அறிவிப்பு.

இந்த இடத்தில் வாசகர்கள் ஓர் உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டும். சிங்கப்பூர், பினாங்கு ஆகிய இரண்டுமே சுங்கம் தவிர்த்த துறைமுகங்கள். ஆனால் மலேயா அரசாங்கம் இறக்குமதிப் பொருள்களின்மீது சுங்க வரி விதித்து வருகிறது. எனவே சிங்கப்பூரிலிருந்தும் பினாங்கிலிருந்தும் மலேயாவுக்குள் அடியெடுத்து வைக்கும் எவரானாலும் சுங்கச் சோதனைக்கு ஆளாகியே தீர வேண்டும். சிங்கையிலிருந்து செல்பவர்கள் ஜோகூர்பாருவில் சுங்கச் சோதனை செய்யப்படுவார்கள்.

"ஜோகூர் பாலத்தைக் கடந்து விட்டோமா?" என்று திரு அஜீஸ் அவர்களிடம் கேட்டோம்.

"இப்போதுதான் ரயில் ஜோகூர் பாலத்தைத் தாண்டியது. இதோ! ஜோகூர் பாரு. ரயில் நிலையமும் வந்து விட்டதே!" என்றார் திரு அஜீஸ்.

"பாலத்தைக் கடக்கும்போது 'தட தட' வென்ற பெரிய சத்தம் ஒன்றும் கேட்கவில்லையே!" என்றோம்.

"ஜோகூர் பாலம் என்பது இரும்புப் பாலம் அல்ல; அது ஒரு 'காஸ்-வே' அதாவது ஊடு பாதைதான்!" என்ற பதில் கிடைத்தது.

இரவு சரியாக ஒன்பது மணி ஐந்து நிமிடத்துக்கு ரயிலானது ஜோகூர் பாரு நிலையத்தில் வந்து நின்றது.

நாங்கள் அனைவரும் எங்கள் பெட்டிகளின் சாவிகளை ஆயத்தமாக எடுத்து வைத்துக் கொண்டு நின்றோம்.

ஒரு பெருங் கூட்டம் எங்களை நோக்கி ஓடி வந்தது. "இறங்குங்கள்! இறங்குங்கள்!" என்று கூட்டத்திலிருந்து பல குரல்கள் சேர்ந்து கேட்டன.

"சுங்கச் சோதனைக்கா இப்படிப் பல குரல்கள் அதிகாரம் பண்ணுகின்றன?" என்று திகைத்துப் போனோம்!

ஆனாலும் நாங்கள் மருண்டு விடவில்லை. ஏனெனில் சுங்கம் விதிக்கக் கூடிய எந்தப் பொருளையும் எங்களில் யாரும் சிங்கப்பூரிலிருந்து மலேயாவுக்குக் கொண்டு வரவில்லை.

கோலாலம்பூர் ரயில் நிலையம்

எனவே, நாங்களும் கொஞ்சம் கம்பீரமான குரலில், ''பெட்டிகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு வரவேண்டுமா?'' என்று கேட்டோம்.

''ஒன்றும் வேண்டாம்! நீங்கள் மட்டும் வாருங்கள்!...'' என்று பதில் வந்தது.

அந்தப் பதிலிலே 'அன்பின் அழைப்பு' பொதிந்திருந்தது. எனவே உற்று நோக்கினோம். அழைத்தவர்கள் சுங்க அதிகாரிகள் அல்லர்; ஜோகூர் பாருவில் உள்ள கலையன்பர்களே என்பதைப் புரிந்து கொண்டோம்.

அந்தப் பெருங் கூட்டத்திலே ஜோகூர் சமஸ்தானக் கவுன்சிலர் திரு. நடேச செட்டியார், சமாதான நீதிபதி திரு அப்துல் மஜீது, டாக்டர் சர்மா, கத்தே நிறுவனத்தைச் சேர்ந்த திரு அண்ணாமலை முதலியோரைக் கண்டு மகிழ்ந்தோம்.

அன்பர்கள் பிளாட்பாரத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு எங்களை அழைத்துக் கொண்டு போனார்கள். எங்கள் ஒவ்வொருவருடைய கையிலும் அழகான 'எவர் சில்வர்' கோப்பைகளில் அருமையான காப்பியைக் கொடுத்தார்கள். உண்மையில் அந்த இரவு நேரத்தில் அவர்கள் வழங்கிய காப்பி நறுமணமும் இன்சுவையும் வாய்ந்ததாகவே இருந்தது.

அன்பர்கள் அத்துடன் விடவில்லை. ரயில் புறப்படுவதற்குள் விரைவாக ஒரு 'குரூப்-போட்டோ'வும் எடுத்து விட்டார்கள். அவர்கள் செய்த வரவேற்பு ஆரவாரங்களைக் கண்டபோது, ''இது என்ன, ரயில்வே பிளாட்பாரமா? இல்லை, வரவேற்பு மண்டபமா?'' என்ற ஐயமே எங்களுக்கு ஏற்பட்டது.

நாங்கள் வரவேற்பு முடிந்து திரும்புவதற்குள் சுங்க அதிகாரிகள் ஓரிரு பெட்டிகளை மட்டும் திறந்து பார்த்து, திருப்தி அடைந்து கலைஞர்கள்மீது தமக்குள்ள நம்பிக்கையை வலியுறுத்திப் போய் விட்டார்கள் என்று கேள்விப்பட்டோம்.

புகை வண்டியும் அதிகத் தாமதமில்லாமல் ஒன்பதரை மணிக்குள் ஜோகூர்பாரு நிலையத்தைவிட்டுப் புறப்பட்டது.

சிங்கையிலிருந்து எங்களைத் தொடர்ந்து வந்த நண்பர்கள் அஜீஸ், ஏ. பி. ராமன், சந்திரன் ஆகியோரும் எங்களிடம் பிரியா விடைபெற்றுச் சென்றார்கள்.

ஜோகூர்பாரு என்பது மலேயாவின் தென்கோடியில் உள்ள அழகிய நகரம். ஜோகூர் சமஸ்தானத்தின் தலை நகரம். ஜோகூர் பாருவை மலைமகளின் திருவடி என்று சொல்லலாம். இந்தத் திருவடி சிங்கப்பூர் என்னும் செந்தாமரையைத் தழுவி நிற்பது எவ்வளவு பொருத்தம்!

ரயில் பெட்டியில் எங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த துயிலிடங்கள் வழிப் பாதைக்கு இரு பக்கத்திலும் அலமாரிகளைப் போல் அமைந்திருந்தன. ஒவ்வொரு அலமாரிப் படுக்கையிலும் இரண்டு தட்டுகள் இருந்தன. இந்த அமைப்பு சற்று வசதிக் குறைவாகவே தென்பட்டது. ஏனெனில் மேல்தட்டில் காற்று நுழைவதே கடினம்!

தேய் பிறைக் காலம் ஆதலால் வெளியில் எங்கும் இருள் கவிந்திருந்தது. எனவே, மலை

நாட்டின் இயற்கை வளப்பங்களைக் காணும் வாய்ப்பு அந்த இரவு நேர ரயில் பயணத்தின் போது கிடைக்கவில்லை.

எனவே, எங்கள் துயிலிடங்களுக்குச் சென்று படுக்கைகளில் சாய்ந்து கொண்டோம். உறக்கம் வரவில்லை. மலேயா நாட்டைப் பற்றிய பல விவரங்களை நினைவுக்குக் கொண்டு வந்தோம்; அவற்றைப் பற்றி நாங்கள் இருவரும் உரையாடிக் கொண்டும் தூக்கம் வரும் வரை பொழுதைப் போக்கினோம்.

மலேயாவின் ஆதிக் குடிகள் ஏறத் தாழ நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு யூனன் என்ற மலைப் பிரதேசத்திலிருந்து வந்து குடியேறியவர்கள். இவர்கள் 'செனோயர்' என்று சொல்லப்படுகின்றனர்.

மலேயாவில் குடியேறிய நாகரிகம் பெற்ற இனத்தவர்களில் இந்தியர்களே முதன் முதலில் வந்தார்கள் என்று வரலாறு கூறுகிறது. இவர்கள் கி. பி. முதலாவது நூற்றாண்டில் சோழ மண்டலக் கரையிலிருந்து வந்தார்கள். இவர்கள் மரக்கலங்களில் கடல் கடந்து வந்து பண்டமாற்று வாணிபம் செய்தார்கள். இவர்களில் பலர் மலேயாவிலேயே தங்கவும் முற்பட்டார்கள். இவர்கள் மலேயாவில் வாழ்ந்த பூர்விகக் குடிகளுடன் கொள்வினை கொடுப்பினை செய்து கொள்ளவும் தயங்கவில்லை.

இவ்வாறு குடியேறியவர்கள், கெடா என்று அழைக்கப்படும் கடாரப் பகுதியில் லங்காசுகம் என்ற ராஜ்யத்தை நிறுவினார்கள்.

"லங்கா சுகத்தில் மதில்கள் சூழ்ந்த பெரிய பட்டணங்களும், மாட மாளிகைகளும் உண்டு; அதன் மன்னர்கள் சீனாவுக்குத் தூதர்களையும் வர்த்தகர்களையும் அனுப்புவர்; வறியவர்களின் உடை பருத்தியால் ஆனது; செல்வர்களும், பெண்களும் நீண்ட கருங்கூந்தல் உடையவர்கள்; தங்கக் கடுக்கன்களை அணிவார்கள்; பெண்கள் இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற ஒட்டியாணங்களை அணிவர்; அரசர்கள் யானைமேல் அம்பாரி வைத்து வாத்தியங்கள் முழங்க உலா வருவார்கள்."

இவ்வாறு சீன வரலாறுகளிலிருந்து தெரிய வருகிறது. இதனால் லங்காசுகத்தை ஆண்டவர்கள் தென்னிந்தியர்கள் என்று யூகிக்க முடிகிறது.

"'கலங்கா வல்வினை
இலங்கா சோகமும்"

என்று முதலாம் இராஜேந்திரச் சோழனைப் பற்றிய மெய்க் கீர்த்தியில் 'லங்கா - சுகம்' பற்றிய குறிப்பு வருகிறது.

கி. பி. 1025-ல் இராஜேந்திரன் கடாரப் பேரரசை வென்ற செய்தி அவனது மெய்க் கீர்த்தி மிகத் தெளிவாக அறிவிக்கிறது.

"அலைகடல் நடுவுள்
பலகலம் செலுத்திச்
சங்கிராம விசயோத்
துங்க வர்மன்
ஆகிய கடாரத்(து)
அரசனை வாகையும்
பொருகடல் கும்பக்
கரியொடும் அகப்படுத்து
உரிமையில் பிறக்கிய
பருநிதிப் பிறக்கமும்......"








1. கோலாலம்பூர் ரயில் நிலையத்தில் வரவேற்பு. 2. சின் - ஆ - ஸ்டேடியத்தின் கம்பீரமான தோற்றம். 3. சின் - ஆ - ஸ்டேடியத்தில் உள்ள நீச்சல் குளம்.

அலைகடல் நடுவுள் பல கலம் செலுத்திய சோழ மன்னனின் ஒப்பற்ற கப்பற் படையை எண்ணிப் பார்க்கும்போது எவ்வளவு பெருமிதம் எய்துகிறோம்!

இன்றைய மலேயாத் தீபகற்பத்தின் மொத்த நிலப்பரப்பு ஏறக்குறைய 50,690 மைல்கள். இந் நிலப் பகுதியில் எண்பது சத

விதம் காடும், மலையும், சதுப்பு நிலமும் சூழ்ந்து காணப்படுகின்றன.

மலேயாக் கூட்டரசில் பதினொரு அங்கங்கள் உள்ளன. ஜோகூர், நகரி செம்பிலான், சிலாங்கூர், பஹாங், திரெங்கானு, கிளந்தான், பேரா, கெடா, பெர்லிஸ் ஆகிய ஒன்பது ராஜ்யங்களும், பினங்கு, மலாக்கா ஆகிய இரண்டு குடியேற்ற மாகாணங்களும் கூட்டரசில் அடங்கியுள்ளன.

ஜோகூர்பாரு, சிறம்பான், கோலாலம்பூர், கோல லிப்பிஸ், கோலத்திரெங்கானு, கோட்டாபாரு, ஈப்போ, அலோர்ஸ்டார், கங்கார், பினங்கு, மலாக்கா ஆகியவை முறையே மேற்கண்ட பகுதிகளின் தலைநகரங்களாகும். மலேயாக் கூட்டரசின் மத்திய தலைநகரமாக மாண்புறுவது கோலாலம்பூர்.

மேலே குறிப்பிடப்பட்ட ஒவ்வொரு ராஜ்யமும் ஒவ்வொரு அரசரின் ஆளுகையில் உள்ளது. ராஜ்ய அரசர்கள் சுல்தான்கள் எனப்படுகின்றனர். இவர்களிலிருந்து கூட்டரசுக்குப் பேரரசர் ஒருவரும் உதவிப் பேரரசர் ஒருவரும் நியமிக்கப்படுகின்றனர். பினங்கு, மலாக்கா ஆகிய மாகாணங்களுக்குத் தனித் தனியே கவர்னர் உண்டு.

ராஜ்ய சுல்தான்கள் அனைவரிலும் ஜோகூர் சுல்தான் மேஜர் ஜெனரல் சர் இப்ராஹிம் என்பவர் ஆண்டிலும் அறுபவத்திலும் மூத்தவர். இம் முதுபெருங் கிழவருக்கு எண்பத்திநாலு வயது நிரம்பி விட்டது; 1895 முதல் அறுபத்திரண்டு ஆண்டுகளுக்கு மேலாக இவர் அரசாண்டு வருகிறார்.

ரயிலில் வேலை பார்க்கும் இந்தியர் ஒருவர் மலேயா ரயில்வேயைப் பற்றிய சில விவரங்களை மிக ஆவலோடு கூறினார் :—

ரயில் வண்டிகள் ஆண்டு ஒன்றுக்கு மொத்தம் நாற்பது லட்சம் மைல்கள் ஓடுகின்றன; அறுபது லட்சம் பிரயாணிகளையும் இருபது லட்சம் டன் சரக்கும் ஏற்றிச் செல்லுகின்றன. மலேயாவில் விளையும் ரப்பர், ஈயம் முதலிய சரக்குகளை உற்பத்தி நிலையங்களிலிருந்து தொழிற்சாலைகளுக்கும் கப்பல்களுக்கும் ஏற்றிச் செல்லும் பொறுப்பை ரயில்வே இலாகா மிகத் திறமையாக நிர்வகிக்கிறது. ரயில்வே இலாகாவின் சார்பில் இழுவைப் படகுகளும், மோட்டார் படகுகளும் இயங்கி வருகின்றன. இந்தச் சின்ன நாட்டின் தேவைக்கு ஏற்றபடி, நூற்றி எண்பத்தெட்டு ரயில் எஞ்சின்களும், நாலாயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபது சரக்கு வாகன்களும் பதினொரு படகு வகைகளும் ரயில்வே இலாகாவில் உள்ளன. இவற்றை இயக்கும் துறையில் பதினாலாயிரத்து ஐந்நூறு ஊழியர்கள் பணியாற்றுகின்றனர்.

மே மாதம் இருபத்தோராந் தேதி காலை ஏழரை மணிக்கு ரயில் கோலாலம்பூர் நிலையத்தை அடைந்தது. நூற்றுக்கணக்கான கலையன்பர்கள் பிளாட்பாரத்தில் ஆர்வத்தோடு குழுமி நின்றனர்.

பெடரல் சட்டசபை உறுப்பினர் எஸ். ஓ. கே. உபயதுல்லா, 'தமிழ்நேசன்' ரு. அழகிரிசாமி, வி. பி. லிங்கத்தேவர், வி. ரோச், கப. நாராயணன், 'பைரோஜி', நாராயணன், கே. கே. சாமி முதலிய அன்பர்கள் கலைக் குழுவினரை முகமலர்ச்சியோடு வரவேற்றார்கள்.

மலேயாவின் தலைநகரமாக விளங்கும் கோலாலம்பூரின் சிறப்புக்குரிய சின்னங்களில் ஒன்றாக எழில் பரப்புவது ரயில் நிலையம். கட்டடக் கலையழகு ததும்பும் அந்த நிலையத்திலிருந்து நாங்கள் அனைவரும் எங்களுக்கென்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இல்லத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டோம்.

கோலாலம்பூரில் புதிய நாடக அரங்கம் சின். - லூ - ஸ்டேடியத்துக்கு அருகாமையில் அமைக்கப்பட்டுள்ளதாகக் கேள்விப் பட்டோம். சின்-லூ-ஸ்டேடியத்துக்குச் சென்றோம். அதன் அமைப்பையும் அழகையும் இமைப்பில்லாமல் கண்டு மகிழ்ந்தோம். அதன் அருகில் ஓர் அருமையான நீச்சல் குளமும் கட்டப்பட்டுள்ளதைக் கண்டோம். மேட்டுப் பாங்கான ஓர் இடத்தில் அமைந்துள்ள அந்த ஸ்டேடியமும், நீச்சல் குளமும், சீனர்களின் பண வளத்தையும், மன வளத்தையும், விளையாட்டத்தில் அவர்களுக்குள்ள ஈடுபாட்டையும் விளம்புவனவாக மிளிர்கின்றன.

இந்த ஸ்டேடியத்தை அமைப்பதற்கு சின்-லூ கூடற் பயிற்சிச் சங்கத்தார் பத்து லட்சம் வெள்ளிகள் செலவிட்டுள்ளனர்.

சின்-லூ ஸ்டேடியத்துக்கு வலதுபுறத்தில் சரிவான ஓர் இடத்தில் நாடகக் கொட்டகை புதிதாக நிர்மாணிக்கப்பட்டிருந்தது. எதிரொலித் தொல்லையில்லாத ஓர் அரங்கம் அமைந்துவிட்டது குறித்துத் திரு மூக்கன் ஞாசி அவர்களுக்கு அளவற்ற ஆறுதல் ஏற்பட்டது. (தொடரும்)

## பம்பாயில் நாடக விழா

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தைப் பற்றிய புது அறிமுகம் தமிழன்பர்களுக்குத் தேவையே இல்லை. தமிழ்ச் சங்கத்தினர் சங்கக் கட்டட நிதியின் பற்றாக்குறையை நீக்கிச் சங்கம் மேலும் மேலும் வளர்ச்சி அடைவதற்காக இவ்வருடம் டிசம்பர் முதல் வாரம் சிவாஜி கணேசன் குழுவினரின் முற்றும் புதிய நாடகங்கள் கொண்ட நாடக விழாவை நடத்த இருக்கின்றனர். தமிழ் சினிமா அபிமானிகளின் முழு அன்புக்குப் பாத்திரமான சிவாஜி கணேசன், பராசக்தி, விதி, கட்டபொம்மன் முதலிய நாடகங்களை நடத்தப் போகிறார்.

இந்த நாடகங்கள் தமிழ்ச் சங்கத்துக்காகப் பம்பாயில் பார்லி ஜிம்கானா மைதானம், தாதரில் டிசம்பர் 3ம் தேதி முதல் நடக்கப் போகின்றன. இந்த அரிய வாய்ப்பைப் பம்பாய்த் தமிழன்பர்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# நரைக்கிறதா?

லோமா ஹேர் டானிக்கை உபயோகித்து இழந்த இயற்கை அழகை திரும்பப் பெறுங்கள்.

**லோமா,** கேசத்தை இயற்கையாக கருமை நிறமாகச் செய்யும் தன்மை வாய்ந்தது. இது உலகப் பிரசித்திப்பெற்றது. இது பிரத்தியேகமாக தயாச் செய்யப்பட்ட பாட்டிலில் சீல் செய்த மூடியுடன் இப்பொழுது கிடைக்கிறது.






ஸோல் ஏஜெண்டுகள்: **எம். எம். கம்பாட்டாவாலா—ஆமதாபாத்-உ**

ஏஜெண்டுகள்: லி. நரோட்டம் அண்ட் கோ., பம்பாய்-2 போன்: 30575

**சென்னை ஏஜெண்டுகள்: ஜே பாலபாய் அண்டு கம்பெனி 260, எஸ்பிளனேட், மதராஸ்-1**

**இலங்கை ஏஜண்டுகள்: சிர்ருல் கதி & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11**

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

## விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்
















74A

# பாவை விளக்கு

அத்தியாயம் 31

## உமா வந்து போனாள்

குற்றாலத்தில் சாரல் காலம் முடியப் போகும் கடைசி வாரம் அது.

அருவிப்பெண் தன் ஆசைதீரக் குதித்துக் கும்மாளமடித்துக் கொண்டிருந்தாள். சூரியன் அவளுக்குச் சுற்றி விட்ட வானவில் சிற்றாடை பெரியதொரு மயில் தோகை போல் வானத்தில் வர்ண ஜாலம் காட்டியது. இளமை வெறியின் வேகம், பருவத்தின் பூரிப்பு, பெரிய இடத்துப் பெண் என்ற அலட்சியம் இத்தனையும் ஒன்றாய் அவளுடன் பொங்கித் தரையின் மடியில் விழுந்தன. உள்ளத்தில் பிறந்த இளஞ் சூட்டை அவள் இன்னிசையாக மாற்றிக் கொண்டு அந்தப்பக்கமெல்லாம் கிறங்கும்படி பாடினாள். மனித இனம், பறவைகள், வன விலங்குகள், செடிகொடிகள் முதலிய எல்லா ஜீவராசிகளும் அவள் குரலோசையில் இன்பம் கண்டன.

பொழுது புலர்ந்து நடுச்சாமம் வரையில் மனிதர்கள் வந்து நீராடிச் சென்றார்கள்.

மறுநாள் காலை தணிகாசலமும் மற்றவர்களுடன் அருவிக்குச் சென்று குளித்துவந்தான். மத்தியானச் சாப்பாடு முடிந்தது. பேராசிரியர் சந்திரசேகரனும் மாணிக்கவாசகமும் படுத்துக்கொண்டே தத்துவ விசாரணையில் இறங்கினார்கள். அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்கு அதுதான் தக்க சமயமென்று வீட்டைவிட்டு நழுவினான் தணிகாசலம். மாணிக்கவாசகத்தின் மனைவி, உமாவுக்குத் தலைவாரிப் பின்னிக் கொண்டிருந்தாள்.

அருவிக்கரையை ஒட்டியிருந்த மலைச்சரிவில் தணிகாசலம் தனியே நடந்தான். மாலைச் சூரியனின் கதிர்கள் அடர்ந்த மரங்களினூடே மண்ணுலகை எட்டிப் பார்த்தன. வானம் பார்த்த சீமையாகிய கண்ணபுரத்தில் பிறந்து வளர்ந்த தணிகாசலத்துக்குப் பார்க்குமிடமெல்லாம் புதுமை நிறைந்திருந்தது. குற்றாலத்தின் ஆதிக் குடிகளான குரங்குகள் மந்தை மந்தையாகவும், தனித்தனியாகவும் கண்ட இடங்களிலெல்லாம் திரிந்தன.

இன்னும் ஒரு வாரத்துக்கு அவனுக்கு அங்கு வேலை இல்லை. பள்ளிக்கூடம் விடுமுறையில் மூடியிருந்தது. சாரல் காலம் முடியப் போகும் சமயமாதலால் உடனடியாய் வரச் சொல்லி எழுதியிருந்தார் மாணிக்கவாசகம். ''வருஷத்துக்கு ஒருமுறை சாரல் வருகிறது; இதற்கு முன்பு இந்தக் காலத்தில் நீ வந்திருக்கமாட்டாய்; அதனால்தான் அழைத்தேன்'' என்று கூறினார் பெரியவர். அவருடைய மனைவியும்



அகிலன்

அவரைப் போலவே தணிகாசலத்தின் வரவால் மகிழ்ச்சியுற்றாள்.

கால் வலிக்கும் வரையில் மலைப்பாறை களினூடே நடந்து திரும்பினான் தணிகாசலம். திரும்பும் வழியில் சிற்றருவிக்கு அடுத்தாற்போல் பெரிய பாறை ஒன்று கிடந்தது. அதில் வந்து களைப்பாற உட்கார்ந்தான். சிற்றருவியின் ஒலி கலகல வென்று வளைக் கரம் குலுங்குவது போல் ஒரே சீராக ஒலித்தது. சுற்றிலும் பல நிறப் பூக்கள் செடிகளில் பூத்துச் சிரித்தன. வண்ணாத்திப் பூச்சிகள் நூற்றுக் கணக்கில் 'ஜிவ்' வென்று சிறகடித்துச் செடிச் செடியாய்ப் பறந்தன.

தணிகாசலத்துக்கு நேரம் சென்றதே தெரியவில்லை. இயற்கையின் எழிலில் நெஞ்சைப் பறி கொடுத்துத் தன்னை மறந்த லயந் தன்னில் இருந்தான்.

''அப்பா! அப்பா! அதோ பாருங்கள், மாமா......!''

தணிகாசலம் திரும்பிப் பார்த்தான். ஒரு கரத்தால் தன் அப்பாவைப் பற்றிக் கொண்டு மறு கரத்தால் தணிகாசலத்தைச் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தாள் உமா. மாணிக்கவாசகமும் அவர்களுக்குப் பின்னால் வந்தார்.

தணிகாசலம் மரியாதையுடன் பாறையிலிருந்து இறங்கி நின்றான்.

''ஏன், நீயும் எங்களோடு வருவது தானே?'' என்றார் மாணிக்கவாசகம்.

''இப்போதுதான் நடந்து விட்டுத் திரும்பி வந்தேன்.''

பெரியவர்களுடன் நெருங்கிப் பழகுவதற்கு அவன் தயங்கினான். மலைகளில் ஏறிப் பழகாத அவன் கால்கள் உண்மையிலேயே தாங்க முடியாத வலியினால் தெறித்தன.

''அப்பா! எனக்கும் கால் வலிக்கிறது அப்பா; நான் மாமாவோடு இங்கேயே இருக்கிறேன்; நீங்கள் போய் வாருங்கள்'' என்றாள்

பதிலுக்குக் காத்திராமல் அப்பாவின் கையை விட்டு விட்டுத் தணிகாசலத்தை நோக்கி ஓடி வந்தாள். பெரியவர்கள் இருவரும் மேலே நடந்தார்கள். தணிகாசலத்துக்குத் தர்ம சங்கடமாய்ப் போய் விட்டது. இவளிடம் அகப்பட்டுக் கொண்டு விழிப்பதற்குப் பதிலாக அவர்களுடன் கிளம்பி யிருக்கலாமே! நேற்று ரயிலில் அவளுடைய அப்பா பட்ட பாட்டில் தான் அவனுக்கு எம்மாத்திரம்? அவள் பேசிப் பேசிக் காதைத் துளைத்து விடுவாளே!

உமாவிடம் அவன் பேச்சுக் கொடுக்கவில்லை. மௌனமாகவே இருந்தான். ஆனால் உமாவா அவனை விடுகிறவள்?



பாறையைச் சுற்றிப் பல முறை ஓடி வந்து வண்ணாத்திப் பூச்சி பிடிப்பதில் ஈடுபட்டாள். அந்தச் சிறிய வண்ணாத்திப் பூச்சிகள் இந்தச் சிறகு முளைக்காத பூச்சியிடம் அகப்படவில்லை. அவை அங்குமிங்கும் அலைக் கழித்துத் திணறவைத்தன.

"மாமா, மாமா! இங்கே கொஞ்சம் திரும்பிப் பாருங்களேன்! அடடா! எத்தனை அழகு! ரோஜா இதழ்கள் ஜோடி ஜோடியாய், கூட்டங் கூட்டமாய்ப் பறந்து போவது போல் இல்லையா?"

தணிகாசலம் திரும்பிப் பார்க்கவில்லை.

பூச்சிகளைப் பிடிக்க முடியாத உமா பூக்களைக் கொத்துக் கொத்தாய்ப் பறித்தாள். செடிகளின் இலைகளை முறித்தாள். அப்படியும் அவன் சட்டை செய்யாமல் இருக்கவே குற்றாலத்தின் ஆதிக் குடிகள் செய்யும் வேலையைச் செய்தாள். மளமளவென்று ஒரு மரத்தில் ஏறி, அடிக் கிளையில் நின்றுகொண்டு, மேல் கிளையைப் பற்றி ஆட்டம் போட்டாள்.

தணிகாசலத்துக்குச் சிரிப்பு வந்தது. ஆனால் அந்த மரத்துக்கு உரிமை கொண்டாடிய மந்திக் குரங்குக்குச் சிரிப்பு வரவில்லை. அடுத்த மரத்தில் இருந்துகொண்டு கோபமாய்ப் பல்லைக் காட்டிக் கிரீச்சிட்டது. உமாவும் தன் பல்லைக் காட்டிப் பழித்தாள். அவ்வளவுதான்! ஒரே பாய்ச்சலில் அடுத்த மரத்தைவிட்டு அவள் மரத்துக்குத் தாவியது மந்தி. "மாமா!" என்று கத்திக் கொண்டே உமா தணிகாசலத்தினிடம் தாவினாள். அவள் தேகம் நடுங்கியது.



"குரங்கை விரட்டுங்கள், மாமா!"

"நீ வாலைச் சுருட்டிக் கொண்டு சும்மா இருப்பதாய்ச் சொன்னாயானால் விரட்டுகிறேன்."

"சரி, மாமா!"

அதற்குப் பிறகு உமா சிறிது நேரத்துக்கு நல்ல பெண்ணாக மாறினாள். பாறையின் மேல் உட்கார்ந்து கைகளில் முகத்தைத் தேக்கிக் கொண்டு அவனை உற்றுப் பார்த்தாள். பிறகு, "உங்களுக்கு என் மேலே கோபமா, மாமா? நீங்கள் யாரென்று தெரிந்திருந்தால் உங்களை நேற்று திட்டியிருக்கவே மாட்டேன்" என்றாள்.

"யாரா யிருந்தால் என்ன? பெண்ணுக்கு அடக்கம் வேண்டும்."

"நீங்கள் முரட்டு மனிதர் மாமா; என் தோள் பட்டை எப்படி வலிக்கிறது, தெரியுமா? இன்னும் வலிக்கிறது. அதனால்தான் எரிந்து விழுந்தேன். இனிமேல் உங்கள் வம்புக்கே நான் வர மாட்டேன்."



கொண்டு போவதாய்ச் சொல்கிறார், அப்பா. ஆனால் நான் இங்குதான் வருவேன்."

"தாராளமாய் வா."

"பட்டணத்துக்கு என்னோடு அவளை அனுப்பி வைக்கிறீர்களா? கடற்கரை பார்க்கலாம்; காட்சிச்சாலை பார்க்கலாம்; மூர்மார்க்கெட் போகலாம். நானே அவளை எல்லா இடங்களுக்கும் அழைத்துக் கொண்டு போகிறேன்."

"நானே இன்னும் பட்டணம் பார்த்ததில்லை" என்று சொல்லிச் சிரித்தான் தணிகாசலம்.

"பார்த்ததில்லையா!" பட்டிக்காட்டானைப் பார்க்கும் இரக்கத்துடனும் கர்வத்துடனும் அவனைப் பார்த்தாள் உமா. "பட்டணம் பார்க்காமல் நீங்கள் எப்படிக் கதை எழுதுகிறீர்கள்?"

"உலகமே உன்னுடைய பட்டணத்தில் அடங்கி விடவில்லை. வெளியிலும் மனிதர்கள் இருக்கிறார்கள். வெளியில் இருப்பவர்களை வைத்துக் கொண்டுதான் பட்டணத்துக்காரர்கள் பிழைப்பு நடக்கிறது!" என்றான் தணிகாசலம்.

அவள் வம்புக்கு வரவில்லை. ஆனால் பேச்சுக் கொடுத்தாள். அவனிடம் சரமாரியான கேள்விகளை அம்பு போல் சொரிந்தாள்.

"உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதாமே, ஏன் அக்காளைக் கூட்டிவரவில்லை? அவள் பெயரென்ன? அழகாயிருப்பாளா? படித்திருக்கிறாளா? என்ன படித்திருக்கிறாள்?"

கௌரியின் பேச்சை எடுத்தவுடன் தணிகாசலத்துக்குப் பெருமை தாங்கவில்லை. அவள் சிறுமி என்பதும், தான் பெரியவன் என்பதும் மறந்தே போய் விட்டன. சரிசமமாக நினைத்துக்கொண்டு அவளுக்குப் பதில் சொல்லி வந்தான்.

"ஏன், மாமா! எனக்குக் கௌரி அக்காளைப் பார்க்கவேண்டும் போலிருக்கிறது. அவளை அழைத்துக் கொண்டு வர மாட்டீர்களா?"

"அடுத்த சாரலுக்கு அவள் இதே இடத்தில் இருப்பாள்."

"நானும் இங்கே வந்து விடுவேன்" என்றாள் உமா. "சிம்லாவுக்காவது கொடைக்கானலுக்காவது அழைத்துக்

தணிகாசலம் இப்படிச் சொன்னானே தவிர, அவனுக்கு முதல் முறையாகப் பட்டணம் பார்க்க வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. மலர்க்கொத்தின் ஆசிரியரைப் பார்ப்பதற்காகவாவது ஒரு முறை சென்று வரவேண்டும். பெரிய பெரிய ஆசிரியர்கள் பார்ப்பதற்கு எப்படி இருப்பார்கள்?

அன்றிலிருந்து உமா தணிகாசலத்திடம் மாத்திரம் கூடியவரையில் வாலைச் சுருட்டிக் கொண்டு பழகினாள். ஆனால் முழுவதும் சுருட்டிக்கொள்ள அவளால் முடியவில்லை. தாயில்லாப் பெண் என்று அப்பா வருஷக்கணக்காய்க் கொடுத்த செல்லம் எப்படி ஒரு வாரத்தில் அடங்கி ஒடுங்கி விடும்?

காலை வேளைகளில் அவன் எழுதும் போது வந்து கதவைத் தட்டினாள். அவன் கொண்டு வந்த புத்தகங்களை எடுத்து வைத்துக் கொண்டு அவன்

எதிரில் உரக்கப் படித்தான். பாதி எழுதிக் கொண்டிருந்த கதைகளைப் பிடுங்கி வைத்துக்கொண்டு விமர்சனம் செய்யத் தொடங்கினாள். 'இந்தக் கதை நன்றாக இல்லை' என்ற பத்திரிகை ஆசிரியரின் தீர்ப்பையும், 'கையெழுத்து மகா மட்டம்!' என்ற அச்சுக் கோப்பவரின் தீர்ப்பையும் அவளே முன்வந்து வழங்கினாள். தணிகாசலத்துக்குத் தன்னுடைய எரிச்சலைக் காட்டிக் கொள்ள வழியில்லை. வேறு இடமாக இருந்தால் கன்னத்தில் நாலு அறைவிட்டு வெளியில் அனுப்பியிருப்பான். அந்த வீட்டில் பேராசிரியரைப் போலவே மாணிக்கவாசகமும் அவர் மனைவியும் அவளைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடினார்கள். தனக்குள் இரண்டு மூன்று நாள் மனம் புழுங்கினான். 'இவளுக்கு இடம் கொடுத்தது தப்பு; கொடுக்காவிட்டால் நமக்கு இங்கே இடம் கிடைக்காது. தன்னோடு சரி சமமானவன் என்று நினைத்துக் கொண்டு பழகுகிறாள். நாம் இவளை விடப் பெரியவனில்லையா? பட்டணத்துக் காற்று பட்டாலே தனிக் கர்வம் வந்துவிடும்போலிருக்கிறது!...'

தணிகாசலத்தின் மூளை வேலை செய்தது. அவளுக்கு ஏதாவது வேலை கொடுத்தாலாவது தனக்குத் தொல்லை தராமல் இருப்பாளல்லவா?

''உமா, இங்கே வாயேன்!'' என்று தயவோடு அவளைக் கூப்பிட்டான். ''என்னுடைய கையெழுத்து எவ்வளவு மோசமாயிருக்கிறது, பார்த்தாயா?''

''பார்க்கச் சகிக்கவில்லை!'' என்றாள் உமா உதட்டைப் பிதுக்கிக் கொண்டே.

''நீ ரொம்ப நன்றாக எழுதிவிடுவாயோ?''

''ஓ!''

''அப்படியானால் என் கதைகளுக்கு நகல் எடுத்துத் தருகிறாயா?''

''உண்மையாகவா!''

''எனக்கு எவ்வளவு உதவி தெரியுமா? கௌரி வந்தவுடன் உன் உதவியைப் பற்றிச் சொல்வேன்.''

உமா தன்னையும் ஒரு பெரிய ஆசிரியையாக நினைத்துக் கொண்டாள். முகத்தை மிகவும் கம்பீரமாக வைத்தவண்ணம் ஒரு மூலையில் போய் உட்கார்ந்தாள். முதுகு வலி எடுக்கும் வரையில் எழுதினாள். சாப்பாட்டுக்கு அவளை நாலு முறை பெரியவர்கள் வந்து கூப்பிட வேண்டியிருந்தது.

தணிகாசலம் தனக்குள் சிரித்துக் கொண்டான். அவளுடைய உதவி தேவையேயில்லை. தற்காலிகத் தொல்லை தீர்ந்தால் போதும். அவள் ஊருக்குப் போனவுடன் அவள் கிறுக்கிய காகிதங்களைப் பொறுக்கிச் சேர்த்துக் குப்பைக் கூடையில் கிழித்துப் போடலாம். காகிதங்களும் மையும் வீணாகப் போகட்டும்; நேரம் வீணாகாமல் இருந்தால் போதும்.

ஆனால் உமா அவனைத் தோற்க அடித்து விட்டாள். அவள் கிறுக்கித் தள்ளவில்லை. மணி மணியாக, குண்டு குண்டாக, அச்சுக்குக் கொடுப்பதற்கு



எப்படி எழுத வேண்டுமோ அப்படி எழுதினாள். முதல் பத்துப் பக்கங்களைப் பார்த்தவுடன் அவன் முகத்தில் சிரிப்பு மலர்ந்தது. நஷ்டத்தை ஈடு செய்ய நினைத்தவனுக்கு லாபம் கொடுத்து விட்டாளே உமா!

அறிஞர் டார்வினின் ஆராய்ச்சியைத் தணிகாசலம் உமாவைப் பொறுத்த மட்டில் ஒப்புக் கொள்ளத் தயாரானான். மனிதர்களிடம் குரங்குத்தனமும் இருக்கிறது; மனிதத்தனமும் இருக்கிறது. சூழ்நிலைக்குத் தக்கபடி அவர்கள் மரத்திலும் ஏறுவார்கள்; மனிதராகவும் உயர்வார்கள்.

நான்கு நாட்கள் இடுப்பு ஒடிய உட்கார்ந்து அவள் நாற்பது பக்கங்கள் எழுதிவிட்டுச் சென்னைக்குச் சென்றாள். தகப்பனாரையும் பெண்ணையும் மாணிக்க வாசகத்துடன் சென்று தென்காசியில் ரயிலேற்றிவிட்டு வந்தான் தணிகாசலம். ரயில் கண்ணுக்கு மறையும் வரையில் அவள் கையாட்டினாள். கண்ணுக்கு அந்தக் கை மறைந்தவுடன் அவனுக்கு அதன்மேல் இரக்கம் ஏற்பட்டது.

தான் எழுதிய பிரதிகளைத் தன்னிடமே வைத்துக் கொண்டு, அவள் எழுதியவற்றைத் தபாலில் சேர்த்தான். உமா சென்னைக்குச் சென்ற மறுநாள் பள்ளிக்கூடமும் திறந்தது. நாளடைவில் அவன் அவளை மறந்தேபோய் விட்டான்.

## அத்தியாயம் 32

# அருவிக்கரையில்

குற்றாலத்தில் கோடைச்சாரல் ஒய்ந்து விட்டது. ஆனால் குளிர் அருவி ஓயவில்லை. அமைதியாக இழிந்தோடி வந்த அந்த அருவியின் வனப்பில் தணிகாசலம் கௌரியின் அடக்கத்தைக் கண்டான். அவளை நினைத்துக்கொண்டான்.

அவன் எதிர்பார்த்ததைவிட மாணிக்க வாசகம் ஆழ்ந்த மனிதராக விளங்கினார். வயதின் அநுபவம், கல்வி அறிவு, எளிய வாழ்க்கை, அருளுணர்வு இவ்வளவும் அவரிடம் குடிகொண்டிருந்தன. தாமாக முன்வந்து தணிகாசலத்தின் தயக்கத்தைப் போக்கி அவனோடு சகஜமாகப் பழகினார்.

மதுரையில் டாக்டராகத் தொழில் செய்து பொருள் திரட்டியவர் அவர். தமது அறுபதாவது வயதில் அமைதி நாடிக் குற்றாலத்துக்கு வந்து சேர்ந்தார். நிலபுலங்கள் வாங்கிக் கொண்டார். விளைச்சலில் கண்ட மிகுதியைக்கொண்டு பள்ளிக்கூடம் நடத்தினார். அவருடைய நீண்ட நாளைய ஆசை நிறைவேறியது. தணிகாசலத்தைச் சேர்த்து இப்போது அங்கே ஆறு ஆசிரியர்கள். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்து குழந்தைகள் வந்து சம்பளமில்லாமல் படித்தார்கள். ஐந்தாம் வகுப்பு வரையில் உண்டு.

மாலைவேளைகளில் தணிகாசலத்தை அழைத்துக் கொண்டு வெளியே நடந்து செல்வார். மலையடிவாரத்துக்கோ, வயல் வரப்புக்கோ, அருகில் உள்ள கிராமத்துக்கோ அவர்கள் உலாவச் செல்வது வழக்கம். நடந்து கொண்டே பற்பல விஷயங்களைத் தணிகாசலத்துக்குச் சொல்வார். "ஓய்வு வேளைகளில் நான் தமிழ் இலக்கியம் படித்தேன்; அது எனக்கு அமைதி தருகிறது. மேல் நாட்டு விஞ்ஞான நூல்களையும் படித்தேன்; அதனால் அறிவு வளர்ச்சியில் எனக்கு ஆசை பிறந்தது. இன்னும் நான் படித்துக்கொண்டிருக்கிறேன்."

உயிர் வளர்ச்சிக்கு இந்த நாட்டின் பழைய பண்பும், உடல் வளர்ச்சிக்கு மேலை நாடுகளின் பொருளறிவும் வேண்டும் என்பது அவர் கொள்கை.

அவர் பிறந்து வளர்ந்த கிராமம் ஒரு மைல் தூரத்தில் இருந்தது. அது இப்போது கிராமமாக இல்லை. கூரையற்ற வீடுகள், நடக்க முடியாத பாதைகள், நம்பிக்கை வறண்ட முகங்கள்...

தணிகாசலத்துக்கு அதைச் சுட்டிக் காட்டி, "நகரம் கிராமத்தைத் தின்று விட்டது; செல்வம் உழைப்பைத் தின்று விட்டது; இதைப் பார்த்தால் உனக்கு எலும்புக் கூட்டைப் பார்ப்பது போல் தோன்றவில்லையா?" என்று அவர் கேட்டார்.

தணிகாசலம் அவருடைய உணர்ச்சியைக் கண்டு கலங்கிப் போனான்.

"தணிகாசலம்! கிராமத்தில் முன்பு உழைத்தவர்களுக்குச் சோறு உண்டு. களைப்புத் தீர ஆடலும், பாடலும், கூத்தும், விழாவும் உண்டு. ஒருமாதிரி அன்புப் பொது உடைமை இங்கு நிலவியது. கிராமத்தின் வருமானத்தை நகரத்தில் கொட்டி உல்லாசமாக வாழ நினைத்தவர்கள்தான் தொல்லைக்கு வித்திட்டார்கள். நகரத்தில் அழிக்கும் பணம் சீமைக்குக் கப்பலேறிச் செல்கிறது. கிராமம் ஏன் சீரழியாது? உழைப்பவன் பட்டினி கிடக்க நேருமோ என்று பயப்படுகிறான். அவன் பயத்திலும் பொய் இருப்பதாகச் சொல்வதற்கில்லை."

பள்ளிக்கூடம் வைத்த நோக்கத்தையும் அவர் விளக்கினார்: "அன்பிலே நம்பிக்கை இழந்துவிட்ட மனிதன் அறிவுப் போராட்டத்தில்தான் சோற்றைப் பெற முடியும். சோற்றுக் கவலை நீங்கி விட்டால் அவன் படிப்படியாக உயர்ந்து விடுவான். அதுவரையில் எந்த உபதேசமும் அவன் காதில் விழப்போவதில்லை."

ஐந்தாம் வகுப்புக்குத் தணிகாசலத்தை ஆசிரியராகப் போட்டுவிட்டு, அவனுக்கு ஆசிரியராக மாறினார் மாணிக்க வாசகம். இலக்கியத்தைத் தவிர, பொருளாதாரம், மனோதத்துவம், அரசியல் பல பொருள்பற்றி அறி

ஞர்களின் கருத்தை விளக்கினர். அவருடைய புத்தக அலமாரிகளை அவனுக்குத் திறந்து விட்டார். கம்பர், வள்ளுவர், இளங்கோ முதலியவர்கள் ஒரு புறம்; மார்க்ஸ், டார்வின், பிராய்ட் முதலியவர்கள் மறுபுறம். ''ஒரு பக்கம் உயிர்; மறுபக்கம் உடல். இடைக்காலத்தில் உடலை மறந்து விட்டதால்தான் வெள்ளைக்காரனிடம் அகப்பட்டு விழிக்கிறோம்'' என்றார்.

தணிகாசலத்தின் சின்னஞ்சிறு மூளையில் சிறிது சிறிதாகச் சிந்தனை அலைகளை எழுப்பிக் கொண்டு வந்தார் மாணிக்க வாசகம். ''நீ கதை எழுதுகிற பிள்ளை; மற்றவர்களுக்குச் சொல்லும் வசதி கிடைத்திருப்பதால் முதலில் நீ கொஞ்சம் தெரிந்துகொள்.''

தணிகாசலத்துக்கு அப்போதைக்கு அவர் கூறியதெல்லாம் விளங்கவில்லையென்றாலும், விரைவில் எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் பிறந்தது.

பள்ளிக்கூடத்தைப் பொறுத்தவரையில் அது அவனுக்கோர் இனிய பொழுது போக்கு. பாதி நேரம் படிப்பு; பாதி நேரம் ஆடல் பாடல். பேராசிரியராகக் கல்லூரிக்குப் போக முடியாவிட்டாலும் பள்ளிக்கூடத்து வாழ்க்கை அவனுக்குப் பிடித்திருந்தது.

மூன்று மாதங்கள் கழித்து, ஜனவரி விடுமுறையில் அவனைப் பொன்வயலுக்கு அனுப்பிவைத்தார் மாணிக்க வாசகம். தனி வீடு ஏற்பாடு செய்திருந்தார். குடும்பத்தை அழைத்து வருவதற்காகப் புறப்பட்டான்.

பொன்வயலிலிருந்து கௌரியையும் தாயாரையும் அழைத்துக் கொண்டு வந்தான். கண்ணபுரத்தில் சில நாட்கள்; புதுப்பட்டியில் சில நாட்கள்.

கண்ணபுரத்தில் தேவகி அவர்களை ஓடி ஓடி உபசரித்தாள். வேளைக்கொரு விதம், நாளைக்கொரு வகையாய்க் கௌரிக்கு அலங்கரித்து விட்டு அவன் முன்னே கொண்டு வந்து நிறுத்தினள். எந்த நேரமும் அவர்களை விட்டு அவள் பிரியவில்லை. கடைவீதிக்கு அழைத்துக் கொண்டு போய் அவர்களுக்குப் புத்துடை எடுத்துக் கொடுத்தாள்; கோயில் குளம் பூங்காவுக்கு அழைத்துச் சென்று அவர்களைக் களிப்பூட்டி மகிழ்வித்தாள். அவர்களுடைய பிணைப்பில் அவள் தன்னுடைய உள்ள நிறைவைத் தேடிக் கொள்வதுபோல் தணிகாசலத்துக்குத் தோன்றியது.

புதுப்பட்டிக்குச் சென்ற புது மண மக்கள் சிவன்கோயில் தாமரைக் குளத்தில் மூழ்கி எழுந்தார்கள். ''இங்கே தான் நான் நீந்தக் கற்றுக் கொண்டேன்'' என்றான் தணிகாசலம். பழைய நினைவுகளைக் கௌரியின் ஓரக் கண் பார்வை விரட்டியடிக்க முயற்சித்தது.

திரும்பவும் கண்ணபுரத்துக்கு வந்து அவர்கள் குற்றாலத்துக்குக் கிளம்பினர்கள். புறப்படுவதற்கு முதல் நாள் அவனுக்கு அறிமுகமாகியிருந்த பத்திரிகாசிரியர் பசுபதியைச் சென்று பார்த்தான். ஏற்கனவே அவர் அவனுக்குக் கடிதம் எழுதியிருந்தார்; பத்திரிகை அனுப்பி வந்தார்.

பசுபதி அவனை ஆர்ப்பாட்டமான முறையில் வரவேற்று உபசரித்தார். இனிக்க இனிக்கப் பேசினர்; இனிப்புப் பண்டங்கள் வரவழைத்துக் கொடுத்தார், ''மாதம் தவருமல் எனக்கும் எழுதிக் கொண்டிருங்கள்; இப்போதைக்



குப் போதிய வருமானம் இல்லை. பத்திரிகை வளர்ந்தவுடன் உங்களையே என் உதவிக்கு அழைத்துக் கொள்ளுகிறேன்'' என்றார்.

பயனுள்ள சந்திப்புத்தான் என்று மிகவும் பெருமைப்பட்டுக் கொண்டான் தணிகாசலம்.

அவன் புறப்படும் வேளையில், ''இப்போது நீங்கள் ஒரு சிறு உதவி செய்ய வேண்டுமே?'' என்றார்.

''என்ன?''

''உள்ளூர் கலைச்சங்க மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறேன். அரைமணி நேரத்துக்கு ஓர் சொற்பொழிவு எழுதிக் கொடுக்க முடியுமா?''

தணிகாசலம் உற்சாகத்துடன் காகிதங்களை வாங்கிக் கொண்டு அடுத்த அறையில் நுழைந்தான். யோசனை செய்து எழுதத் தொடங்கினன். அடுத்த அறையிலிருந்து பசுபதியின் குரல்,

''எதிலும் பட்டுக் கொள்ளாமல் நாருக்காக எழுதுங்கள்; உங்களுக்கா தெரியாது?'' என்று கேட்டது.

மூன்று மணி நேர மூளைச் செலவு அரை மணிப் பேச்சை அவருக்குக் கொடுத்தது. படித்துப் பார்த்து விட்டு, ''அருமை! அருமை!'' என்று அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார். ''போய் வருகிறீர்களா? மறக்காமல் கதை எழுதுங்கள். சமயம் வரும்போது உங்களைக் கவனித்துக் கொள்வேன்.''

அவர் கவனித்துக் கொள்ள வேண்டிய காலம் விரைவில் கிட்ட வேண்டுமென்று எல்லாம்வல்ல இறைவனை வேண்டிக் கொண்டான் தணிகாசலம்.

தென்காசி ரயிலடியில் தணிகாசலத்தின் குடும்பம் இறங்கியபோது முன்



போலவே மாணிக்கவாசகம் வண்டியுடன் காத்திருந்தார். முன்போலவே மாட்டு வண்டி நான்கு பேர்களைச் சுமந்து கொண்டு குற்றாலத்துச் சாலையில் பறந்தது. உமாவும் அவள் தந்தையும் இருந்த இடத்தில் இப்போது கௌரியும் கல்யாணியம்மாளும் உட்கார்ந்திருந்தார்கள். உமாவைப் போலவே கௌரி அவனையும் திரும்பிப் பார்த்தாள்.

இரண்டு அறைகளும் சமையற்கட்டும் உள்ள சிறிய ஓட்டு வீடு அவர்களுக்கு. முதல் நாள் சாப்பாட்டை மாணிக்கவாசகத்தின் வீட்டில் வைத்துக்கொண்டு அவர்கள் புதுக் குடி புகுந்தார்கள். தணிகாசலத்துக்கும் கௌரிக்கும் ஒரு சிறிய அறை; சமையல் சாப்பாட்டுக் காரியங்களுக்கு அடுக்களை.

நாட்கள் சென்றன.

மாணிக்கவாசகத்தின் மனைவிக்குக் கல்யாணி அம்மாள் பேச்சுத் துணைக்குக் கிடைத்தாள். தணிகாசலத்தின் பேச்சுக்குக் கௌரி. மாணிக்கவாசகத்துக்குத் தாம் அவர் மாணவன் கிடைக்கவில்லை!

''இனி நீ கௌரியுடன் பொழுது போக்கு; நம்முடைய பேச்சை மெதுவாய் வைத்துக் கொள்வோம்'' என்று அவரே விட்டுக் கொடுத்தார்.

கல்யாணி அம்மாள் மாமியார்களுக்கு ஓர் எடுத்துக்காட்டு. மகன் மீது தன் உயிரையே வைத்திருந்தாலும், அவன் உயிர் தன் மனைவியைப் பற்றிக்கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்தவள். வயதுக்குத் தக்கவாறுதானே மனிதர்கள் நடந்து கொள்வார்கள்? சாகப் போகிற ஆணுக்கும் பெண்ணுக்கும் புது மணப் பருவம்தானே மறக்க முடியாத காலம்? ஆண்டுக்கு ஒரு முறை குற்றாலத்துக்குச் சாரல் காலம் வரலாம்; மனித வாழ்க்கையில் ஒரு முறை வந்து அது சில ஆண்டுகளே நிலைத்திருக்கிறது. இதில் மாமியார் மருமகள் போட்டி என்ன? பூசல்கள் என்ன? பொறாமை என்ன? முணுமுணுப்பு என்ன?

தணிகாசலத்தின் தாயாருக்கு இப்படியெல்லாம் சொல்லத் தெரியாமல் இருக்கலாம். அவள் தன் வாழ்க்கையில் நடந்து காட்டினாள். கௌரிக்கு முறையளவில் அவள் மாமியார்; செயலளவில் தாய். மாமி அன்புத் தாயானாள்; மருமகள் அருமைப் பெண்ணானாள்.

அன்பு நிறைந்த தாயைப் பெற்றவர்களுக்கு அதிர்ஷ்டம் வேறில்லை; அதை உணர்ந்த குழந்தைகளைப் பெற்றவளுக்குச் செல்வம் வேறில்லை. உலகத்தின் துன்பம் அங்கே தூசிக்குச் சமானம்.

வழக்கம் போல் ஒரு நாள் மாலை கௌரிக்கு அலங்காரம் செய்து விட்டு அவளைத் தன் மகனுடன் வெளியில் அனுப்பி வைத்தாள் கல்யாணி. வழக்கத்தைவிட நேரமாகி விட்டது. கதவருகில் வந்து நின்று கொண்டு, அவர்கள் செல்வதைப் பார்த்துக் களித்தவாறே, ''இருட்டுவதற்கு முன்னால் திரும்பி விடுங்கள்; வழியில் பூச்சி பொட்டு அதிகம்'' என்று எச்சரித்தாள்.

''நிலாக்காலந்தானே, அம்மா!'' என்று திரும்பிச் சிரித்தான் தணிகாசலம்.

''வேண்டாம், தம்பி! ஊர்க் கண் பொல்லாதது!'' என்றாள்.

தம்பி என்றுதான் தன் மகனை அவள் அன்போடு கூப்பிடுவாள். தோற்றத்

திலும் வளர்ச்சியிலும் கிட்டத்தட்ட அவன் தம்பிதான். அண்டை அயலார், கல்யாணியிடம் ''தம்பியா?'' என்று கேட்டால், ''ஆம்'' என்றே பதில் வரும். பொருமை மிகவும் பொல்லாததாம்!

தணிகாசலம் முன்னே செல்லக் கௌரி சற்றுப் பின்தங்கிச் சென்றாள். பொற்பாவை ஒன்று உயிர் பெற்று நடை பயின்று செல்வது போல் அன்ன நடை நடந்துகொண்டு சென்றாள். கணத்துக்குக் கணம் தணிகாசலம் கௌரியைத் திரும்பித் திரும்பிப் பார்த்தான். அவள் நடந்து வரும் அழகைப் பார்த்தான். ஒடிந்துவிழுவது போலிருந்த இடையைப் பார்த்தான். கருங்கூந்தலைப் பார்த்தான். கருணை பொங்கும் கண்களைப் பார்த்தான். விசாலமான நெற்றியைப் பார்த்தான். அவன் இதயத்தில் இது வரையில் ஏற்படாத ஒரு இன்பம் பெருக்கெடுப்பதை உணர்ந்தான். அந்த இன்ப உணர்ச்சியில் தன்னை மறந்து நின்று விட்டான்.

தணிகாசலம் நின்று விட்டதைப் பார்த்த கௌரியும் நின்றாள். சட்டென்று தலையைக் குனிந்து கொண்டாள். அப்பொழுதுதான் தணிகாசலம் தான் நின்று விட்டதை உணர்ந்தான். சிரித்துக் கொண்டே, ''என்ன நின்று விட்டாய் கௌரி?'' என்றான்.

''நீங்கள் நின்றீர்கள்; நானும் நின்று விட்டேன்'' என்றாள்.

இரண்டு பேரும் ஒருவரை யொருவர் ஓரக் கண்ணால் பார்த்துக் கொண்டனர். பிறகு 'களுக்' கென்று சிரித்துவிட்டு மேலே நடக்க ஆரம்பித்தனர்.

தணிகாசலம் கௌரியுடன் ஒன்றாகக் குன்றுகளின் மேல் ஏறி நடந்தான். கௌரியின் தவிப்புக்கு அவன் கை கொடுத்து இழுக்க வேண்டியிருந்தது. சந்தடி இல்லாததால் அவன் அவளுடைய மென்கரத்தை விடவில்லை.

''எங்கே இப்படி உயரத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறீர்கள்?'' என்று பயந்து கொண்டே கேட்டாள் கௌரி. ''உங்களுக்குப் பயமாக இல்லையா?''

''மேலே போகலாம், வா!''

''எங்கே, மலை உச்சிக்கா?''

''அதற்கும் மேலே!'' என்று சொல்லித் தணிகாசலம் சிரித்தான்.

கௌரிக்கு அவன் பேச்சு பைத்தியக்காரத்தனமாகப் பட்டது.

''விளையாட்டில்லை கௌரி, எவ்வளவு உயரத்துக்குப் போகிறோமோ அவ்வளவு தூரம் உலகம் தெரியுமல்லவா?'' அவளுக்குப் புரியாத விதத்தில் அவன் பேசிக் கொண்டு வந்தான். ''அதோ பார், பச்சை வயல்கள், பாக்கு மரங்கள், படுத்துக் கிடக்கும் மலைகள்.......அடிவான விளிம்பு சிவப்பாய்த் தெரிகிறது, பார்!''



கௌரி அழுது விடுவாள் போல் தோன்றியது. தன் கணவனுக்கு அரைக்கால் வாசிப் பைத்தியமாவது இருக்கும் என்று அவளுக்கு அச்சம்.

அவனைக் கெஞ்சிக் கூத்தாடித் திரும்பவும் கீழே அழைத்துக்கொண்டு வந்தாள்.

வரும் வழியில் அருவிக் கரைப் பக்கமாக நின்று எதிரில் குளித்து விட்டு மாற்றுடையில் வரும் இருவரைக் கவனித்தான் தணிகாசலம். மங்கலான ஒளியிலும் அவன் கண்களுக்கு ஒரு ஆண் பிள்ளையுடன் ஒன்றி நடக்கும் பெண் உருவம் பளிச்சென்று தெரிந்தது. சுமார் முப்பது வயதான ஒரு அழகு நிறைந்த இளைஞருடன் செங்கமலம் நிதானமாக நடந்து வந்து கொண்டிருந்தாள்.

தணிகாசலத்தின் இருதயம் ஒருகணம் நின்று விட்டு, பிறகு இருபது மடங்கு வேகத்தில் அடித்துக் கொண்டது. 'செங்கமலம், நில்!' என்று கூவியது.

மெல்ல ஓரமாகக் கௌரியுடன் ஒதுங்கப் பார்த்தான் தணிகாசலம். அவனுடைய கால்கள் நகரவில்லை. கௌரியும் அவன் ஏன் அப்படித் தடுமாறுகிறான் என்று தெரியாமல் 'திரு திரு' வென்று விழித்தாள்.

அவர்கள் நெருங்கி விட்டார்கள். தணிகாசலத்துக்குக் 'குப்' பென்று வேர்த்தது. அதற்குள் அவளும் அவனைப் பார்த்து விட்டாள். அவள் முகத்தில் ஏற்பட்ட மாறுதலை அவனால் கவனிக்க முடியவில்லை. தன்னோடு வந்த இளைஞரை நிற்கச் செய்து விட்டுத் தணிகாசலத்தையும் கௌரியையும் அவள் மாறி மாறிப் பார்த்தாள். தணிகாசலத்துக்குப் பேச நா எழவில்லை. எதைப் பேசுவது? எப்படிப் பேசுவது? பேச வேண்டியது அவசியந்தானா? (தொடரும்)




# டாட்ஜ்

## டீசல்கள்




**தி பிரிமியர்**
**ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட்**
பம்பாய்



டீலர் :
**மெஸர்ஸ் ரானே (மதராஸ்) லிட்.**
**5, பட்டுலோஸ் ரோடு, மவுண்ட் ரோடு**
**சென்னை**

SISTA'S-PAL-286-TAM

கல்கி மாதச் சிறுகதைப் போட்டியில்

# பரிசு பெற்ற எழுத்தாளர்கள்

...ம்பர்

உடன் பிறந்தவர்கள்
- லால்குடி கிருஷ்ணமூர்த்தி

1957 ஜனவரி



'அம்மா'
- எஸ். ரங்கநாயகி

1957 பிப்ரவரி



பிரார்த்தனை
- ஸ்ரீ வத்ஸன்

1957 மார்ச்சு



சங்கராபரணம்
- ர. சு. நல்லபெருமாள்

1957 ஏப்ரல்



'ஆக்கப் பொறுத்தவள்'
- ஸ்ரீமதி ராஜம் சுபஸ்ரீ

1957 மே



நொண்டிக் குழந்தை
- ஜ. சாமிநாதன்




## மகாத்மா காந்தி நூல்கள் – 1

தமிழ்ப் பெரு மக்கள் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்த மகாத்மா காந்தி நூல்களின் முதல் தொகுப்பு இப்போது வெளியாகி யிருக்கிறது. தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில் காந்தி நூல் வெளியீட்டுக் கழகத்தார் வெளியிட்டுள்ள இந்த அரும் பெரும் நூலைப் பொதுமக்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை. இந்த முதல் தொகுப்பில், 'தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகம்', 'இந்திய சுயராஜ்யம்' ஆகிய இரு நூல்களும், தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகம் பற்றிக் காந்தி மகான் எழுதிய கட்டுரைகள், நிகழ்த்திய சொற்பொழிவுகள், அவருடைய சிறை அநுபவங்கள், சிறையிலிருந்து எழுதிய கடிதங்கள் முதலியவைவும் அடங்கியுள்ளன. இதைத் தொடர்ந்து இது போல் இன்னும் பல தொகுப்புகள் வெளியாகும். இம் முயற்சி எல்லோராலும் பாராட்டப்பட வேண்டிய புனிதமான தொண்டு. புராண, இதிகாசங் களுக்கு ஒப்பான காந்தி இலக்கியங்கள் யாவும் இத் தொகுதிகளில் இடம் பெறுமாதலால், இவை வாழையடி வாழையாகத் தமிழ் மக்களின் சந்ததிகளுக்குப் பெரிதும் பயன்படும் என்பது நிச்சயம். தமிழ் நாட்டில் உள்ள சிறந்த பத்திரிகாசிரியர்களில் ஒருவரான திரு ரா. வேங்கடராஜுலுவை ஆசிரியராகவும், பல மொழிகளில் நிபுணரும் சிறந்த எழுத்தாளருமான ஸ்ரீ த. நா. குமார சுவாமியைத் துணை ஆசிரியராகவும் கொண்டு இந்த நூல் வெளியாகியுள்ளது. எனவே, இந்த நூல் சீரிய முறையில், தனிமாகவும் அருமையாகவும் மொழிபெயர்க்கப்பட்டிருப்பது பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை.

புத்தகத்தின் இறுதியில் பொருட் குறிப்பு அகர வரிசை சேர்க்கப் பட்டிருப்பதால், எந்தச் சம்பவம் எந்தப் பக்கத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது என்பதை ஒரு விநாடியில் தெரிந்து கொண்டு விடலாம். உயர்ந்த பயிண்டு, சிறந்த காகிதத்தில் எண்ணூறு பக்கங்கள் கொண்ட இந்த மாபெரும் நூலின் விலை ரூ 7-50 தான். எல்லோரும் வாங்கிப் பயன் பெற வேண்டும் என்பதற்காகவே இந்த நூலை அடக்க விலைக்கே விற்க முன் வந்திருப்பதாகப் பதிப்புரையில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இதில் ஏராளமான படங்களும் அடங்கியுள்ளன.

கிடைக்குமிடம் ; காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு, சென்னை-2. விலை ரூ. 7-50

## காதலும் கலியாணமும்

மேற்கண்ட தலைப்பைப் பார்த்தவுடனே யாராக இருந்தாலும் புத்தகத்தை உடனே பிரித்துப் பார்க்காமல் இருக்க மாட்டார்கள். காதலைப் பற்றியும், கல்யாணத்தைப் பற்றியும் எவ்வளவு தடவைகள் படித்தாலும், எவ்வளவு தடவைகள் பேசினாலும் அலுப்பதில்லை. கல்யாணம் செய்து கொண்டு, சம்ஸார சாகரத்தில் விழுந்து கரை காண முடியாமல் தத்தளித்துக் கொண்டிருப்பவர்களுக்குக்கூடக் காதலின்மீது அலுப்புத் தட்டுவதில்லை. ஒரு ரஸமான காதல் விவகாரம் என்றால் உடனே அது என்னவென்று தெரிந்து கொள்ள ஆசை ஏற்படுகிறது. 'காதல் கதையா? அதைப் படிக்க வேண்டும்' என்ற அவா உண்டாகிறது.

இப்படி யெல்லாம் மனித உள்ளங்களை ஆட்டி வைக்கும் காதல் என்னும் அபூர்வமான சக்தியைக் குறித்தும், கல்யாணம் என்ற வாழ்க்கைக்கு இன்றியமையாத விஷயத்தைக் குறித்தும் பல பெரியார்கள் எழுதியுள்ள கட்டுரைகள் இந்தத் தொகுதியில் அடங்கியுள்ளன. ராஜாஜி, காந்திஜி, பாரதியார், கல்கி ஆகியோரின் அறிவுரைகளும், உண்மைகளும் மிகவும் பயன்படக் கூடியவை.

பிரசுரம் : தமிழகம், 52, பிராட்வே, சென்னை-1, விலை ரூ. 1

## "காமகோடி"

'மூர்த்தி சிறிது, கீர்த்தி பெரிது' என்பது காமகோடி பத்திரிகைக்குப் பொருத்தமாக இருக்கிறது. ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தின் ஆதரவில் சில ஆண்டுகளாக வெளியாகி வரும் 'காமகோடி' என்ற வாரப் பத்திரிகை உருவத்தில் சிறிதாக நாலு பக்கங்களுடன் இருந்தாலும், அதில் வரும் விஷயங்கள் மனிதரின் உயர்ந்த சிந்தனைகளுக்கு விருந்தாக இருக்கின்றன. ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் அருள் வாக்குகள், பக்திமார்க்க விஷயங்கள், விளக்கத்துடன் ஔவைப் பிராட்டியாரின் முதுமொழிகள் முதலிய பல அரிய விஷயங் களைத்தாங்கி வரும் காமகோடி பத்திரிகை மேன்மேலும் வளர்ச்சியடைந்து சமூகத்துக்குத் தொண்டு செய்வது, பொது மக்கள் அதற்கு அளிக்கும் ஆதரவையே பொறுத்திருக்கிறது.

பாரமார்த்திகத் துறையையும், பக்தி மார்க்கத்தையும், நீதி நெறியையும் பரப்பும் நோக்கத்துடன் நடக்கும் இப்பத்திரிகையின் அச்சு, அமைப்பு முதலிய விஷயங்களிலும் சிறிது கவனம் செலுத்தினால், மேற்படி பத்திரிகையின் நோக்கம் பரந்து வளர்வது எளிதாயிருக்கும். மணங்கமழும் மலரானாலும் அதை அழகாகத் தொகுப்பதனால் தானே மக்கள் உள்ளத்தைக் கவர முடிகிறது? ஆகவே கருத்து நிறைந்த பத்திரிகையான "காமகோடி"யை நல்ல முறையில் நடத்த ஆஸ்திகப் பெருமக்களின் ஒத்துழைப்பு எவ்வகையிலும் இன்றியமையாதது.

தனிப் பிரதி விலை அணா 1; வருஷ சந்தா ரூ 3; கிடைக்குமிடம்: மானேஜர், காமகோடி காரியாலயம், நெ. 24, டபீர் நடுத்தெரு, கும்பகோணம்.

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்







# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

மலரன்ன
முக வதனத்திற்கு





ரெமி ஸ்னோ & பவுடர்

இலங்கையில் கிடைக்குமிடம்: AVRA Ltd., Colombo

ரேடியோ சிலோன் :—41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 மணி வரை




அன்று ஞாயிற்றுக்கிழமை. அந்தச் சிறு கறிகாய் மார்க்கெட்டில் கூம்பல் மோதியது. பலவிதமான குரல்கள் நாலா பக்கங்களிலிருந்தும் விடாமல் ஒலித்துக் கொண்டிருந்தன:

''கத்திரிக்காய் நாலணா, ஆரணா கத்திரிக்காய் நாலணா.''

''பிஞ்சுக் கொத்தவரை, எல்லாம் பிஞ்சு, எல்லாம் பிஞ்சு.''

அந்தக் குரல்களிடையே ஒரு இளம் பெண்ணின் இனிய குரலும் கலந்து ஒலித்தது.

''வாங்கோ சாமி, முளைக்கீரை வேணுமா, வெந்தயக் கீரை வேணுமா?......''

கீரை விற்க அன்றைக்குத் தான் முதல் தடவையாக மார்க்கெட்டுக்கு வந்திருந்த வள்ளி தன் பற்கள் ஒளிவீசப் போவோர் வருவோரைக் கூப்பிட்டு அதிசய வேகத்தோடு கீரை விற்றுக் கொண்டிருந்தாள்.

இதையே சற்று நேரம் கவனித்துக் கொண்டிருந்தாள் முனியம்மா. பின்பு வள்ளியின் பக்கம் திரும்பி, ''ஏம்மா, வருகிறவங்களையெல்லாம் உன் கடைக்கே கூப்பிட்டுக்கிட்டா நாங்களெல்லாம் என்ன செய்வது?'' என்றாள்.

வள்ளியின் காதுகளில் அது விழவேயில்லை.

''உன்னைத்தான்; நீயே விற்றுக்கிட்டிருந்தால் நாங்கள் என்னத்தை விற்பதுன்னேன்.''

''என்னத்தையா, கீரையை!'' என்று சொல்லிவிட்டுக் 'களுக்'கென்று சிரித்தாள் வள்ளி.

''சிரிக்க மாட்டாயா? உன்னாலே எங்களுடைய வியாபாரமெல்லாம் கெட்டுப் போவுது!'' என்றாள் முனியம்மா.

பாவம்! அவள் என்னதான் செய்வாள்? அந்த மார்க்கெட்டில் அவளும்தான் பத்து வருஷங்களாய்க் கீரை விற்றுக் கொண்டிருந்தாள். உற்றார் உறவினர் யாருமற்ற அவளுக்கு அதுவேதான் பிழைப்பு. எழில் வாய்ந்த வள்ளி தன் கடைக்குப் பக்கத்திலேயே கடை வைத்துக் கொண்டு தன் பிழைப்புக்கு அழிவைத் தேடுவதை அவள் எவ்வாறு பொறுத்துக் கொண்டிருக்க முடியும்?

ஆனால் வள்ளியோ, முனியம்மா கூறியதைக் கவனிக்கவேயில்லை. முகத்தைத் திருப்பிக் கொண்டு கீரை விற்றவண்ணம் இருந்தாள்.

மணி ஏழு அடித்தது. வள்ளி தன்னிடம் இருந்த கீரையை விற்றுவிட்டுப் பணத்தை எண்ணித் தன் சுருக்குப் பைக்குள் போட்டுக் கொண்டாள். பின் முனியம்மாவைப் பார்த்து, ''நான் வரேன், பாட்டி! இனிமேலே நீ விற்றுக்கோ'' என்று சொக்கிச் சிரித்துவிட்டு ஒய்யார நடை போட்டுக்கொண்டு சென்று விட்டாள்.

அவ்வளவு நேரமானபின்பு முனியம்மாளால் எவ்வளவுதான் விற்க முடியும்?

★

மறுநாளும் இதே கதைதான்:

''ஏ பொண்ணு! நீ சின்னவள் என்பதற்காக எது வேணுமானாலும் செய்யலாமா? என் பிழைப்பிலே மண்ணைப் போடுறியே!''

''ஏ பாட்டி! நான் வாங்கின கீரையை நான் வித்துக்கறேன். உன் கீரையை நான் எடுத்துக்கறேனா? நான் சிரிக்கறேன், அழுவுறேன். எல்லாம் என் இஷ்டம். ஏன், நீயும் தான் சிரிச்சுப் பாரேன்!''

''என் வியாபாரத்திலே மண்ணைப் போடுறியே! நீயும் உன் பிள்ளைகுட்டியும் நல்லா இருப்பீங்களா?''

வள்ளியின் விழிகளில் அனல் பறந்தது.

''இதோ பாரு, என்னை வேணுமானால் திட்டிக்கோ, பிள்ளை குட்டின்னு ஆரம்பிச்சியோ, அப்புறம் பாரு!''

''என்ன செஞ்சிடுவே?......''

''ஏ கிழவி, என்ன அங்கே?'' என்று கேட்ட வண்ணம் அப்போது வீராசாமி அந்தப் பக்கம் வந்தான்.

வீராசாமி அந்த மார்க்கெட்டில் எட்டுக் கடைகளுக்குச் சொந்தக்காரன். வள்ளியின் கையால் கீரை வாங்க அவனும் தான் விரும்பினான்.

''என் புள்ளை குட்டி நல்லா யிருக்காதுங்கறியே? புள்ளை குட்டி பெத்திருந்தால்தானே அந்த அருமை உனக்குத் தெரியப் போவுது?'' என்றாள் வள்ளி.

வீராசாமி உடனே ஆரம்பித்தான்: ''ஏ கிழவி, மரியாதையாக ஒழுங்காக விக்கறதுன்னா வித்துக்கிட்டிரு. இல்லாவிட்டால்... கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளுவேன். தெரியுமா?'' என்று கூறி அவ்விடம் விட்டு அகன்றான்.

★

இது நடந்து ஒரு வாரத்துக்கு மேல் கழிந்துவிட்டது. வழக்கம்போல் அன்று வள்ளி கீரை விற்றுக் கொண்டிருந்தாள். அப்போது சிவந்த முகமும் சிந்திய மூக்குமாய் ஒரு சிறுமி வள்ளியை நோக்கி வந்தாள். அவளைக் கண்டதும் வள்ளி ''ஏ பொன்னி, நீயேன் இங்கே வந்தே? வீட்டைப் பார்த்துக்கொள் என்று நான் சொன்னேனே! சுத்த அழுமூஞ்சி'' என்று கூறினாள்.

''இல்லேம்மா, நாயனா வந்து அடிச்சது.''

இதைக் கேட்ட வள்ளியின் முகம் கருகியது. அவள் மனத்தில் எந்த மாதிரியான எண்ணங்கள் அலைபாய்ந்தனவோ, யார் கண்டது?

மகளைத் தன் பக்கம் இழுத்து இறுக அணைத்துக் கொண்டாள்.

அதுதான் சமயம் என்று முனியம்மாள் காலணா கொத்தமல்லி விற்றாள். அந்தக் காசை, தான் உட்கார்ந்திருந்த கோணிக்கடியில் போட்டுக் கொண்டாள்.

அப்போது பொன்னியின் கண்கள் அங்கேயிருந்த புது அரையணா நாணயத்தின் மேல் விழுந்தன. ஒரே எட்டில் அதை எடுத்துக் கொண்டாள்.

இமைப்பதற்குள் முனியம்மாளின் வலக்கரம் பளீரென்று பொன்னியின் முதுகில் ஒரு அறை வைத்தது.

''ஓ''வென்று வீறிட்டு அலறிய சிறுமியைத் தன்னிடம் இழுத்துக் கொண்டாள் வள்ளி.

''பச்சைக் கொளந்தையை இப்படியா அடிப்பாங்க? அந்த விரலும் பதிஞ்சுடுத்தே! என் மேலே இருக்கிற கோபத்தே அது மேலே தான் காட்டறதா? நீயும் ஒரு மனுஷியா?''

''நான் மனுஷி இல்லே, மத்தவங்க வவுத்துலே அடிக்கறியே, நீதான் மனுஷி; போடி! சும்மாவா அடிச்சாங்க? திருடற கையை முறிச்சில்லே போடணும்? பரிஞ்சு பேச வந்து விட்டாயே!''

உரத்த குரலில் இருவருக்கும் சண்டை ஆரம்பித்தது.

தாய் எவ்வளவு சமாதானப்படுத்தியும் மகள் அழுதுகொண்டுதான் இருந்தாள்.

''அழு அழு, நல்லா அழு. நீ அழுதுகிட்டே இருந்தால்தான் எனக்கு சந்தோஷம். ஏ வள்ளி! உன் குடும்பம் நாசமாய்ப் போகணும், நான் அதைப் பார்க்கணும். அப்போத்தான் என் வவுத்தெரிச்சல் தீரும்.''

இல்லாமையின் கொடுமை மனிதர்களின் காருண்யத்தையே அழித்துவிடும் போலும்!

அன்று வள்ளி யார் முகத்தில் விழித்தாளோ, அவளை அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி தாக்கியவாறு இருந்தது.

சிறுமியின் அழுகுரல் ஓய்ந்தது. அப்போது தள்ளாடிய வண்ணம் ஒரு வாலிபன் மார்க்கெட்டுக்குள் நுழைந்தான். ''வள்ளி எங்கே இருக்குது?'' என்றான் கைகளை ஸ்திரமில்லாமல் வீசிக்கொண்டு;

''அம்மா, நாயனா வருது'' என்றவண்ணம் பொன்னி நடுங்கிக்கொண்டு தன் தாயின் தலைப்புக்குள் புகுந்து கொண்டாள்.

வந்தவன் வள்ளியைக் கண்டதும் நின்றான். ''ஏ பொம்பளே, எவ்வளவு வைச்சிருக்கே!''

''ஒண்ணுமே சேரலே.'' மென்று விழுங்கிக் கொண்டு சொன்னாள் வள்ளி.

''பொய்யாடி சொல்லறே? கோணிக்கடியிலேதான் நிறைய வச்சிருக்கியே?''

முனியம்மா காட்டிக் கொடுத்து விட்டாள். பின் கேட்க வேண்டுமா?

கோணிக்கடியிலிருந்து பணத்தை எடுத்த போது தன்னைத் தடுத்ததற்காக வள்ளியின் முகத்தில் ஒரு அறை சன்மானம் அளித்து விட்டுப் பணத்துடன் தள்ளாடிக் கொண்டு வெளியேறினான் அந்தக் குடியன்.

முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டாள் வள்ளி. உடல் குலுங்கக் குலுங்க அழுதாள்.

இதையெல்லாம் மௌனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள் முனியம்மா. அவள் கண்களில் இருந்த கொடுமை பயங்கரமாயிருந்தது.

''என் வவுத்துலே அடிச்சியே? சாமி ஒன்னைக் கேக்குறாரு.''

வேறு ஒரு பெண் மனமுடைந்து கதறும் போது கொக்கரிக்கும் முனியம்மாவும் மனித ஜன்மம்தானா என்று எண்ணினாள் வள்ளி.

''உன் நாக்கு விஷ நாக்கு. நீ சொல்றதுக்கு முன்னே பலிக்க ஆரம்பிச்சுட்டுது. ஏ பாட்டி, நீயேன் என்னை இப்படித் திட்டினே? எனக்குச் சாபம் குடுக்கறே? நான் உனக்கு என்ன பாவம் செய்தேன்?''

கிழவி பதில் சொல்லவில்லை.

விம்மல்களும் மெதுவாகக் குறைந்தன. பின் வழக்கம்போல் கீரை வியாபாரத்தில் ஈடுபட்டாள் வள்ளி. அவள் கணவன் அவளிடமிருந்து பணத்தைப் பிடுங்கிச் சென்றால்தான் என்ன? வியாபாரம் முடிந்து வள்ளி வீட்டுக்குச் செல்லும்போது அவளிடமிருந்த பணம் முனியம்மாவிடம் இருந்ததைவிட எவ்வளவோ அதிகமாய்த் தான் இருந்தது.

*

ஒரு வாரம் கழிந்தது. அதற்குள் வள்ளியின் கணவன் மூன்று முறை மார்க்கெட்டுக்கு வந்து மனைவியிடமிருந்து பணத்தைப் பிடுங்கிக் கொண்டு போய் விட்டான்.

குடிகாரக் கணவனை மணந்த வள்ளி தன் வாழ்வில் இன்பம் காணக் கனவு கண்டு கொண்டிருந்தாள். தன் கணவனைத் திருத்த அவள் முயலாமலில்லை. ஆனால் அதில் அவள் பலன் கண்டதில்லை.

விழலுக்குப் பாய்ச்சிய நீர்போல் தன் முயற்சி வியர்த்தமாவதைக் கண்ட அவள் உள்ளம் கலவரமடைந்தது.

அவள் உள்ளத்தில் குடிகொண்டிருந்த இருளைப் பிரதிபலிப்பதுபோல் வெளியிலும் சளசளவென்று மழை பெய்து கொண்டிருந்தது. வியாபார மும்முரத்தில் சாதாரணமாகக் கவலையை மறப்பவள் அன்று வியா



பாரத்தில் ஈடுபடாமல் தன் வாழ்வைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தாள். விவரிக்க முடியாத ஒரு நிலை அவள் இதயத்தைப் பற்றிக் கொண்டிருந்தது. இருண்ட எண்ணங்கள் அவளையும் மீறி அவள் மனத்தை ஆட்கொண்டன. 'சீ, என்ன வாழ்க்கை! வாழ்வதை விடச் சாவதே மேல். உயிருக்கு உயிராகக் கருதிய பெண் ஐந்து வயதில் இருட ஆரம்பித்து விட்டாள். கணவனோ குடிகாரன். அவனை நினைத்தாலே வயிறு பற்றி எரிகிறது. அவனும் ஒரு மனிதனா? கொண்ட பெண்டாட்டியைக் கவனிக்காமல் அவள் தொண்டை கிழியக் கத்திச் சம்பாதிக்கும் நாலணாவையும் பிடுங்கிக் கொண்டு போகிறானே!'

''கிர்...ர்...ச்' என்று பிரேக் போடும் சத்தம் அவளை நினைவுக்குக் கொண்டு வந்தது. அதை அடுத்து ஒரு மனிதன் அலறுவதும் கேட்டது. ஒரு கணம் நிசப்தம் நிலவியது. பின் ஜனங்களின் கூச்சலில் விஷயம் இன்னதென்று புரிந்துகொள்வதே கஷ்டமாயிருந்தது.

திடீரென்று அவளை நோக்கி ஒரு சிறுவன் ஓடி வந்தான். ''வள்ளியம்மா! ஒன் புருஷன் லாரியிலே அம்புட்டுக்கிட்டான்.''

கீரையை அப்படியே போட்டு விட்டு வாசலுக்கு ஓடினாள் வள்ளி. ஆனால் அதற்குள் விஷயம் மனித யத்தனத்தை மீறி விட்டது.

பேயால் அறையப்பட்டவளைப் போல் மார்க்கெட்டுக்குள் மறுபடியும் நுழைந்தாள் வள்ளி. அவள் முகம் அவள் மனத்திலே சூறையாடிக் கொண்டிருந்த வேதனையைத் தெளிவாகக் காட்டியது.

அப்போதும் முனியம்மாவின் முகத்தில் அந்தக் கொடிய பார்வைதான்!

★

அடுத்த முறை வள்ளி மார்க்கெட்டுக்கு வந்தபோதே அவளுக்குக்கடுமையான ஜுரம். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஜுரத்தின் வேகம் அதிகரிக்க ஆரம்பித்தது. வள்ளியால் அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை. கீரையை அங்கேயே விட்டு விட்டுத் தன் வீட்டை நோக்கித் தள்ளாடியபடி நடந்தாள்.

மறுநாள் வள்ளி மார்க்கெட்டுக்கு வரவில்லை. முனியம்மாவுக்கு நல்ல வியாபாரம்: ''இப்படியே தினமும் நடந்துவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!'' என்று எண்ணியது அவள் மனம்.

இரண்டு நாட்கள் கழித்து மார்க்கெட்டில் ஒரு சிறு கூட்டம் கூடியது. வீராசாமி பேசினான். ''கீரை வித்துக்கிட்டிருந்த வள்ளி நேற்று வீட்டிலே இறந்து போய் விட்டாள். அதைக் கேட்க எல்லாருக்குமே வருத்தம்.''

முனியம்மா ஒன்றும் சொல்லவில்லை. ஆயிரக் கணக்கான எண்ணங்கள் அவள் மனத்தில் தோன்றி மறைந்தன.

''இப்போ நாம்ப எல்லாருமாகச் சேர்ந்து வள்ளியக்கா கொளந்தை பொன்னிக்கு ஏதாவதொரு வழி செய்யணும்.''

''ஏன் வீராசாமி அண்ணே, நீதான் அந்த வள்ளிகிட்டே அடிக்கடி பேசிக்கிட்டு, பொன்னிக்குக்கூட அடிக்கடி சாமான் வாங்கிக் கொடுப்பியே? நீதான்வளர்த்துக்கோயேன்!'' பேசியவன் 'துடுக்கு' தம்புசாமி.

''என்னால் ஒண்ணும் முடியாதுப்பா. என் சம்சாரம் சம்மதிக்க மாட்டாள்.''

''ஒன் சம்சாரத்தைக் கேட்டுக்கிட்டா பொன்னிக்கு மிட்டாய் வாங்கியாந்தே?''

வீராசாமி இளித்தான். ''நீ சும்மா இருப்பா. ஏதோ இந்தக் கொளந்தைக்கு ஒரு வழி செய்யலாம்னு எடக்கா பேசிக்கிட்டு...''

''உன்னாலேயே முடியாதுன்னு அந்த அநாதைப் பெண்ணை வளர்க்க எங்களாலே முடியுமா?...இது என்ன பாட்டி அழுவுதே?''

எல்லோரும் முனியம்மாவின் பக்கம் திரும்பினார்கள். அவள் கண்களில் நீர் மல்கியிருந்தது. எல்லோருமாகப் போட்ட கூச்சலில் பொன்னி பயந்துகொண்டு கிழவியின் அருகில் வந்து நின்றாள். தாயும் தந்தையும் இறந்ததைப் பார்த்த அதிர்ச்சி மாறாத அந்த இளம் பெண் தன்னை அவர்கள் ஒரு உபயோகமற்ற கிழிந்த செருப்புக்குச் சமானமாகப் பேசுவதைப்பற்றி என்ன அறிவாள்? கூட்டத்தில் தனக்குத் தெரிந்த ஒரே ஒருத்தியிடம் ஆம், அன்று தன்னை அறைந்த அதே கிழவியிடம் சென்று அவள் தலைப்பைப் பற்றிக் கொண்டு ஒடுங்கி நின்றாள்.



முனியம்மாவின் உள்ளம் பொங்கியது. குனிந்து பொன்னியைப் பார்த்தாள். பொன்னியின் பார்வை அவள் நெஞ்சைப் பிளந்தது. அடுத்த கணம் வாழ்வோ மரணமோ என்று அறியாத ஒருவன் வாழ்வுக்காகத் தன் இஷ்ட தெய்வத்தை ஏங்கித் துதிப்பது போலிருந்தது அந்தப் பார்வை. திடீரென்று அவள் உள்ளத்தில் ஒரு இடம் பிறந்தது.

''போங்கடா, கல்நெஞ்சக்காரப் பசங்களா! இந்தக் குழந்தையை நான் பார்த்துக்கறேன்!''

அதை அவள் சொல்லி முடித்ததும் அந்த இரு கண்களிலிருந்த கண்ணீர் மற்றும் பல கண்களுக்குப் பரவியது.

செடியை வைத்தவனுக்கு நீர் வார்க்கத்தானா தெரியாது?




# தேன்மொழியாள்

எஸ்.வி.எஸ்.

எனக்குள் ஏதோ நினைத்து மகிழ்ந்து கொண்டிருந்தேன். அப்போது ஒரு நண்பர் என் அறைக்குள் நுழைந்தார். "என்ன ஸார்! ஏதோ நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களே! நானும் ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லுகிறேன்! இந்தாருங்கள், இதை வாங்கிக் கொள்ளுங்கள்!" என்று கூறி என் கையில் கற்கண்டு கட்டியை வைத்தார்.

"என்ன சந்தோஷ சமாசாரம்?" என்றேன்.

நண்பர் "எனக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது, ஸார்!" என்று தம் மகிழ்ச்சி பொங்கக் கூறினார்.

இதற்குத்தான் கற்கண்டைக் கொடுத்தாரா என்று நினைத்துக் கொண்டே, "அப்படியானால் இந்தாருங்கள்! இந்தக் கற்கண்டை வாங்கிக் கொள்ளுங்கள்!" என்றேன்.

"என்ன! உங்களுக்கும் குழந்தை பிறந்திருக்கிறதா?" என்று வியந்து கேட்டார்.

"இல்லே! இல்லே! எனக்கு அருமையான மூன்று நண்பர்கள் நேற்று கிடைத்தார்கள். அவர்கள்தான் மிஸ்டர் பிளான்! மிஸ்டர் சோ! மிஸ்டர் வைரம்!" என்றேன்.

இதைக் கேட்டவுடன் நிஜமாகவே, 'நாம் கீழ்ப்பாக்கத்தில்தான் இருக்கிறோம்' என்ற உறுதி என் நண்பருக்கு ஏற்பட்டுவிட்டது.

இந்த மூன்று நண்பர்களும் என்னை மட்டுமா இப்படிப் பைத்தியமாக அடித்தார்கள்! நவம்பர் 10-ந் தேதி ஞாயிற்றுக் கிழமையும் அதற்கு முதல் நாளும் சென்னை மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையில் "தேன் மொழியாள்" நாடகத்தைப் பார்த்த அத்தனை ரஸிகர்களையும் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்துப் பைத்தியமாக அடித்து விட்டார்கள். நாடகம் பார்த்து விட்டு ராத்திரி படுத்துக் கொண்டால் 'மிஸ்டர் சோ!' என்று கூப்பிடுவது போலவும் 'ஓ!' என்று பதில் குரல் கொடுத்துக் கொண்டே துள்ளிக் கொண்டு ஓடி வருவது போலவும் கனவில் காட்சியளிக்கிறார்! அப்படியானால் அந்த நாடகம் எவ்வளவு சிறப்பாக இருந்திருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்!

பகீரதன் எழுதிய அருமையான காதல் கதைதான் தேன்மொழியாள். நேயர்கள் இதைக் 'கல்கி' இதழ்களில் வாசித்திருப்பார்கள்.

உயர்ந்த சாதியில், பணமும் செல்வாக்கும் நிறைந்த குடும்பத்தில் பிறந்த இளியன், தன் பண்ணையாள் மகள் தேன்மொழியாளைக் காதலிக்கிறான்; அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாக வாக்களிக்கிறான். சாதியும் அந்தஸ்தும் குறுக்கிடுகின்றன! ரத்தினம் என்ற முறைப்பையன் வேறு குறுக்கிடுகிறான். இவ்வளவு இடையூறுகளையும் தாண்டி வெற்றி கொண்டு காதலுக்கு இவ்வுலகில் அமரத்துவம் அளித்து விட்டு, தேன்மொழியாள் அமரவுலகை அடைகிறாள்! இதுதான் திரு பகீரதன் புனைந்த தேன்மொழியாள் கதை!

சாதியைப் பற்றிப் பேசுவதே சங்கடமாக இருக்கும் இந்தக் காலத்தில் இந்தக் கதையை நாடகமாக்கலாம் என்று துணிந்ததற்காக விவேகானந்தா நுண் கலைக் கழகக் கலைஞர்

மிஸ்டர் சோ    புதுப் பணக்காரர்    வைரம்    சுந்தரி

களைப் பாராட்ட வேண்டும்! தேன் மொழியாள் கதையை நாடகமாக அமைத்து வசனங்களைத் தயாரித்தவர் திரு என். வி. நடராஜன். மேடையை உத்தேசித்து மூன்று ஹாஸ்ய பாத்திரங்களை உருவாக்கியிருக்கிறார். அவர்கள்தான் மிஸ்டர் பினான், மிஸ்டர் சோ, மிஸ்டர் வைரம் என்பவர்கள்!

மிஸ்டர் சோ—ஒரு புதுப் பணக்காரரின் காரியதரிசியாக வருகிறார். அத்துடன் அப் புதுப் பணக்காரரின் அருமைப் புதல்வி சுந்தரியையும் காதலிக்கிறார். என்ன கஷ்டம்! ஆனால் சபையோருக்கு அவ்வளவும் மிகுந்த கொண்டாட்டமாக அல்லவா இருக்கிறது!

மிஸ்டர் பினான் இது காலத்துக்கேற்ற பாத்திரம். இவர் கல்லூரி மாணவர். நமது சர்க்காரின் ஐந்தாண்டுத் திட்டங்களில் அபார நம்பிக்கை கொண்டவர். ''திட்டத்தின் வெற்றியே நாட்டின் செழுமை'' என்ற குறிக்கோளை ஓயாமல் ஜபிப்பவர்! அத்துடன் எல்லாருடைய வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்களிலிருந்தும் விடுபடுவதற்குத் திட்டங்கள் புதிது புதிதாகத் தயாரித்துத் தருபவர்.

மிஸ்டர் வைரம்—பண்ணையார் வீட்டு வேலையாளா, சொந்தக்காரரா, தத்துப் புத்திரரா என்று புரிந்து கொள்ள முடியாதபடி உரிமை கொண்டாடி நடிப்பவர். அவருடைய நடிப்பு, அபாரமான நடிப்பு.

இவர்கள் எல்லாம் நடிக்கும்போது ஏதோ வசனத்தை மனப்பாடம் செய்து நடிப்பதாகவே தெரியவில்லை. அவ்வப்போது சர்வ சாதாரணமாக மனசில் தோன்றியதைப் பேசுகிறார்கள் என்ற பிரமையே ஏற்பட்டது.



சித்தமல்லி பண்ணையார்

சித்தமல்லி பண்ணையாராக இந்தக் கதையை நாடகமாக அமைத்த நடராஜன் அவர்களே நடித்தார். அவர் நடிப்பு மிக உன்னதமான நடிப்பு!

பொதுவாக, பெண் வேஷத்தை ஆண்கள் போட்டுக்கொண்டால் சோபிக்காது என்பது யாவரும் அறிந்த உண்மை. ஆனால் இந்த நாடகத்தில் சுந்தரியைப் பார்த்தவர்கள், இவர் பெண்ணென்றே மயங்கி விட்டார்கள். இந்த நாடகத்துக்குத் தலைமை வகித்த பேராசிரியர் டாக்டர் மு. வரதராசன் அவர்களே அப்படி மயங்கிப் போனார் என்று அவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்த திரு பகீரதன் கூறினார்; வேஷப் பொருத்தம் மட்டும் அமையாமல், பாவனை, பேச்சு, நடிப்பு எல்லாமே பெண்ணுக்கு ஏற்றபடி அமைந்திருந்தன! மொத்தத்தில் இந்த நாடகத்தில் யார் சோடை என்று சொல்ல முடியாமல் எல்லாருமே நன்றாக நடித்தார்கள்!

பெரும்பான்மையானவர்கள் கல்லூரி மாணவர்கள்; மற்றவர்கள் வக்கீல்களாகவும் மற்ற உத்தியோகங்களிலும் ஈடுபட்டிருப்பவர்கள்! இவர்கள் ஏன் இந்த நாடகத்தைப் போட்டார்கள் என்று யோசித்தேன்!

கதையின் உயர்ந்த லட்சியமும் நாடகக் கலையில் அவர்களுக்குள்ள ஆர்வமுமே இந்த நாடகத்தை நடிக்க உந்தியிருக்க வேண்டும்.

நகைச்சுவையும் உணர்ச்சியும் நிறைந்த இந்த நாடகத்தைப் பார்த்து முடித்த பின் கலைத்தேவி தமிழகத்தை உயர்ந்த நிலையில் கொண்டு வைத்து நமக்கு உலகமெங்கும் நல்ல புகழைத் தேடித் தர முடிவு செய்து விட்டாள் என்ற உறுதிதான் ஏற்பட்டது.

மிஸ்டர் பினான் மாணிக்கம் தேன்மொழியாள் இனியன் பண்ணையாள்

# ஒரு தரம்... இரண்டு தரம்... மூன்று தரம்!

"கட்டில் மெத்தை . . . இருபது ரூபாய் . . . முதல் தரம் . . . !"

இந்தக் குரல், சில்லறை வியாச்சிய நீதிமன்ற காம்பவுண்டுக்குள் தழைத்திருந்த வேப்ப மரத்தடியிலிருந்து ஒலித்தது. நட்ட நாள் முதலாக கச்சேரியின் ஏலச் சாவடியாகப் பயன்பட்டு, எத்தனையோ ஓட்டாண்டிகளுக்கும் ஓட்டை உடைசல்களுக்கும் விடை கொடுத்தனுப்பிய மரம் அது. இன்று பிற்பகல் அம் மரத்தடியில் டெபுடி நாஸர் மேற்பார்வையில், டவாலிச் சேவகன் ஏல மந்திரங்களை ஓத, திருவாளர் சபாபதியின் சாமான்களுக்கு இறுதிக் கடன்கள் நடந்தேறலாயின.

வேறு அலுவலில் வந்துவிட்டுத் திரும்பிய ரிடயர்ட் நீதிபதி ஸ்ரீ சச்சிதானந்த யோகியார் கூட்டத்துக்குள் எட்டிப் பார்த்து என்னவென்று விசாரித்தார். "ஸ்வாமிகளுக்குத் தெரியாதா? மளிகைக் கடைக்காரருக்கு ஆயிரக் கணக்கில் பாக்கி வச்சான் சபாபதி. கடைசியா, வாதியே கோர்ட்டு அமீனாவோட போய் சாமான்களை ஜப்தி பண்ணினான்," என்று விவரித்தார், தன் மகனுடன் நின்றுகொண்டிருந்த உள்ளூர்ப் பிரமுகர் செல்வரங்கம். "பாவம், ஏழை!" என்றது ஒரு குரல். "ஏழையாவது! ஓசத்தி ஓசத்தியா சபாபதி சாப்பிட்டு வந்ததுபோல நீங்களும் நானும் சாப்பிட்டிருக்கமாட்டோம்" என்றார் பிரமுகர்.



"பலன் என்ன? அதோ பாருங்க சோஞ்சலா சபாபதியை! உடம்பு எலும்புகளை நீங்களே எண்ணிவிடலாம்!" என்றார் ஒருவர். உடம்பு எலும்புகளை எண்ண முற்படாமல் யோகியார் கூறினார்: "செல்வம் இழப்பதைக் காட்டிலும் ஆரோக்கியம் இழப்பதே அதிக கஷ்டம் — ஏழையொருவனுக்கும் ஆரோக்கியமே அழியாத சொத்து!"

ஏலத்தில் போன கட்டில் மெத்தைக்கும், அடுத்த அம்சமான வெள்ளித் தட்டுக்களுக்கும் போட்டி அதிகம் இருக்கவில்லை. நீதிபதி ஆசனத்தில் அமர்ந்திருந்த காலத்தில்கூட யோகியார் அவற்றை உபயோகித்திராதவர். எளிய வாழ்க்கை வாழ்பவர்; சட்ட ஞானத்திற்கு ஈடாக ஆத்ம ஞான நூல்களும் பயின்றவர்; அன்றாடம் அதிகாலையில் எழுந்து சூரிய நமஸ்காரம் செய்து, பிறர் கையை எதிர்பார்க்காமல் தாமே சந்தை சென்று சாமான் வாங்கி, திட்டமிட்டு உண்பவர். வாழையிலையில் உணவருந்தி, கோரைப் பாயில் படுப்பவர். அத்தகைய யோகியாரைத் தாங்களும் பின்பற்றுவதாகப் பாசாங்கு செய்தவர்கள் அக் கூட்டத்திலிருந்தனர். கட்டில் மெத்தைக்கும் வெள்ளித் தட்டுக்களுக்கும் அவர்கள் போட்டி போடவில்லை.

"நானு தரையில்தான் படுப்பேன், தையல் இலையில்தான் சாப்பிடுவேன் பல்லாயிரக்கணக்கான பாட்டாளி மக்களைப்போல . . ." என்றார் தேர்தலுக்கு நிற்பவரான அபேட்சகர் அனந்தசாமி.

"நம்பிவிடாதீர்கள். இது தேர்தல் கழைக்கூத்து!" என்று எச்சரித்தார் பிரமுகர் செல்வரங்கம்.

"ரெண்டாந் தரம் . . . ரெண்டாந் தரம் . . . ரெண்டாந் தரம் . . ." என்று பலதரம் ஓலமிட்டான் ஏலக்காரன்.

ஒருவர்: "இவ்வளவு சாமான்களும் சபாபதியினுடையதாயிருக்குமோ?"

செல்வரங்கம்: "ஏன்? என்னுடைய சாமான்கள் கலந்து சபாபதியின் வீட்டில் சிக்கியிருந்தன. அப்படியே அமீனா மூலமாக கோர்ட்டுக்குப் பயணமாகி விட்டன. கடைசியாக, கோர்ட்டாருக்கு மனுப்போட்டு, வக்கீல் பீஸும் ஸ்டாம்பு கட்டணமுமா பத்து ரூபாய் அழுத பிறகு தான் எல்லா சாமான்களும் திரும்பி வந்தன."



செல்வரங்கத்தின் மகன்: "எல்லாம் திரும்பி வாங்கிக் கிடலையே அப்பா, அந்த வனஸ்பதி டின் . . ."

சட்டென்று மகனின் மண்டையில் குட்டி, வாயை மூடிக் கொள்ளச் சொன்னார் பிரமுகர். இதே சமயம், பேச்சைமா அடையாளமிட்ட டின் ஒன்றை யெடுத்து ஏலத்துக்கு விட்டான் சேவகன்:

HVM. 314A-X29 TM

"உயர்தரமான தாவரக் கொழுப்பு... சுத்தமான புத்தம் புதிய தாவரக் கொழுப்பு... டால்டா வனஸ்பதி... 10 பவுண்டு டின்...!"

செல்வரங்கம்: "என்ன அனந்தசாமி! தரையிலே உமக்குப் படுக்கை, தையல் இலையிலே சாப்பாடு; வாங்குங்களேன டால்டா!"

அபேட்சகர்: "மன்னிக்கவும். நான் டால்டா வாங்குவது சிக்கனத்துக்காக அல்ல, போஷாக்குக்காக. அவ்வளவு உயர்ந்த பொருளுக்கு இவ்வளவு மட்டமான விலை கொடுப்பதா என்றுதான் தயங்குகிறேன்."

செல்வரங்கம்: "அகப்பட்டுக்கிட்டீரா! நீரும் டால்டாவின் ஆதரவாளர், இல்லையா? மக்களுக்கு அதைக் கொடுக்கும் அழகான திட்டத்தை வைத்துக்கொண்டா ஓட்டுக்கேட்க வருகிறீர்கள்? மக்களின் கவலைக் கெடுத்துவிடக் கூடிய உங்கள் அழகான திட்டத்தை நாங்கள் தாங்க வேண்டுமா? தைரியமுண்டானால் சச்ச மரச் சின்னத்துடன் தேர்தலுக்கு நின்று பாருங்க..."

பல குரல்கள்: "...ஒரு ஓட்டுகூட விழாது!...டெபாசிட்டை இழப்பீர்!..."

எதிர்ப்பும் கலவரமும் மூண்டு, ஏல விலை ரூபாய் மூன்றோடு நின்றுவிட்டது. "நானும் வனஸ்பதி உபயோகிப்பதில்லை. இந்த டின் செல்வரங்கம் அவர்களுடையது!" என்று திடீரெனக் கூறினான் சபாபதி. பிரமுகரின் மகனும், "நம்முடையதுதானே அப்பா!" என்று கூவவும், எதிர்ப்பாளராக உறுமிக் கொண்டிருந்த செல்வரங்கத்தின் நாடி ஒடுங்கிப்போயிற்று. டெபுடி கலெக்டர் மேஜையைத் தட்டி அமைதியாக இருக்கும்படி கோரினார். இச்சமயம் ரிடயர்ட் நீதிபதி யோகியார் இரண்டொரு வார்த்தை கூற விரும்பவே, அமைதியோடு அனைவரும் ஒத்துக்கொண்டனர். யோகியார் கூறலானார்:

"மெய்யன்பர்களே! இறைவன் அருளால் இன்று எனக்கு தேகதிடன் இருப்பதாக நம்புகிறீர்களா? ஆம் என்கிறீர்கள். நல்லது. அப்படியானால் அதன் புண்ணியம், என்னைப் போஷித்துவரும் பச்சைக் கறிகாய்கள், கனிகள், பால், அதோடு கொழுப்புச் சத்து முதலியவற்றைச் சாரும். அசல் நெய்யோ கிடைப்பதரிது. கிடைத்தாலும் அதிக விலை என்பதை நன்குணர்ந்த உங்களுள் நானும் ஒருவன்தான்; ஆயினும், பற்பல கடைகளில் திறந்தபடி தூசிபடிய விற்கும் எண்ணெய்கள் எல்லாம் உங்களுக்குத்தான் என்று கருதியவன் அல்ல! போஷாக்கு, பரிசுத்தம் — இரண்டின் பெயராலும், செல்வரங்கம் அவர்களும் நானும் தேர்தெடுக்கும் தாவரக் கொழுப்பு ஒன்றேதான், ஏன்; எங்களிருவருடைய தேகமும் கூச்சமின்றி சாட்சி கூறுகிறதே. தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடாதா? ஆம். டால்டா வனஸ்பதியில் ஆரோக்கியம் இருக்கத்தான் செய்கிறது. நோய் நொடிகள் வாராமல் பாதுகாக்கவல்ல வைடமின் 'ஏ' நெய்யிலுள்ள அளவு டால்டாவிலும் உள்ளது. பற்களுக்கும், எலும்புகளுக்கும் உறுதிதரும் வைடமின் 'டி'யும் டால்டாவில் இருக்கிறது. டால்டாவில் சமைக்கப்படும் எந்தப் பண்டமும் குன்றாத சுவையுடன் பரிமளிப்பது உண்மையே..."

அபேட்சகர்: வாஸ்தவம். நல்ல பண்டமாக இல்லாவிட்டால் அரசாங்கம் அனுமதிக்குமா? வருஷத்துக்கு 2 கோடி டால்டா டின்களைத்தான் ஜனங்கள் வாங்குவார்களா?

யோகியார்: புதிதாக நான் ஏதும் சொல்லிவிடவில்லை. பொது ஜனங்களாலே நீங்கள் அளித்த தீர்ப்புத்தான்! நீங்கள் உணவருந்தும் இடம் வெள்ளித் தட்டோ, வாழையிலையோ — ஆரோக்கியமான உணவில் முக்கியமான பங்கு என்றுமே டால்டா வனஸ்பதிக்கு உண்டு!"

* * * *

ரிடயர்ட் ஜட்ஜ் அவர்கள் வழங்கிய தீர்ப்பை ஏற்றுக் கொண்டதற்கு அறிகுறியாக கூட்டத்திலிருந்த அனைவரும் தலையை அசைத்து மௌனமாக இருந்ததைக் கண்ட அபேட்சகரின் முகத்தில் வெற்றிக்களை மலர்ந்திருந்தது!

HVM. 314B-X29 TM




## 40. கடிதமும் கேள்வியும்

நேயர்கள் எழுதும் கடிதங்களைப் பார்த்தால் இப்பூவுலகை - உலகம் என்பதற்குப் பதிலாகப் பலகம் என்று அழைக்கலாமெனத் தோன்றுகிறது. பூ உலகம் என்பதையும் மாற்றி முள் உலகம் என்று அழைக்கலாகாதா? என்றும் நமக்குத் தோன்றுகிறது.

'ஸாக்லே ரெண்டு பேக்லே ரெண்டு' என்ற நியாயத்தை யொட்டி மேற்சொன்ன இரண்டுபதங்களையும் சேர்த்து 'முட் பலகம்' என்று அழைக்கலாமென்றும் ஒரு எண்ணம் எழுகிறது.

''ஸ்ரீஹரியவர்களே! உமக்கென்ன வந்துவிட்டது? சற்றே பொறும். அடுத்த ஸ்புட்னிக்கில் உம்மை ஏற்றிச் சந்திர மண்டலத்தில் நிரந்தர வாசத்துக்கு அனுப்பி வைக்கிறேன்'' என்கிறீர்களா?

அங்கே சென்றாலும் ''சுக்கும் திப்பிலியும்...புராண மிளகும் காயம் கருஞ்சீரகம்......'' என்று ஆரம்பிக்காமல் இருந்து விடுவேனா?

நீங்களே பாருங்கள், மதுரை நண்பர் ஒருவர் கடிதம் 336-ல் என்ன கேட்டிருக்கிறார், தெரியுமோ? கேள்விகள் கேட்பது கேள்வியாகத்தானே இருக்கும் என்கிறீர்களா? அதுதான் இல்லை. அது ஒரு கேள்வித்தாள். பதினைந்து கேள்விகள் கேட்டிருக்கிறார். கேள்விகள்தான் எப்பேர்ப்பட்ட கேள்விகள்!

உயர்தரப்பட்ட அரசாங்க உத்தியோகங்களுக்குச் சிப்பந்திகளைத் தேர்ந்தெடுக்க, உத்யோகத்துக்கு மனுப்போட்டவர்களை நேரில் சந்தித்துச் சில கேள்விகள் கேட்டு, மனுதாரரின் மேதா விலாசத்தை ஒரு சில நிமிஷங்களில் நிச்சயித்து விடும் குழுவினருக்கு அனுப்பக் கூடிய தரத்தில் சில கேள்விகள், பிரஸ்தாப நண்பரின் கடிதத்தில் இருக்கின்றன. உதாரணமாக,

1. நெற்பொரி என்பது என்ன?

2. கற்பூரம் என்பது சூடனைத்தானே குறிக்கிறது?

5. சர்க்கரை, பூராச் சர்க்கரை, நாட்டுச் சர்க்கரை, சீந்தில் சர்க்கரை, வெல்லம், பழைய வெல்லம், கருப்பஞ்சாறு, இவை எதை எதைக் குறிக்கின்றன? விளக்குக.

12. ஒரு வராகனெடை என்பது எவ்வளவு? நல்லெண்ணெய் ஒரு வீசை என்பது எவ்வளவு அளவு?

15. ............மாதுளை ரஸம் எவ்வாறு உண்டாக்கிக் கொள்வது?

இந்தமாதிரி கேள்விகள் கேட்டால் என்ன செய்வது? ''அட விதியே!'' என்றுதான் எண்ண வேண்டும். கேள்விகளில் சிலவற்றுக்குக் கட்டுரையளவு நீண்ட பதில் எழுதியாக வேண்டும். இது கடிதத்துக்குப் பதிலாகுமா?

'கல்கி'யில் வெளியாகியுள்ள கட்டுரைகளில் விளங்காதவற்றுக்கு விளக்கம் கேட்கலாம். ஏதோ தமது சுகவீனத்தைத் தெரிவித்து அதற்கு என்ன மருந்து கொடுக்கலாம் என்று ஆலோசனை கேட்கலாம். இதற்கெல்லாம் பதில் எழுதக் கடமைப் பட்டிருக்கிறேன். ஆகவே இவற்றைத் தவறாமல் செய்வேன். இதைத் தொடர்ந்து. ''அந்த மருந்தை எப்படிச் செய்வது என்பதையும் விளக்கி எழுதுங்கள்'' என்று கேட்கக் கூடாது. இவ் விஷயம் உரிய காலத்தில் கல்கியில் பிரசுரிக்கப்படும். அதற்கு முன்பே எனக்காக ஒரு தரம் எழுதியனுப்புங்கள் என்று நண்பர்கள் கேட்டால் அதைச் செய்யமுடியுமா? இப்படித்தான் ஒவ்வொருவரும் கேட்பர். அப்போது...? ஆளுக்கு ஒரு குட்டுக் குட்டினால் அடியேன் தலை என்னாவது?

கடிதம் 348ல் போபால் தங்கச்சி சமர்த்தாகச் சில கேள்விகள் கேட்டிருக்கிறாள். இக் கேள்வி மனத்துக்குச் சந்தோஷத்தையும் உற்சாகத்தையும் ஒருங்கே அளிக்கிறது.

இச்சகோதரி இன்னும் ஆறு மாதங்களில் (ஒரு பெண் குழந்தைக்கு!) தாயாகப் போகிறாள்.

''1-9-57 கல்கியில் முக்கனி சகோதரிக்குத் தாங்கள் அளித்துள்ள பதில் தற்சமயம் எனக்கும் மிகவும் உபயோகமாயுள்ளது. சமயத்தில் வரப்பிரசாதம் போல் பிரசுரித்த தங்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்...'' என்று எழுதுகிறாள்.

இவ்விதம் ஒரு சகோதரி எழுதுவதைக் காண்பதைவிட ஆனந்தம் என்ன இருக்க முடியும்?

''தங்கச்சி! உன் நன்றியை நீ எனக்குச் சொல்லக் கூடாதம்மா. நான் என் கடமையைச் செய்தேன். தெரிவிப்பதானால் உன் நன்றியைக் 'கல்கி'க்குத்தான் தெரிவிக்க வேண்டும்.''

''மேலும்'' என்று தொடங்கித் தனக்குத் தற்போதிருக்கும் சில சுகவீனங்

கனைத் தெரிவித்து, "இதனால் தற்சமயம் மூன்று மாதம் முடிகின்ற எனக்குக் கெடுதல் ஏதாகிலும் உண்டாகுமா? பயமில்லையே? பதிலை நேரிடவோ கல்கியின் மூலமோ தெரிவிக்கவும்" என்று எழுதுகிறாள். தான் படும் கஷ்டத்தைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் இதனால் தன் வயிற்றிலுள்ள மக(ளு)வுக்குக் கெடுதல் ஏதும் ஏற்படலாகாது என்பது தான் சகோதரியின் கவலை.

ஜென்மம் எடுத்த ஒவ்வொருவனும் ஒரு தாயின் மகன்தான். மெய்யோ—பொய்யோ என்றிருக்கும் நாள் முதல் ஒவ்வொரு நிமிஷமும் சூலுற்ற அன்னை - தன் மகவுக்காக எவ்வளவு கவலைப்படுகிறாள் என்று தெளிய இந்த உதாரணம் போதுமே. தன் தேக நிலை பற்றிக் கவலை இல்லை, கர்ப்பத்திலுள்ள கருவைப் பற்றி—அதன் க்ஷேமத்தைப் பற்றி—அதன் வளர்ச்சியைப்பற்றித்தான் கவலை.

இப்படிச் சிறிதும் தன்னலமென்பதே இல்லாது—தான் படுங் கஷ்டத்தைப் பொருட்படுத்தாது, அந்தி பகலாய்ப் பரனை ஆராதித்து—முந்நூறு நாளும் சுமந்து பெற்றெடுக்கும் அன்னைக்குத் தான் பட்ட கடனை எவனால் தீர்க்க முடியும்? இந்த நினைவு நம்முள் என்றும் நிலைபெற்றிருக்க அருளும்படி ஸ்ரீராமச் சந்திரனின் கருணை பெருக வேண்டும்.

தங்கச்சி! உனக்கு ஒரு சுகவீனமும் இல்லை, அம்மா. இப்படி யெல்லாம் ஏதாவது சின்னச் சின்ன உபாதைகள் வருவது இக் காலத்தில் இயல்பு.



தான்வந்தர குடிகையில் இரண்டைச் சிறிது சிரக கஷாயத்தில் கரைத்து, தினம் இரண்டு வேளை ஆகாரத்துக்குப் பிறகு சாப்பிட்டு வா. தான்வந்தரதைலத்தை உடம்புக்கெல்லாம் தாராளமாய்த் தடவிக் கொண்டு சற்று நேரம் ஊறி இளஞ்சூடான நீரில் தினந்தோறும் குளித்து வா. அடிக்கடி மூத்திரத்தில் 'ஆல்புமின்' இல்லாமல் இருக்கிறதா என்று பரிசோதிக்கச் செய்து வா. எல்லாவற்றுக்கும் மேலாக, உடனே நீ புறப்பட்டுப் பிறந்த வீட்டுக்கு வந்திருப்பது அவசியம். உரிய காலத்தில் குழந்தையும் கையுமாகப் புக்ககம் போய்ச் சேரலாம். போதுமா, அம்மா?

கடிதம் 352-ல் பம்பாய் நண்பர் எழுதியிருப்பதும் மேற்சொன்ன இனத்தைச் சார்ந்ததாகும்.

"......பலவித கவலைகளுக்கிடையே விவரமாகப் பதில் எழுதியதற்கு......... தங்கள் பதிலைப் பார்த்த பின்னர் பாதி உயிர் வந்தது......2 நயாபைஸா தபால் பில்லை அதிகம் ஒட்டியுள்ளதையும் கவனித்தேன்...... "எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கள், விழுமந் துடைத்தவர் நட்பு" என்ற பொய்யா மொழியின் வாக்குப்படி......ஏதோ ஏழையின்பால்......அன்புகூர்ந்து வழிகாட்டாவிடின் வேறு கதி ஏது? பணம் செலவழிக்கவோ வகையில்லை. "கல்கி"யின் வாயிலாகத் தங்கள் உதவி கிடைத்ததற்கு......தக்க காலத்தில் தங்கள் பதில் கிடைத்ததற்கு......"

இப்படி எழுதும் நண்பருக்குக் கண் விஷயமாய் ஏதோ ஆலோசனை தெரிவித்தேன். அவ்வளவுதான். அவர் நோயை நான் வாங்கிக் கொண்டேனா? இல்லை. ஆயினும் அவருக்கு ஏற்பட்ட ஆறுதல் அத்தன்மையது.

கடிதம் 355-ல் செய்துங்கநல்லூர் நண்பர் எழுதுவதையும் நேயர்களுக்குச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

"தங்கள் கடிதப்படி....நான் மதுரை சென்று விட்டேன். பிறகு ஒரு நண்பர் மூலம் மேற்படி பச்சிலையைப் பெற்றுப் பக்குவம் செய்து நெ. 1, ஜெல்டின் காப்ஸ்யூலில் வைத்து 16-ந் தேதி முதல் தினம் ஒரு காப்ஸ்யூல் வீதமும் 21ந் தேதி முதல் தினம் இரண்டு காப்ஸ்யூல் வீதமும் சாப்பிடுகிறேன். இன்று (23ம் தேதி) மூத்திரத்தைச் சோதித்ததில் சர்க்கரை இல்லை. மறுபடியும் அது தோன்றாமல் இருக்கிறதா என்று வாரா வாரம் மூத்திரத்தைப் பரிசோதித்து வந்து தகவலைத் தெரிவிக்கிறேன்......"

"திரிசோசிராதி தைலம் தலைக்கு உள்ளதற்கும் உடம்புக்கு உள்ளதற்கும் தயார் செய்ய ஜாபிதா அனுப்பினால் மேற்படி தைலத்தை இவ்விடம் தயார் செய்து கொண்டு உபயோகிக்கிறேன்......"

நண்பருக்கு இருந்த வியாதி பிரமேகம். சாப்பிடச் சொன்ன - சாப்பிட்ட பச்சிலை சிறுகுறிஞ்சான். கைகால்களி லுள்ள எரிச்சல், மதமதப்பு முதலியவை போக, திரிசோசிராதி தைலத்தை எண்ணெய்க் குளிக்கு உபயோகித்து வரும்படி எழுதியிருந்தேன். பலனை நேயர்கள் அறிய வேண்டும் என்பதற்காகவே இதை வெளியிட்டுள்ளேன்.

கடிதம் 371ல் ஸ்ரீநிவாசபுரம் சகோதரி எழுதியுள்ளது மிகவும் நல்ல செய்தி. அ-வ-சி-ய-ம் நேயர்கள் அறிய வேண்டியது.

சகோதரிக்கு எக்ஸிமா இருந்தது. "முதலில் எனக்கு அது எக்ஸிமா என்று தெரியவில்லை. நான் இருக்கும் ஊரில் ஆஸ்பத்திரியோ வைத்தியரோ கிடையாது. நான் ஏதோ கொப்பளம் என்று நினைத்தேன். பூச்சிக்கடி என்று மந்திரித்தோம். நான்கு தினங்களுக்குப் பிறகு சிறிது குணம். அந்த நான்கு நாட்களும் அரிப்பு. சொறிந்தால் இதமாய் இருக்கும். பிறகு எரிச்சல். மறுநாள் கொப்பளம். அதிலிருந்து நீர் கசிவு. வறட்சி. நடக்க முடியாமல் அவஸ்தை. இது தாங்காமல் தலைவலி ஜுரம் எல்லாம் வந்துவிட்டன. பிறகு கொஞ்சம் குணம். அடுத்த மாதம் இதேமாதிரி வந்துவிட்டது. எல்லோரும் இஞ்செக்ஷன் செய்து கொள்ளச் சொன்னார்கள். நான் இருக்கும் ஊரிலிருந்து பக்கத்து ஊருக்குப் போய் இஞ்செக்ஷன் செய்து கொள்ள வேண்டும். எனக்கு மனித சகாயமே கிடையாது. கால் வலி, வீக்கம், சுரத்துடன் வீட்டு வேலைகளைச் செய்ய மிகவும் கஷ்டப்பட்டேன். நீங்கள் சொல்லியபடி மாணிபத்ரகுடம் என்னும் லேகியமும், மேல் பூச்சுக்குச் சீமை அகத்திப் பழுப்பு, குப்பைமேனி, அவரை, பூவரசு முதலிய பழுப்புக்களின் இடித்துப் பிழிந்த ரசமும் இதற்குச் சம பாகம் வேப்பெண்ணெய் இவற்றைக் கூட்டி இரண்டு தினங்கள் வெய்யிலில் வைத்து உபயோகப்படுத்தினேன். அதில் ஆச்சரியப்படும் வகையில் குணம் இருந்தது. பிறகு தினமும் இரவில் படுக்கப் போவதற்குமுன் தடவி வந்தேன். எக்ஸிமா அறவே நீங்கிவிட்டது."

தற்போது இச்சகோதரியின் காலில் எக்ஸிமா இருந்த இடத்தில் வடு-தழும்புகூட இல்லை.

ஆமாம். இது மறுபடியும் வராதா? வரக்கூடாதா? என்று கேட்கிறீர்களா?

எந்த வியாதிக்குத்தான் இவ்வித உத்தரவாதம் அளிக்க முடியும்? எந்த வைத்தியன்தான் அளிக்கக்கூடும்? வந்தாலும் இந்த மருந்துதான் இருக்கிறதே!

மொத்தத்தில், வைத்திய வசதியில்லாத ஊரில், அங்கு கிடைக்கும் மூலிகைகளைக் கொண்டே பிணியைப் போக்கிக் கொள்ள முடியும்; இதை நம் சகோதரிகளே வேண்டுமானாலும் செய்துகொள்ள முடியும்; இவ் விஷயங்கள் இதனால் தெளிவாகின்றன. இவ்வித வசதிதான் இன்று நமக்கு மிக அவசியமாகவும் உடனடியாகவும் வேண்டியது. இத் தேவையை ஓரளவாவது பூர்த்தி செய்ய முடிந்ததற்குச் சந்தோஷப்பட வேண்டாமா?

இச்சகோதரி இன்று தன் வீட்டைச் சுற்றியுள்ள விஸ்தாரமான தோட்டத்தில் பற்பல மிகப் பிரயோசனமான மூலிகைகளைப் பாத்தி பாத்தியாகப் பயிரிட்டு வருகிறார்.

தான் பயிரிடும் பச்சிலைகளின் பட்டியலொன்றை அனுப்பி, "இவற்றில் உங்களுக்குத் தேவைப்பட்டது இருந்தால் அனுப்புகிறேன். அடுத்துள்ள காட்டிலிருந்து வேறு பச்சிலைகளையும் சேகரித்து அனுப்புவதற்கு முடியும்" என்று தெரிவிக்கிறார்.

சகோதரி! உடன் பிறந்தவளுக்கு அங்கமணி யெடுக்கப் பிறந்தவளம்மா நான். உன்னிடமிருந்து உதவி பெறுவது பசுமாட்டைக் கட்டி ஏர் உழுவது போன்ற பாவமல்லவா? (தொடரும்)

## கதை, கட்டுரை, கவிதை அனுப்புவோருக்கு

1. நமது பத்திரிகைக்கு அனுப்பப்படும் கதைகள் எழுதியவரின் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்.

2. நல்ல காகிதத்தில் இடையீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறுபக்கத்தில் எழுதக் கூடாது.

3. தேர்ந்தெடுக்கப்படாத கதை, கட்டுரை, கவிதைகளைத் திரும்பப்பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

4. கதை, கட்டுரை, கவிதை சம்பந்தமாக எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

ஆசிரியர், கல்கி.

# நர்ஸ் காஞ்சனா

ஸ்ரீவத்ஸன்



சாந்தத்துக்கும் பொறுமைக்கும் உறைவிடமாக இருந்த டாக்டர் நந்தகுமார் கடந்த இரண்டு மாத காலமாகவே சீறி விழலானார் நர்ஸ் காஞ்சனாவிடம்.

காஞ்சனாவுக்கு அவருடைய மன நிலைமை புரியாமல் இல்லை. ஆனால் உணர்ச்சி வசப்பட்டு அவர் எதையும் செய்துவிடாதபடி அவளது கடமைஉணர்ச்சி தான் அதை அடக்கி வந்தது.

''நர்ஸம்மா! சேர்மன் வீட்டிலே கூட்டியாரச் சொன்னாங்க'' என்று ஒரு ஆள் வந்து கூப்பிட்டான்.

டாக்டர் நந்தகுமார் தம்முடைய 'கன்ஸல்டிங்' அறையில் உட்கார்ந்துகொண்டு ஒரு மருத்துவ சஞ்சிகையைப் புரட்டிக் கொண்டிருந்தார். ஆள் வந்து கூப்பிட்டது அவர் காதிலும் விழுந்தது.

''போய் வரட்டுமா?'' என்று கேட்டாள் காஞ்சனா.

அவர் பதிலே பேசவில்லை.

அவர் வேண்டுமென்றே பேசாமல் இருக்கிறார் என்பதை அவள் அறியாமல் இல்லை.

''சேர்மன்வீட்டில் கூப்பிடுகிறார்கள். போய் வரட்டுமா?'' என்று மறுபடியும் கேட்டாள் காஞ்சனா.

''எங்கே வேண்டுமானாலும் போய் வரலாம். நான் யாரையுமே எப்பொழுதுமே தடுத்ததில்லை; தடுக்கிறதில்லை; தடுப்பதுமில்லை.'' மூக்காலம் பேசினார் டாக்டர் நந்தகுமார்.

மருந்துப் பெட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள் நர்ஸ் காஞ்சனா.

★

வழி நெடுக மனப் போராட்டம்:

கடந்த இரண்டு மாத காலமாகவே நந்தகுமார் அவளிடம் ஏன் காரணமில்லாமல் சீறி விழ வேண்டும்?



நாக்கில் நரம்பில்லாது தன்னையும் டாக்டரையும் சேர்த்துக் கட்டி விடப்பட்ட கதை அவர் காதில் விழுந்ததுதான் காரணமாக இருக்குமோ?

இது விஷயமாக டாக்டருடைய இரும்பை ஒத்த மனத்தில் இவ்வளவு வருட காலமாக இல்லாமல் இப்போதுமட்டும் விரிசல் உண்டாகி விட்டதா?

இரும்பில் விரிசலா?

ஏன் ஏற்படாது?

இனி தன்னுடைய நிலைமை என்ன?

ஊராரின் வம்புப் பேச்சுக்குப் பயந்தோ டாக்டர் தன்னிடம் காட்டும் உதாசீனத்துக்குப் பயந்தோ கடமையைக் காற்றில் பறக்க விட்டுவிட முடியுமா?

அப்பப்பா! கடந்த பதினெட்டு வருட காலமாகக் கடமைக்காக அவள் பட்ட கஷ்டம் சொல்லி முடியாது.

யார் குடும்பத்துக்கு யார் கஷ்டப்படுவது?

சொன்னால்கூட நம்ப மாட்டார்கள், இவள் தான் தாங்கி விட்டாளோ என்று!

அவளால் எதையுமே தீர்மானமாக முடிவு செய்வதற்கு முடியவில்லை



''அம்மா, வீடு வந்து விட்டது'' என்றான் கூடவந்த ஆள்.

அவள்சிந்தனைக்கு முற்றுப்புள்ளிவைத்தாள்.

★

அன்று டாக்டருக்கு ஏகப்பட்ட வேலை.

சிறிது மன நிம்மதியை நாடிப் பார்க்கில் போய் உட்கார்ந்து கொண்டார்.

ஆலமரத்தடி பெஞ்சியில் படுத்தார்.

சற்றுத் தள்ளிச் சிலர் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர் அங்கிருப்பதை அவர்கள் கண்டார்களா?

''என்ன இருந்தாலும் டாக்டர் நந்தகுமாரும் ஒரு மனிதர்தானே? மனிதனுக்கு ஒரு பலவீனம் இல்லாமல் இருக்க முடியாது.''

''மற்றவர்களைப்பற்றிப் பரவாயில்லை. டாக்டர் பொதுவாழ்வில் அந்தஸ்து உடையவர். அவரைப் பற்றி மற்றவர்கள் கேவலமாகப் பேசும்படியாகவா வைத்துக் கொள்ளுவது?''

''பிடித்ததுதான் பிடித்தார். போயும் போயும் இந்த அவலட்சணத்தையா போய்ப் பிடிக்க வேண்டும்?''

''காதலுக்குக் கண் கிடையாது, ஸார்! டாக்டர் கண்களுக்கு அவள் அகில உலக அழகியாகத் தோற்றமளித்திருக்கலாம்.''

''டாக்டர் வேறு கல்யாணம் செய்து கொள்ள வில்லையா?''

''அந்த அவலட்சணம் அவரைக் கலியாணம் செய்து கொள்ள விட்டால் தானே?''

''இப்படியா இருப்பார் ஒரு டாக்டர்?''

''இருக்கிறாரே!''

''டாக்டரின் மூத்தாள் பெண்கள்தானே வீட்டில் இருக்கும் பெண்கள்?''

''ஆமாம். அவர்களுக்குக் கலியாணம் செய்ய டாக்டர் முயன்றும் முடியவில்லை.''

''இவளை வீட்டோடு வைத்துக் கொண்டால் இந்த யுகத்தில் அந்தப் பெண்களுக்குக் கலியாணம் ஆகாது.''

''டாக்டர் வேறு கலியாணம் செய்து கொண்டிருந்தால் இந்தக் கஷ்டங்கள் ஏற்பட்டிருக்காது.''

மன நிம்மதியை நாடிப் போனவர் அதை இழந்து வீடு திரும்பினார்.

★

டாக்டர் நந்தகுமார் படிப்பை முடித்ததும் தனியாக ஒரு ஆஸ்பத்திரி வைத்தார்.

நர்ஸ் வேலைக்கு ஆள் தேவை என்று விளம்பரம் கொடுத்தார்.

காஞ்சனாவும் மனுப் போட்டு விட்டு நேரில் வந்தாள்.

டாக்டரின் மனைவி கல்பனா, காஞ்சனாவுக்கு நர்ஸ்வேலை தரச் சொன்னாள். டாக்டரும் காஞ்சனாவை வேலைக்கு எடுத்துக்கொண்டார்.

டாக்டரின் மனைவிக்குக் காஞ்சனாவைப் பார்த்தவுடன் ஏற்பட்ட பரிவுதான் அவளைத் தேர்ந்தெடுக்கச் செய்தது.

காஞ்சனாவும் நன்றாக நர்ஸ் வேலையைச் செய்து வந்தாள்.

பக்கத்துக் கிராமத்தில் அவள் பெற்றோர் இருந்து வந்தார்கள்.

காஞ்சனாவுக்கும் கல்பனாவுக்கும் சமவயது. நெருங்கிப் பழகலானார்கள்.

மூன்று வருடங்கள் சென்றன.

டாக்டருக்குப் பாமா என்று மூன்று வயதில் ஒரு பெண்ணும் ஒரு வயதில் சாரு என்ற பெண்ணும் இருந்தார்கள்.

காஞ்சனாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. ஒரு மாதம் போனால் அவளுக்குக் கலியாணம். பிள்ளை வீட்டார் கொடுத்த பணத்தில் அவளுக்கு வேண்டியவைகளையெல்லாம் வாங்கியாகி விட்டது.

திடீரென்று டாக்டரின் மனைவி கல்பனாவுக்கு விஷ ஜுரம் கண்டது. நிற்கவே இல்லை.

அவள் இறக்கும் தறுவாயில் காஞ்சனாவை அருகில் அழைத்தாள்.

''காஞ்சனா! இனிநான் பிழைக்கமாட்டேன். என் செல்வங்கள் பாமா, சாரு இவர்களை உன் கையில் ஒப்படைக்கிறேன். என் கணவர் மறு விவாகம் செய்து கொள்ளக்கூடிய வயதில் உள்ளவர். குழந்தைகள் மாற்றாந் தாய் வந்தால் நன்கு வளர முடியாது. அவரை மறு விவாகம் செய்து கொள்ளக்கூடாது என்று என்னால் சொல்ல முடியாது. இவைகளை உன் மனத்தில் வை. பாமாவையும் சாருவையும் உன் வயிற்றில் பிறந்தவர்களாக எண்ணிக் கொள். உன் வாழ்வை அவர்களுக்காக அர்ப்பணித்து விடவேண்டும். அவர்கள்

பெரியவர்கள் ஆனதும் கலியாணமாகிப் புக்ககம் போகும் வரையில் நீ உன் கடமையிலிருந்து நழுவக் கூடாது'' என்றாள்.

காஞ்சனா, ''என் வாழ்வை அவர்கள் இருவருக்கும் அர்ப்பணித்துக் கொண்டு விட்டேன் இந்த விநாடி முதல். இனி அவர்கள் நல்வாழ்வுதான் என் மூச்சில் இழையோடும். கடமையில் தவற மாட்டேன்'' என்றாள்.

கல்பனா இறந்து விட்டாள்.

குழந்தைகள் கதறின. காஞ்சனா அவர்களை வளர்க்கத் தலைப்பட்டாள்.

''காஞ்சனா! சதா டாக்டர் வீட்டிலேயே கிடக்கிறாயே? கல்யாணத்துக்குத் தேதி வைக்க வேண்டாமா?'' என்று கேட்டார் காஞ்சனாவின் தகப்பனார்.

''அப்பா! பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். நான் கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லை.''

''என்னம்மா இப்படி?''

''ஆமாம்! அப்படித்தான்.''

''பணம் திருப்பிக் கொடுத்தால் போதுமா? அவர்கள் வழக்குப் போட்டால்......?''

''வழக்குப் போடட்டும்.''

அவள் உறுதியாக இருந்தாள்.

பிள்ளை வீட்டார் மான நஷ்டத்துக்கு வழக்குப் போட்டார்கள்.

அவள் உறுதி தளரவில்லை.

நஷ்டமும் கொடுத்து விட்டாள்.

கலியாணம் செய்து கொண்டு விட்டால் இந்த இரு குழந்தைகளையும் கவனிக்க முடியாது என்றே தனக்குக் கலியாணமே வேண்டாம் என்றாள்.

பதினெட்டு வருட காலம் கண்ணின் இமைகள் போல் டாக்டரின் பெண்களைப் பாதுகாத்தாள்.

மறு விவாகம் செய்து கொள்ளும்படி பலர் டாக்டரைத் தூண்டியபோது அவர் மனத்தில் சில தடவைகளில் சலனம் ஏற்பட்டதுண்டு.

ஆனால் அதே சமயம் தம் அருமைப் பெண்களின் வாழ்வுக்காகக் கலியாணம் கூடச் செய்து கொள்ளாமல் இருக்கும் காஞ்சனாவைப் பற்றிச் சிந்திப்பார். அடுத்த நிமிஷம் மறுமணம் என்ற பேச்சை மறந்து விடுவார்.

டாக்டரின் மனைவி இறந்த பிறகு இந்தப் பதினெட்டு வருட காலத்தில் மூன்று ஊர்களில் தொழில் நடத்தினார். கடைசியில் இவ்வூருக்கு வந்து ஆறு வருடங்கள் ஆகிவிட்டன.

காலையில் எழுந்து விடுவாள் காஞ்சனா. வீட்டு வேலைக்காரி போல் எல்லாம் செய்வாள். செவிலித் தாய்போல் குழந்தைகளைப் பேணி வளர்ப்பாள். உபாத்தியாயினிபோல் அவர்களுக்குப் பாடம் கற்பிப்பாள். டிஸ்பென்ஸரியில் கம்பவுண்டராக இருப்பாள். டாக்டருக்கு உதவியாக இருப்பாள். ஆனால் உலகம் கண்டதா உண்மையை?

பலர் பலவாறு பேசுவது அவள் காதில் விழாமல் இல்லை. அவள் எதற்கும் கவலைப் படவில்லை. தன்னை உலகமே கேவலமாகப் பேசினாலும் அவள் அதைச் சகித்துக்கொள்ளும் மன உறுதி படைத்திருந்தாள்.

இவ்வளவு காலம் டாக்டர் காதில் விழாதது இப்போது விழுந்து விட்டது.

டாக்டரின் மனம் சலனமடைந்து விட்டதை அறிந்தாள் காஞ்சனா.

பாமாவுக்கும் சாருவுக்கும் கல்யாணம் ஆகி அவர்கள் புக்ககம் போகும் வரையில் டாக்டரே கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் போகக் கூடாது என்று தீர்மானித்தாள்.

★

டாக்டரின் இரு பெண்களுக்கும் ஒரே முகூர்த்தத்தில் கலியாணமாயிற்று.

அவர்களைப் புக்ககம் கொண்டுபோய் விடப் போயிருந்தார் டாக்டர்.

திரும்பி வரும்போது, ''காஞ்சனா கடமையை நிறைவேற்றப் பட்ட கஷ்டம் யாருமே பட்டிருக்க மாட்டார்கள். இனி அவளுக்கு யார் உதவி? அவள் நமக்காகப் பட்ட பாட்டுக்கு அவளுடைய வாழ்க்கையையும் நம்முடைய வாழ்க்கையையும் இணைத்துக் கொள்வது தான் நாம் அவளுக்குச் செய்யும் கடமை'' என்று எண்ணியபடி வந்தார், வீட்டுக்கு.

வீட்டில் காஞ்சனா இல்லை.

கடிதம் இருந்தது:

''கடமை முடிந்து விட்டது. வருகிறேன்.''

எத்தனை சுருக்கமாக எழுதிவைத்திருந்தாள்?

''காஞ்சனா! காஞ்சனா!'' என்று கதறினார் டாக்டர்.

அவள் ஏன் திரும்பி வருகிறாள்?

ஜன சமுத்திரத்தில் கலந்து விட்ட அவளை எப்படித் தேடிக் கண்டு பிடிக்க முடியும்?



# மாதர்குலதிலகங்கள்

## திருமதி ஜயம்மாள்



**வீணை** தனம்மாள் என்றால் இசை உணர்ச்சியுள்ள உள்ளம் பூரிக்காமல் இருக்காது. தீக்ஷிதர், சாஸ்திரிகள்-பதங்கள், ஜாவளிகள், வாய்ப்பாட்டு, வாத்தியம், பரதம் எந்த சம்பிரதாயந்தான் அன்று அந்த அம்மாளின் இல்லத்தில் வந்து சேர்ந்து அதை நாதக் கோவிலாகச் செய்யவில்லை? இன்றும் தனம் மரபு அதைத் தாங்கி வரும் அவளுடைய பெண், பேரன், பேத்திகள் இவர்களிடம் இருக்கும் இசை, கர்னாடக சங்கீதத்துக்கே பொக்கிஷம் போன்றது. கிருதிகளும், பதங்களும், ஜாவளிகளும், ஸமஸ்கிருதம், தெலுங்கு, தமிழ் உருப்படிகளும் இவர்களிடம் குவிந்திருப்பது மட்டும் இதன் சிறப்பல்ல. இந்த பாணியின் ராகபாவமும், லக்ஷணத் தூய்மையும், கலப்பு வாடையே அடிக்காத ராக உருவங்களும், இக் குடும்பத்தின் இசைக்குத் தனித்ததோர் பெருமையைத் தருகின்றன. பழக்கத்தில் உலவும் பல ரக்திராகங்களிலுள்ள அபூர்வ உருப்படிகள், அவற்றைப் பாடுவதிலுள்ள ஒதுக்கல்-சறுக்கல், கமகம், கார்வை, மற்றும் அபூர்வமான வேகவாஹினி, மாஞ்ஜி, கல்கடா, த்விஜாவந்தி, பரஜு முதலிய ராகங்களின் உருவத்தை அறிவதற்கான லக்ஷியங்கள், இவற்றையெல்லாம் கற்கவோ சுவைக்கவோ விரும்புவோர் இவ்விசையையே நாடுவார் என்பதில் ஐயமில்லை.

இவ்விசை மரபைத் தாங்கி வரும் தனம் வம்சத்தவருள் மூத்தவர் ஸ்ரீமதி ஜயம்மாள். வயது 68 ஆகிறது. ஆனால் பாட்டில் ஆட்டமோ, கட்டையோ, தேசலோ இல்லை. இன்றும் மியூஸிக் அகாடமியில் தாம் நடத்தும் மாலைப் பள்ளிக்கூடத்துக்குத் தினந்தோறும் வந்து பாடம் சொல்லிக் கொடுத்து வருகிறார்.

திருமதி ஜயம்மாள் தம் தாயாரிடமிருந்து தாமே சங்கீதம் கற்றுக்கொண்டதுடன் வீணை திரு குப்பய்யரின் புதல்வர் முத்தியால் பேட்டை ஸ்ரீ தியாகய்யரிடமும் கொஞ்சம் வித்தியாப்பியாஸம் செய்தார். கொஞ்சகாலம் தம் சகோதரி காலஞ்சென்ற லக்ஷ்மிரத்னம்மாளுடன் கச்சேரி செய்து வந்தார். தமது முப்பதாவது வயதிலிருந்து இன்றுவரை பலருக்குச் சங்கீதம் சொல்லி வைத்திருக்கிறார்.

ஒருவகையில் ஸ்ரீமதி ஜயம்மாள் பரத நாட்டியத்தின் புத்துயிருக்கு வித்தாயிருந்தவர் என்றே சொல்லவேண்டும். தனம்மாளின் வம்சத்தினர், தனம்மாள் உள்பட ஒரு சமயம் பரத சாஸ்திரத்தைக் கையாண்டதுண்டு. ஆனால் பின் எழுந்த நாட்டிய எதிர்ப்பு இயக்கத்தில் இதைப் பெரும்பாலும் இக்குடும்பத்தினர் விட்டிருந்தனர். பல உறவினர் தடுத்தும் ஜயம்மாள் பிடிவாதமாகப் பாலசரஸ்வதியைப் பரதநாட்டியத்தைப் பயிலும்படி காலஞ்சென்ற கந்தப்பபிள்ளையிடம் விட்டார். முன்பெல்லாம் ஆட்டத்தில் பெண்கள் கலந்து பதங்களைப் பாடி வந்ததில்லை. ஜயம்மாளே முதன்முதலாகத் தம் பெண்ணின் அபிநயத்துக்கு பதங்களைத் தாமே பாடி வரும் வழக்கத்தை ஆரம்பித்தார். நம் பரதநாட்டியம் கர்னாடக சங்கீத சாஸ்திரத்தில் தோய்ந்த கலை என்று இவ்விருவர்களுடைய பாட்டிலிருந்தும் ஆட்டத்திலிருந்துமே நன்குபுலனாகிறது.

இம் முதிர்ந்த கலைப்பட்ட இசையையும், இவர்களிடமுள்ள அரிய உருப்படிகளையும் பல இளைஞருக்குச் சொல்லிக் கொடுத்து, இச் சீரிய வழியை மேலும் பரப்ப வேண்டுமென்று சென்னை மியூஸிக் அகாடமியார் தீர்மானித்தபோது, ஸ்ரீமதி ஜயம்மாள் உற்சாகத்துடன் முன் வந்து அகாடமியில் இதற்கென்று தனிப் பள்ளிக்கூடம் ஒன்றை நடத்தி வருகிறார். மேலும், டேப்-ரிகார்டு மூலம் தம்மிடமுள்ள உயர்ந்த உருப்படிகளைப் பதிவுசெய்து கொடுக்கவும் இசைந்துள்ளார். வித்வான்களும் ரசிகர்களும் சேர்ந்து உருப்படிகளைப் பொறுக்கியிருக்கின்றனர். டில்லி சங்கீத நாடக அகாடமியார் இதற்கு வேண்டிய ஏற்பாட்டை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். பல ஸாஹித்திய கர்த்தாக்களின் பல்வேறுபட்ட அபூர்வ உருப்படிகளை, வழியே வந்த பாடத்தில், உயர்ந்ததோர் பாணியில் கற்கப் பல இளம் வித்வான்களும் விதூஷிகளும் முன்வந்தால் பாடும் மரபு விட்டுப் போகாமல் இவ்விசைப் பொக்கிஷம் வளர்ந்து வரும். இந்த அரிய தொண்டைச் செய்துவரும் திருமதி ஜயம்மாளுக்கு இசை உலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது. வாழ்க, ஜயம்மாள்.

— டாக்டர் வே. ராகவன்



# நேபாளக்

"மன்னும் இமயமலை எங்கள் மலையே!" என்று மகாகவி பாரதியார் பாடி பெருமைப்பட்டார். இந்த இமயமலையின் அடிவாரத்தில் இருக்கும் அருமையான ஊர்தான் புகழ்பெற்ற நேபாளம். உலகிலேயே தனித்து நிற்கும் இந்து ராஜ்யம் ஆரம்பமாகும் இடம் தான் நேபாளம். அழகு நிறைந்த இயற்கை சூழ்நிலைக்கு மத்தியில் அமைதியுடன் வாழும் ஆஸ்திக மக்கள் நிறைந்த புண்ணிய பூமி. மகான் புத்தர் ஜனித்ததும் சீதாதேவி வாழ்ந்ததும் இந்தப் பூமியில் தான். இந்த அற்புதமான நாட்டைப் பற்றிய சில காட்சிகளை இப்பக்கங்களில் பார்க்கலாம். நேபாளத்தில் உள்ள சிங்க தர்பார், ஹனுமான் டோகா, பசுபதி நாதர் ஆலயம், பௌத்தநாதர் ஸ்தூபி முதலியவைகளைப் பற்றியும், அந்த நாட்டு மக்களின் வாழ்க்கை முறை, அவர்கள் பண்பாடு, கலை முதலியவைகளைப் பற்றியும், நேபாளப் பிரயாணத்தில் உள்ள

1



2



3




# காட்சிகள்

கஷ்டங்களைப் பற்றியும் ரஸமாக எடுத்துக் கூறும் திரு கப்புடு அவர்களின் விவரமான கட்டுரையை இந்த இதழின் எழுபத்தெட்டாம் பக்கத்தில் காணலாம்.

1. புகழ் பெற்ற பாலாஜி குளம். இதற்கு வெகு அருகில் பத்தடி நீளத்தில் பகவான் பத்மநாபன் பாம்புமன்னன் மீது பள்ளி கொண்டிருக்கிறான்.

2. கிருஷ்ண மந்திரம், லலிதபுரம்.

3. வீடு போல் தோற்றமளிக்கும் இது தான் பத்திரிநாத் கோவில்.

4. மலையிலிருந்து வரும் கலைகளை இது போன்று கட்டி மக்களுக்கு நன்னீர் கிடைக்கும்படி செய்திருக்கின்றனர்.

5. காட்மாண்டுவில் புத்தநாதக் கலைப் பாணியில் அமைந்திருக்கும் கோயில்.

6. சந்திரகிரி மலையிலிருந்து காணும் காட்மாண்டு நகரத் தோற்றம்.


















1. திரு சி. சுப்பிரமணியம் தலைமையுரை நிகழ்த்துகிறார். குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு அழ. வள்ளியப்பாவையும், பரிசு பெற்ற எழுத்தாளர்களையும் சொற்பொழிவாற்றிய திருமதி சௌந்தரம் கைலாசம் அவர்களையும் காணலாம். 2. 'பட்டணம் போகிற மாமா' என்ற பாடலுக்கு ஸ்ரீ வேங்கடநிவாசம் ஆரம்பப் பள்ளி குழந்தைகள் அபிநயம் பிடிக்கிறார்கள். 3. சிவாஜி சாரணர் குழுவினர் நடத்திய 'குரங்குக் குல்லாய்' நாடகத்தில் ஒரு காட்சி. 4. கனீர் என்று பாடிய ராஜாஜி சிறுவர் சங்கத்தைச் சேர்ந்த சிறுவர்கள். 5. விழாவில் வெளியிடப்பட்ட பத்துக் குழந்தைப் புத்தகங்களும் சபையில் ஒரு தோற்றமும்.








'' என்னைக் கலி தீர்த்தே – உலகில்
ஏற்றம் புரிய வந்தாய் ''

என்கிறார் மகாகவி பாரதியார்.

வாழ்க்கையில் இன்பத்தையும் எதிர்காலத்தில் நம்பிக்கையும் ஊட்டும் குழந்தைகளிடம் யாருக்குத்தான் பிரியம் இல்லை? அதிலும் நமது பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேருவுக்குக் குழந்தைகளிடம் உள்ள பேரன்பும் அந்த வருங்காலக் குடிமக்களின் மீதுள்ள தளரா நம்பிக்கையும் உலகப் பிரசித்தம்.

நாட்டையும் நாட்டு மக்களையும் வாழ வைக்கும் இத்தகைய மகாபுருஷரின் ஜன்ம தினமான நவம்பர் 14-ம் தேதி கடந்த சில ஆண்டுகளாகக் குழந்தைகள் தினமாகக் கொண்டாடப்பட்டு வருவது மிகவும் பொருத்தமானதே.

இவ்வாண்டில் சென்ற வருஷங்களை விட அதிக விமரிசையாக இத்திருநாள் பாரத நாடெங்கும் கொண்டாடப்பட்டது. குழந்தை இலக்கிய வளர்ச்சிக்காகப் பல வழிகளிலும் பாடுபட்டு வரும் குழந்தை எழுத்தாளர் சங்கத்தார் சென்னை வாணி மகாலில் பல சிறப்பான நிகழ்ச்சிகளுடன் இவ்விழாவைக் கொண்டாடினர்.

நன்கு அலங்கரித்த மண்டபத்திலே சுமார் நூறு குழந்தைகள் பல கதம்ப நிகழ்ச்சிகள் நடத்தி இரண்டாயிரம் குழந்தைகளையும் பெற்றோர்களையும் மகிழ்வித்தனர்.

மயிலை ஜொதி சாரணர் குழு, அடையாறு சிறுவர் சங்கம், மாம்பலம் சாரதா உயர்தர ஆரம்பப் பள்ளி, ஸ்ரீ வேங்கட நிவாசம் ஆரம்பப் பள்ளி, ராஜாஜி சிறுவர் சங்கம் ஆகிய ஸ்தாபனங்களைச் சேர்ந்த பச்சிளம் குழந்தைகள் அழகழகாக நாட்டியமாடியும் நாடகம் நடித்தும் பாடியும் விகடம் பொம்மலாட்டம் ஆகியவை நிகழ்த்தியும் சக்கைப் போடு போட்டுவிட்டனர்.

குழந்தை எழுத்தாளர் சங்கத்தார் குழந்தைகளுக்காக எழுதுவோரை ஊக்குவிக்க அண்மையில் ஒரு சிறுகதைப் போட்டி நிகழ்த்தினர். அதில் வெற்றி பெற்றவருக்குக் கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் பதக்கங்கள் அளித்துப் பாராட்டி ஆசி கூறினார்.

ஏழு முதல் ஒன்பது வரை வயதுள்ள குழந்தைகளுக்கு ஏற்ற நல்ல கதைகள் எழுதியதற்காக முதல் பரிசைப் புதுக்கோட்டை திரு சத்ய மூர்த்தியும் (பூரம்), இரண்டாம்பரிசைச் சென்னை திரு ஜெ.எத்திராஜுலும் பெற்றனர்.

ஒன்பது முதல் பதினான்கு வயதுள்ள குழந்தைகளுக்கு ஏற்ற சிறந்த கதைகள் எழுதியதற்காக முதல் பரிசைச் சீர்காழி டி. ஜே. இன்பராஜும் இரண்டாம் பரிசைச் செஞ்சி எம். செல்வரும் பெற்றனர்.

போட்டிக்கு வந்த கதைகளை யெல்லாம் திரு தி. ஜ. ர., திரு வைத்தண்ணா, திருமதி அ. ரா. இந்திரா ஆகிய மூவரும் பரிசீலனை செய்து தீர்ப்பளித்தனர்.

குழந்தைகள் தினத்தில், வேறெங்கும் இல்லாத விசேஷ நிகழ்ச்சியாக விளங்கியது பத்துப் புதுக் குழந்தைப் புத்தகங்களை வெளியிட்ட நிகழ்ச்சி. தமிழிலே நிறைய நல்ல குழந்தைப் புத்தகங்கள் தோன்ற இம்முயற்சி பொருத்தமான ஆரம்பம். ஒன்பது எழுத்தாளர்களின் பத்துப் புத்தகங்களை ஏழு பதிப்பாளர்கள் ஒரே நாளில் ஒரே இடத்தில் வெளியிட்டது இதுவரை நிகழாத சாதனை.

வெளியான புத்தகங்களின் விவரம்:

திரு பெ. தூரனின் ''ஆனையும் பூனையும்'', (பழநியப்பா பிரதர்ஸ்), திரு ராஜியின் ''தங்க மாம்பழம்'' (கலைமகள் காரியாலயம்), திரு வைத்தண்ணாவின் ''வாத்தியக்கார வடிவேலு'' (புதுக்கோட்டை தமிழ் நிலையம்), திரு அழ. வள்ளியப்பாவின் ''பாட்டுப் பாடுவோம்'' (குழந்தைப் புத்தக நிலையம்), ''ரோஜாச் செடி'' (ஸ்டார் பிரசுரம்), திரு தம்பி சீனிவாசனின் ''தங்கக் குழந்தைகள்'' (குழந்தைப் புத்தக நிலையம்), திரு பூவண்ணனின் ''அன்புத் தாத்தா'' (பாரி நிலையம்), திரு சொர்ணத்தின் ''புத்தர் பொம்மை'' (புதுக்கோட்டை தமிழ்நிலையம்), திரு இளம்பாரியின் ''கவரிமான்'' (மலர் நிலையம்), திரு தங்கமணியின் ''மருக் கொழுந்து'' (மலர் நிலையம்);

புதுப் புத்தகங்களின் முதல் பிரதிகளை ஓர் இளம் குழந்தைக்கு அளித்து அவற்றை வெளியிட்டு வைத்தார் கல்வி மந்திரி திரு சுப்பிரமணியம். குழந்தை இலக்கியத்தின் மேன்மையையும் குழந்தைகளுக்குத் தூய விஷயங்களை எழுத வேண்டியதன் அவசியத்தையும் மந்திரி வற்புறுத்தினார்.

திருமதி சௌந்தரம் கைலாசம் ''வயதால் பெரியவரும் உள்ளத்தால் குழந்தையுமான நேரு மாமா''வின் சிறப்பைக் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னார்.

பாட்டாலும் பேச்சாலும் பிரதமர் ஜவாஹர்லால் நேருவின் மேன்மைகளைக் கூறிக் குழந்தைகளை மகிழ்வித்தார் திரு சுப்பு.

இவ்வளவு கோலாகலமாகக் குழந்தைகள் தினத்தைக் கொண்டாடிய குழந்தை எழுத்தாளர் சங்கத்தையும் அதன் தலைவர் திரு அழ. வள்ளியப்பா அவர்களையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும். இந்த விழாக் காட்சிகள் சிலவற்றை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.



சித்திரத் தொடர் கதை
10
சோதிடப் புலி
அதிசயம்
அப்பப்பா! இந்த ஜமீன்தாரின் சோதனையே பெரிய சோதனையாகப் போச்சு! இந்தச் சோதிடன் வேலைக்குத் தலை முழுகி விடலா மென்றே தோன்று கிறது.



ஏனுங்க அப்படி?



பின்னே என்ன! அந்த ரத்தின ஹாரம் திருடினவர்கள் யார் என்று சொல்லித் தான் ஆக வேண்டுமாம்.



சொல்லித்தான் தொலைத்து விடுங்களேன்!



அதெப்படி?



அப்படின்னா உங்களுக்குச் சோதிடம் வராதா?


இன்று ஜமீன்தாரே இந்தக் கேள்வியைக் கேட்டு விட்டாரு. சோதிடமாவது, மண்ணாங் கட்டியாவது, ஒன்றுமே தெரியாது. அதிர்ஷ்டகாலம் வந்து விட்டதாக எண்ணி னேன். இப்படி துரதிர்ஷ்டம் பிடித்து விட்டது.


ஆமாம், அந்த நாகு எடுத்தாள் என்று எப்படிச் சொன்னீர்கள்?


அதுவா? அது பெரிய கதை!


அது என்ன கதை?


உலகநாதன் செட்டியார் வீட்டிலே வேலைக்குப் போனா புதிதிலே, பாக்கியத்தைத் கெட்ட கேட்டுக்குப் பணியாரமா? என்று அடிச்சியே, நினை விருக்கிறதா?


தொடரும்




### 35. திருட்டுக் குற்றம்!

ஹோட்டலுக்குள்ளே சென்ற மால்கோஷ் தனக்கு வேண்டிய அளவு பிஸ்கத்தையும் ரொட்டியையும், டீயையும் வாங்கிச் சாப்பிட்டான். வழியில் சாப்பிடுவதற்கும் பிஸ்கத், ரொட்டி வாங்கிப் பொட்டலமாகக் கட்டிக்கொண்டான். ஹோட்டல் சொந்தக்காரன் மால்கோஷின் தோற்றத்தைப் பார்த்து அவன் மிகவும் விலை உயர்ந்த பொருள்களை வாங்கிச் சாப்பிடுவதையும் பார்த்தான். "என்ன ஐயா! உன்னைப் பார்த்தால் ஒரு பிச்சைக்காரனைப்போல் தோற்றமளிக்கிறாய். விலை உயர்ந்த பிஸ்கத்துகளையும், ரொட்டிகளையும் மற்றப் பொருள்களையும் சாப்பிடு

கிறயே! உன்னிடம் போதிய பணம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

ஹோட்டல்காரன் கேட்டது சற்று மால்கோஷுக்குக் கோபத்தை அளித்தது. "என்னிடமா பணம் இல்லே? இந்தாருங்கள். நான் சாப்பிட்டது போகப் பாக்கிப் பணத்தைக் கொடுங்கள்'' என்று தன் கையிலிருந்த ஒரு பவுனை ஹோட்டல்காரனிடம் கொடுத்தான். பளபளப்பான பவுன் நாணயத்தை வாங்கிப் பார்த்து ஆச்சரியம் அடைந்தான் ஹோட்டலின் சொந்தக்காரன். பவுனைக் கொடுத்துச் சாப்பிட்டவர்களைத் தனது ஆயுள் முழுவதும் ஹோட்டலின் சொந்தக்காரன் பார்த்ததில்லே.



பவுனை இரண்டு மூன்று முறைகள் இப்படியும் அப்படியுமாகத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். ''ஐயா! சற்றுப் பொறும். திடீரென்று பவுன் நாணயத்தைக் கொடுத்தால் நான் சில்லறைக்கு எங்கே போவது? சற்று உட்காருங்கள். இதோ கொண்டு வருகிறேன்'' என்று வெகு வேகமாக வெளியே போனன். ஆனல் ஹோட்டலின் சொந்தக்காரன் சில்லறையுடன் திரும்பி வரவில்லே. ஒரு போலீஸ் சேவகனுடன் தான் திரும்பி வந்தான். ''இதோ உட்கார்ந்திருக்கிறனே முகத்திலே மீசையும் தாடியுடனும், இவன் தான் இந்தப் பவுன் நாணயத்தைக் கொடுத்தவன்'' என்று ஹோட்டலின் சொந்தக்காரன் மால்கோஷைச் சுட்டிக் காண்பித்தான்.

போலீஸ்காரனைக் கண்டவுடன் மால்கோஷ் பயம் அடைந்தான். ''என்ன, ஐயா இது? நான் என்ன தவறு செய்தேன்? எதற்காக இப் போலீஸ் சேவகரை அழைத்து வந்தீர்கள்?'' என்று மால்கோஷ் பயத்துடன் கேட்டான். ஹோட்டல்காரனிடமிருந்த பவுன் நாணயத்தைப் போலீஸ் சேவகன் கையில் வாங்கிக் கொண்டான்.

''என்ன செய்தாய் என்று கேட்கிருய். உன் பெயர் என்ன?'' என்று கோபத்துடன் கேட்டான் போலீஸ் சேவகன்.

''எனக்குப் பெயர் ஒன்றும் கிடையாது'' என்று பதில் சொன்னுன் மால்கோஷ்.

''திருடனுக்கு எப்படிப் பெயர் இருக்கும்? எப்படிச் சமயமோ அப்படிப் பெயரை மாற்றிக் கொள்ள வேண்டியதுதானே உனக்கு? எப்படி இந்தப் பவுன் நாணயம் கிடைத்தது?'' என்று போலீஸ் சேவகன் அதட்டிக் கேட்டான்.

மால்கோஷ் தான் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்திருந்தான். ''ஐயா! நான் ஏதோ பவுன் நாணயத்தைத் திருடி விட்டேன் என்று நினேக்கிறீர்கள். நான் திருடவில்லே, ஐயா! எனக்கு இந்தப் பொன் நாணயத்தை ஒரு கிழவர்தான் கொடுத்து உதவினர்'' என்று கூறி, பாழடைந்த கட்டடத்தில் தானும் கிழவரும் படுத்திருந்த சமாசாரம் யாவற்றையும் மால்கோஷ் தன்மீது சந்தேகம் வராதபடி விவரமாகச் சொன்னுன். ஆனல் அவன் கூறியதைப் போலீஸ் சேவகஞ நம்புவான்?

''யாரிடம் ஐயா! இந்தக் கட்டுக் கதையெல்லாம் சொல்லி அளக்கிறே? எங்கே திருடினய்? உண்மையைச் சொல்லு. இல்லாவிட்டால் உன்னைச் சும்மா விடமாட்டேன். வா என்னுடன்'' என்று ஒரு கையில் மால்கோஷையும் மற்ருெரு கையில் பவுன் நாணயத்தையும் எடுத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தான்.

போலீஸ் ஸ்டேஷனில் மால்கோஷை ஒரு அறையில் வைத்துப் பூட்டி விட்டார்கள். பிறகு ஒரு மணி நேரம்



கழித்து அந்தச் சிறிய அறையிலிருந்து மால்கோஷுக்கு விடுதலை கிடைத்தது. ஒரு போலீஸ் வண்டியில் அவனை ஏற்றினார்கள். அந்தப் போலீஸ் வண்டி சில மைல்களுக்கு அப்பால் ஒரு பெரிய போலீஸ் ஸ்டேஷனுக்கு எதிரில் சென்று நின்றது. அங்கிருந்த போலீஸ் உத்தியோகஸ்தர் மால்கோஷிடம் எப்படிப் பொன் நாணயம் வந்தது என்பதைப் பற்றிப் பல கேள்விகளும், குறுக்குக் கேள்விகளும் கேட்டார். ஒன்றையும் விடாமல் தனக்கு எப்படிப் பவுன் நாணயம் கிடைத்தது என்பதை மிகவும் தெளிவாக அந்தப் போலீஸ் அதிகாரியிடம் மால்கோஷ் தெரிவித்தான். பிறகு அந்தப் போலீஸ் அதிகாரி ஒரு காகிதத்தில் என்னவோ எழுதி ஒரு போலீஸ் சேவகனிடம் கொடுத்தார். உடனே மால்கோஷை மறுபடியும் போலீஸ் வண்டியில் ஏற்றி அவனைச் சிறைச் சாலைக்குக் கொண்டு போய் அடைத்து விட்டார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அவனுக்கு ரொட்டியும்பாலும் கொடுத்தார்கள்.

"அப்பா! என்னை எதற்காக இந்தச் சிறைச்சாலையில் வைத்திருக்கிறார்கள்?" என்று தனக்கு ஆகாரம் கொண்டு வந்த சேவகனைக் கேட்டான் மால்கோஷ்.

அவன், "அப்பா! உன்னை எதற்கு இங்கு கொண்டு வந்திருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் சாதாரணமாகத் திருடர்களைத்தான் விசாரணை செய்வதற்கு முன் இங்கு கொண்டு வந்து பூட்டி வைப்பது வழக்கம். நீ ஏதாவது திருடினாயா?" என்று கேட்டான்.

இந்தக் கேள்வி மால்கோஷுக்கு மிகவும் வருத்தத்தைத் தந்தது. "நானா திருடன்? எனக்கு அந்த வழக்கமே கிடையாதே!" என்றான் மால்கோஷ்.

"அப்படியானால் நீ இங்கே வருவதற்கு முன் என்ன குற்றம் செய்தாய்? நீ குற்றம் செய்யாவிட்டால் ஒருநாளும் உன்னைப் போலீஸ் அதிகாரிகள் சிறைச்சாலைக்கு அழைத்துக் கொண்டு வரமாட்டார்கள்."

அதற்கு மால்கோஷ், "திருடவில்லை, ஐயா! என்னை நம்புங்கள்!" என்று கூறித் தனக்குப் பவுன் நாணயம் கிடைத்ததையும், தான் ஹோட்டலுக்குப் போனதையும் அந்த ஆளிடம் விவரித்துச் சொன்னான்.

உடனே அந்த ஆள், "அப்பா! உன்னைப் பார்த்தால் நல்லவன் போலத் தெரிகிறது. தெரியாமல் நீ திருடி யிருக்கலாம். நீ இப்பொழுது என்னிடம் சொல்லியதைப் போல் கட்டுக்கதை ஏதாவது சொன்னால் உன்னை ஒருவரும் நம்ப மாட்டார்கள். ஆதலால் உண்மையை ஒப்புக் கொண்டுவிடு. உனக்குத் தண்டனை கடினமாக இருக்காது" என்று கூறி விட்டுக் கதவுகளைச் சாத்திக் கொண்டு போய்விட்டான்.

அப்பொழுது மீண்டும் மால்கோஷ் தன் கோட்டுப் பையில் கையை விட்டான்.

கைவிட்டவுடன் பையில் ஒரு பவுன் நாணயம் இருந்தது. ஆச்சரியத்துடன் அதைக் கையில் எடுத்தான். "இது என்ன, மறுபடியும் ஒரு பவுன் நாணயம் இருக்கிறதே" என்று ஆச்சரியத்துடன் அந்தப் பவுனைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். இன்னும் பையில் ஏதாவது இருக்கிறதா என்று வலது பக்கத்துப் பையைப் பார்த்தான். ஒன்றும் இல்லை. பிறகு இடது கையில் பவுன் நாணயத்தை வைத்துக் கொண்டு தனது வலது கையைப் பையினுள் விட்டான். என்ன ஆச்சரியம்! அவன் கைக்கு மற்றொரு பவுன் நாணயம் இருப்பது போல் தோன்றியது. கையில் கிடைத்ததை வெளியே எடுத்துப் பார்த்தான். அது ஒரு பவுன் நாணயமாக இருந்தது. மறுபடியும் பார்க்கலாம் என்று இரண்டு பவுன் நாணயங்களையும் தனக்கு எதிரில் கீழே வைத்து விட்டுத் தனது வலது சட்டைப் பையில் விட்டான். மறுபடியும் அதிலிருந்துபவுன்நாணயம் வந்தது. பிறகு இதேமாதிரி அவனுக்குப் பவுன் கிடைத்துக்கொண்டேயிருந்தது. 'இந்தச் சட்டையில் திடீர் என்று ஒரு மந்திர சக்தி ஏற்பட்டிருக்க வேண்டும். அதற்குக் காரணம், என்னுடன் அந்தப் பழைய கட்டடத்தில் படுத்துக் கொண்டிருந்த கிழவர்தான். அதில் சந்தேகமில்லை. அந்தக் கிழவர் ஒரு மந்திரசக்தியை ஏற்றியிருக்க வேண்டும். நான் அவருக்குச் சட்டை கொடுத்து உபகாரம் செய்ததற்காகவே எனக்கு உபகாரம் செய்திருக்கிறார் போலிருக்கிறது. இந்தச் சமாசாரத்தை யாரிடமாவது சொன்னால் இந்த மந்திர சக்தி உள்ள சட்டையை என்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டு போய் விடுவார்கள். இச் சிறைச்சாலையிலிருந்து இந்தச் சட்டையுடன் தப்பித்து வெளியேறினால் போதும்' என்று மால்கோஷ் எண்ணினான். அச் சமயத்தில் மத்தியான ஆகாரத்துடன் அந்தச் சேவகன் வந்தான். (தொடரும்)


பாலர் மலர
பறக்கும் பட்டம்
தென்றல்
மீனைப் போன்ற பட்டம்—காற்றில்
மானைப் போல ஓடி
தேனை உறிஞ்சும் வண்டு போல்
திரியுது பார் மேலே
தந்திமரம் புளியமரம்—எல்லாம்
தாவி வரும் பட்டம் ;
அந்தரத்தில் ஆடிக் கொண்டு
ஆளை மயக்கும் பட்டம்.
காற்றில் நீந்தும் பட்டம்—ஜோராய்
கர்ணம் போடும் பட்டம் ;
சேற்று நீரில் வீழ்ந்து விட்டால்
சிணுங்கு கின்ற பட்டம்.
வாலு நீண்ட பட்டம்—விண்ணை
வட்ட மிடும் பட்டம்
வாலை ஒட்ட அறுத்து விட்டால்
வாலை ஆட்டும் பட்டம்.




இருள் அடர்ந்த தண்டக வனத்துக்கு இன்று உங்களை அழைத்துச் செல்லப் போகிறேன். அதோடு, அங்கே உள்ள மாரீசன் ஆசிரமத்துக்குச்சென்று, அரக்கன் மாரீசனையும் பார்த்துவிட்டு வரலாம் என்று எண்ணுகிறேன். என்ன தயங்குகிறீர்கள்? காவியத்தில் உள்ள காடுதான், அங்கே உலாவுகின்ற அரக்கன்தான், பயமில்லாமல் வாருங்கள். நம்மோடு கவிச்சக்கரவர்த்தி கம்பரும் வருகிறார்.

இதோ மாரீசனுடைய ஆசிரமத்தை அடைந்து விட்டோம். 'மாரீசனைக் காணப் போகிறோம். முன்னே ஒருமுறை அவனைச் சந்தித்தது ஞாபகம் இருக்கிறதா?' என்று கம்பர் கேட்கிறார்.

ஞாபகம் இல்லாமல் என்ன? விசுவாமித்திரன் என்ற முனிவன், இராமனையும் இலக்குவனையும் துணையாக வைத்துக் கொண்டு, யாகம் செய்யத் தொடங்கினனே அந்த சித்தாசிரமத்தில், மாரீசனைக் கண்டோம். தன்னுடைய தம்பி சுவாகுவோடும், வேறு பல அரக்கர்களோடும், முனிவனுடைய யாகத்தைக் குலைப்பதற்காக, மாரீசன் அங்கே வந்தான். அவனோடு வந்த அரக்கர் படை, கார்கால மேகத்தைப் போல, வானமும் வனமும் நிறைந்து அதிர்ந்தது.

ஆனால், கணப்பொழுதில், இராமன் தூவிய அம்பு, அரக்கர் கூட்டத்தைக் கலக்கியது, சுவாகுவைக் கொன்றது, ஓடிய அரக்கர்களைத் துரத்திச் சென்றது. அரக்கர்கள் வெட்டுண்ட தலையோடு விழுந்தார்கள். போர்க்களத்திலே கவந்தங்கள் துள்ளி ஆடின. பிணம் தின்னும் பேய்கள், 'அடாடா, என்ன விருந்து, என்ன விருந்து' என்று இராமனை வயிறாரப் புகழ்ந்தன. ஆகாச வீதியில், கழுகுக் கூட்டம் பந்தலைப் போல விரிந்தது. இந்தப் போர்க்களத்திலேதான், மாரீசன் பயம் என்பதை முதல் தடவையாக உணர்கிறான். இராமனுடைய அம்பு அவனைச் செந்தூக்காகத் தூக்கி, கடலில் எறிந்து விடுகிறது.

மாரீசன் சாதாரணமாகப் பயப்படக் கூடியவனா? இல்லை. அவன் தாடகையின் மகன். தாடகையோ,

மண்உருத் தேடுப்பினும்,
கடலை வாரினும்
விண்உருத் தேடுப்பினும்
வேண்டில் செய்கிற்பாள்

வேண்டும் என்றால், பூமியைச் சுருட்டி விடுவாள், கடலை வாரிவிடுவாள், வான வெளியைத் தோண்டி எடுத்து விடுவாள், அவ்வளவு வலிமை பொருந்தியவள். அவள் குணமோ, அதற்கு என்ன குறைவு, பாவம் அனைத்தும் ஒன்றாகத் திரண்டு, ஒரு பெண்வடிவம் பெற்றதோ என்று சொல்லும் படிக்கு, அது அமைந்திருந்தது. தாய்க்குப் பிள்ளை இந்த மாரீசன். மாயையிலும், வஞ்சனையிலும், வலிமையிலும், தாயை விட ஒரு படி மேலே, மாரீசனும் அவன் தம்பி சுவாகுவும் நின்றனர்.

மாயமும், வஞ்சமும், வரம்பில் ஆற்றலும்
தாயினும் பழகினர்.

[வரம்பில் - வரம்பு இல், எல்லையில்லாத; தாயினும் - தாயை விட.]

இப்படிப்பட்ட மாரீசனையே, இராமனுடைய அம்பு திகைக்க வைக்கிறது.

தன் மனம் போனபடி, தீமையை நாடியவன் மாரீசன். தனக்கு உள்ள வலிமையினால், எதையும் சாதித்து விடலாம் என்று எண்ணியவன். தம்பி சுவாகுவுக்கும், தனக்கும், மற்ற அரக்கர்களுக்கும் நேர்ந்த கதி, தன் வலிமைக்கும் எல்லை உண்டு என்பதை மாரீசனுக்கு விளக்கியது. முதன் முதலில் பயம் என்பதை உணர்ந்தான். கடலில் போய் விழுந்தவன். அதோடு பயத்திலும் விழுந்தான்.

இதையெல்லாம் நினைவுக்குக் கொண்டு வரும் நம்மைப் பார்த்துக் கம்பர் சொல்லுகிறார்: 'உண்மைதான். முதன் முதலில் பயத்தை மாரீசன் அனுபவித்தது' சித்தாசிரமப் போரில்தான். அந்த பயம் நீங்கவில்லை, அதோ, போகிறான் பாருங்கள்.'

பர்ணசாலையிலிருந்து வெளியே நிற்கும் மாரீசனுடைய உருவம் நம்முடைய கண்ணில் தென்படுகிறது. தவக்கோலம் பூண்டு, தூய முனிவனைப் போல் அல்லவா இந்த அரக்கன் வருகிறான்?

'கொஞ்சம் இருந்து பார்ப்போம். அப்போது தெரியும், இந்தக் கோலத்தின் அழகு' என்கிறார் கவிஞர். அவருடைய குரலில் பரிகாசம் தொனிக்கிறது.

'அப்படியா? இந்தத் தவவேடம் வெறும் பொய்யா, ஏமாற்று?' என்று கேட்கிறோம்.

'பொய்தான், ஆனால் மாரீசனுக்குக் கூட, இப்போது அது பொய் என்று தெரியுமோ, என்னவோ? இந்தக் கோலத்தை முதன்முதலில் பூண்ட போது, அது பொய் என்று மாரீசன் உணர்ந்திருந்தாலும், இப்போது அதை மறந்து விட்டான். தன்னை நிசமான தவசி என்று எண்ணத் தலைப்பட்டு விட்டான். ஆனால்....' என்று நிறுத்துகிறார் கவிஞர்.

'ஆனால் என்ன?'

'என்னவா? மனிதனுடைய மனம் மிக மிக விசித்திரமானது. மனத்தில் இரு பகுதிகள். ஒன்று வெளி மனம், மற்றொன்று உள் மனம் அல்லது அடி மனம். நாம் நினைந்து செய்கின்ற செயல்கள், அவை விளைக்கும் உணர்ச்சிகள், எண்ணங்கள், இவையெல்லாம் வெளி மனத்தைச் சார்ந்தவை. வெளி மனத்தின் அசைவும் போக்கும் நமக்கு நன்றாகத் தெரிகின்றன. ஆனால் ஒவ்வொருவனுடைய அடிமனமும் அவனுக்கே தெரியாத இருள் உலகம். வெளி மனத்தில் நடைபெறும் ஒவ்வொரு சலனமும், அடி மனத்தில் நமக்குத் தெரியாமல் உருவாகும் ஒரு சக்தியாக வடிவாகிறது. நன்மையும், தீமையும் இந்த வகையில் அடி மனத்தில் பதுங்கிக் கிடக்கின்றன. நாம் எதிர்பாராத தருணத்தில், எதிர்பாராத முறையில், அவை அவ்வப்போது வெளி மனத்தில் தலைநீட்டி நம்மைத் திணற அடித்து விடுகின்றன.'

கவிஞர் இப்படிப் பேசி வரும்போதே, காட்டு வெளியில், மாரீசன் ஆசிரமத்துக்கு அருகிலே, புஷ்பக விமானம் வந்து இறங்குகிறது. அதிலிருந்து இராவணன் விரைவாக இறங்கி, மாரீசனை நோக்கி வருகிறான். இலங்கேச்வரனை எதிர்கொள்ள, மாரீசன் விரைந்து செல்கிறான்.

கவிஞர் சொல்கிறார்: 'என்ன விசித்திரமான தவசி இந்த மாரீசன்!

பொருந்திய பயத்தன்

இந்த பயம் இராமனுடைய அம்பால் விளைந்தது. இது காரணமாக, போகத்தை நோக்கி வெறித்து ஓடும் இந்திரியங்களை அடக்கிப் பார்க்கிறான். அவை அடங்கவில்லை. அவற்றை உலவ விட்டால், இராம பாணம் மறுபடியும் வந்து விடுமோ என்று கலங்குகிறான். பயம் ஒருபுறம் இழுக்க, போக இச்சை மறுபுறம் இழுக்க, சிந்தை பொருமி மயங்குகிறான்.

பொருந்திய பயத்தன்
சிந்தை பொருமுற்று வெருவுகின்றான்
(வெருவுகின்றான்—பயப்படுகிறான்)
இந்தியங்கள் அடக்கி நின்ற மாரீசன்
(இந்தியங்கள்-இந்திரியங்கள், புலன்கள்.)

இந்திரியங்கள் அடங்கி நின்ற மாரீசன் என்று சொல்ல முடியாது. அப்படியானால்தான், அவன் தவம் பலித்து விட்டதே. அவன் உண்மையான தவசி ஆகிவிடுவானே? இந்திரியங்களை அடக்கி நிற்கிறான். காரணம், பயம். அவை

அடங்கவில்லை. ஆகவே 'ஐயோ! புலன் இன்பம் கிட்டவில்லையே' என்று பொருமுகின்றான்.

புலன்கள் செல்லும் வழி போகவும் முடியவில்லை, அவ்வளவு பயம். ஆகவே, பொருமுற்று வெருவுகின்றான். பயமும், போக இச்சையும் அவனுடைய அடி மனத்தில் பதி போடுகின்றன. என்ன செய்வான் அப்பாவி!

இதற்குள் மாரீசனுடைய குரல் நம்முடைய காதில் விழுகிறது. இராவணனைப் பார்த்துப் பேசுகிறான். அவனுடைய முதல் வார்த்தைகள் இவை. என்ன சொல்லுகிறான், கேட்போம்:

**கந்த மலர்த்தன் கற்பக நீழல் தலைவர்க்கும்**
**அந்தகனுக்கும் அஞ்ச அடுக்க அரசாள்வாய்**
**இந்த வனத்து என் இன்னல் இருக்கை**
**எளியோரின்**
**வந்த கருத்து என் சொல்லுதி**

*[கந்த மலர்-வாசனை உடைய பூ: அந்தகன்-யமன்; அஞ்ச-அச்சம் தரும்படி.]*

'பேரரசனே, ஏழையைப் போல இந்தக் காட்டிலே வந்து, துன்பம் நிறைந்த உன்னுடைய இருப்பிடத்தை நாடி வந்திருக்கிறாயே? என்ன காரணம்? நீயோ, வாசனை பொருந்திய குளிர்ந்த மலர் சொரியும் கற்பகத் தருவின் நிழலில் வாழ்கிறானே அந்த இந்திரனும், உயிர்களை எல்லாம் வாட்டுகிறானே அந்த யமனும் பயப்படும்படி அரசாள்கிறாய். உனக்கு, இந்த வனத்தில், என்னுடைய இன்னல் இருக்கையில் என்ன வேலை?' என்று கேட்கிறான் மாரீசன்.

வந்த மருமகனாகிய இராவணனை 'வா, அப்பா' என்று அழைக்கவில்லை. 'என்ன, சுகமாக இருக்கிறாயா?' என்று கேட்கவில்லை. "நீ இந்திரனும், யமனும் அஞ்ச வாழ்கிறாய். இங்கே இந்த இன்னல் இருக்கைக்கு - துன்பம் நிறைந்த இருப்பிடத்துக்கு - வந்த காரணம் என்ன?" என்று கேட்கிறான் மாரீசன்.

அவனுடைய அடி மனத்தில் பதுங்கி நின்று, அவனைக் கலக்கும் போக இச்சையும் யமபயமும், அவன் வாய் திறந்து பேசும் முதல் வார்த்தைகளில் இப்படித் தம்மை இனங் காட்டுகின்றன.

எவ்வளவு நுட்பமான மனத்தத்துவ அறிவோடு, இந்தப் பாத்திரத்தைக் கம்பர் வடிவாக்கி இருக்கிறார் என்று வியக்கிறோம்.

'இதுதான் காவியத்திலே நாடகப் பாங்கு என்பது' என்று நம்மிடம் சொல்கிறார் கம்பர்.

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 22

## பூம்புகாரில் பூதுகன்

பூதுகனைத் திடீரென்று தன் இல்லத்தில் கண்ட வைகைமாலை திகைத்துப் போய் விட்டாள். பூதுகனைப் பற்றி அவள் கேள்விப்பட்ட செய்திகளெல்லாம் அவளுடைய நினைவுக்கு வந்து அவளைக் குழப்பின.

அது இரவு வேளையாதலால் தெரு விளக்குகளின் மங்கலான வெளிச்சத்தில் பூதுகனை யாரும் எளிதில் அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் இருந்தது.

பூதுகன் சைகையினாலேயே வாசல் கதவைச் சாத்தித் தாளிடும்படி சொல்லி விட்டு உள்ளே புகுந்தான். வைகை மாலையும் வாசற் கதவைத் தாளிட்டு விட்டு அவனைப் பின்தொடர்ந்து உள்ளே சென்றாள்.

பூதுகனைக் கண்ட சுதமதியும் அயர்ந்து போய்விட்டாள்.

''சுதமதி, வைகைமாலை! என்ன ஒரேயடியாக இருவரும் திகைத்துப் போய் விட்டீர்கள்? பல்லவ ராஜ்யத்தில் சிறைப்பட்டிருந்தவன் எப்படி இங்கு வந்து முளைத்தான் என்றா? அல்லது மாண்டவன் மீண்ட விநோதத்தை நினைத்தா?'' என்று கேட்டு விட்டுப் பூதுகன் அந்த இல்லத்துக் கூடத்தில் இருந்த ஊஞ்சலில் அமர்ந்து சிரித்தான்.

''நீங்கள் ஓர் அதிசய மனிதர்......!'' என்றாள் சுதமதி.

பூதுகன் சிரித்துக் கொண்டே, 'நீங்கள் இருவரும் என்னைக் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லையல்லவா?' என்றான்.

''அது உண்மைதான். இன்று மட்டும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் அல்லும் பகலும் அனவரதமும் உங்களைப் பற்றி நினைத்தோம், பேசினோம். நீங்கள் காஞ்சீபுரத்தில் சிறைப்பட்டு விட்டதாகவும், பிறகு சிறையில் கோரமாகத் தாக்கப்பட்டு...'' என்று வைகைமாலை சற்றுத் தயங்கினாள்.

''ஏன், வைகைமாலை! மேலே சொல்லேன். வெந்நீர் என்று சொன்னால் வாய் வெந்துபோய் விடுமா? சிறையில் கோரமாகத் தாக்கப்பட்டு நான் இறந்துவிட்டதாகவும் கேள்விப்பட்டிருப்பீர்கள். நான் சொல்வது சரிதானே? இருக்கட்டும். அந்தப் பொய் வதந்திகளையெல்லாம் நிஜம் என்று நம்பி நீ விபரீதமாக ஏதுவும் செய்து கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்றுதான் நான் மிகவும் வேதனைப் பட்டேன்!'' என்றான் பூதுகன்.

''பாவம், எப்பொழுது சாப்பிட்டதோ என்னவோ! மன்னித்துக் கொள்ளுங்கள். ஒரு நொடிப் பொழுதில் சமையலுக்கு ஏற்பாடு செய்து விட்டு வருகிறேன்...!'' என்று கூறி விட்டு, சுதமதி எழுந்து சமையற்கட்டுக்குப் போனாள்.

வைகைமாலை ஆச்சரியத்தினால் அகல விரிந்த நயனங்களுடன், ''.......அப்படியானால் நீங்கள் காஞ்சீபுரத்தில் சிறையில் இருந்ததெல்லாம் பொய்யா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்! காஞ்சிச் சிறையில் நான் இருந்ததும் பொய்; அங்கே இறந்ததும் பொய்......! பகைவர்கள் தங்களுக்குச் சாதகமாகத் திரித்து



விட்ட வதந்தி! நான் அங்கே தங்கியிருந்த இடம் ஒரு பெண் மயிலின் இல்லம். அவள் தன் இல்லத்தை மாத்திரம் அல்லாமல் தன் உள்ளத்தையும் எனக்கு அளிக்கச் சித்தமாக இருந்தாள்....!''

பூதுகன் இவ்வாறு கூறிவிட்டு வைகை மாலையின் மதி வதனத்தைக் கூர்ந்து நோக்கினான்.

இதுவரையில் களங்கமற்று விளங்கிய அம் மதிவதனத்தில் சிறிது களங்கம் ஏற்பட்டது. சோபை சிறிது குன்றியது.

சிறிது கம்மிய குரலில், ''....ஏன், அந்தப் பெண் மயிலின் இல்லத்தையும் உள்ளத்தையும் விட்டு விட்டு இங்கே வருவானேன்? ஒரு பேதைப் பெண்ணின் மனத்தைப் புண்படுத்தவா?'' என்று கேட்டாள் வைகைமாலை. அவளுடைய கண்களில் நீர் மல்கியது. அப்பொழுது விம்மித் தணிந்த அவளது இதயம் பூதுகனின் உணர்வை மயக்கியிருக்க வேண்டும். அவன் வைகைமாலையின் எழில் மிக்க வடிவத்தைத் தன் விழிகளினாலேயே விழுங்கி விடுவதுபோல் பார்த்தான். பிறகு அவளுடைய தளிர்க் கரங்களைப் பற்றித் தன் னருகே இழுத்துக் கொண்டான்.



''வைகைமாலை! என் உள்ளத்தில் இரண்டு பேருக்கு இடம் ஏது? அப்பப்பா! இந்தப் பெண்களுக்குத்தான் எத்தனை சந்தேகம்! பாவம், அவளும் மிகவும் நல்லவள். அவள் இல்லா விட்டால் நான் தப்பி வந்திருக்கவே முடியாது'' என்று கூறினான் பூதுகன்.

''நீங்கள் சிறையில் இருந்தீர்களா?'' என்று கேட்டாள் வைகைமாலை.

''நான் சிறையில் இருக்கவில்லை. காஞ்சிபுரத்து இசைக் கணிகை தேனார் மொழியாளின் இல்லத்தில் சௌக்கியமாக இருந்தேன்...'' என்று கூறிப் பூதுகன், தான் காஞ்சிபுரத்துக்கு மாலவல்லியைத் தேடிக் கொண்டு சென்றது, அங்கே புத்தபிக்ஷுணி கால்நங்கையின் ஆசிரமத்துக்குச் சென்று மாலவல்லியைப் பற்றி விசாரித்தது, காஞ்சிபுரத்து வீதி ஒன்றில் சென்று கொண்டிருந்தபோது மூர்க்கத்தனமாகக் கலங்கமாலரையரால் தாக்கப்பட்டது, பிறகு சிம்மவர்மனால் காப்பாற்றப்பட்டுத் தேனார் மொழியாள் இல்லத்தில் மறைந்திருந்தது, கடைசியில் குடந்தைச் சோதிடர் சந்தகரின் உதவியால் வெளியேறியது ஆகியவைகளை விவரமாகச் சொன்னான்.

''சூழ்ச்சியிலும் பிறரை மயக்குவதிலும் அந்தக் கடல் வண்ணப் பெருமான் தான் உங்களுக்கு இணையாக முடியும். உங்கள் நினைப்பிலேயே திளைத்து, உங்கள் அன்பையும் பெற்றுவிட்ட எனக்கே உங்களைப் பார்க்கும் போதெல்லாம் சந்திரனைக் கண்ட சமுத்திரத்தைப் போல் உள்ளம் இனம் தெரியாத இன்பத்தால் பொங்குகிறதே, புதிதாக உங்களைப் பார்க்கும் பெண்களின் கதியைப் பற்றி...'' என்று வைகைமாலை சொல்லிக் கொண் டிருக்கும்போதே, பூதுகன் இடைமறித்தான்.

''...நீ துளிக்கூடக் கவலைப்பட வேண்டாம். அவன்தான் உன் அன்புக்குச் சதா ஏங்கித் தவித்துக்கொண்டிருக்கிறானே!'' என்று கூறிச் சிரித்தான்.

''இந்தக் குறும்புப் பேச்சுக்குக் குறைவில்லை. நீங்கள் சிறையில் கோரமாகத் தாக்கப்பட்டு உயிர் துறந்து விட்டதாக ஒரு பெரிய வதந்தி ஊரெல்லாம் பரவியதும் என் மனம் என்னவெல்லாம் நினைத்தது, தெரியுமா? சதா கண்ணீரும் கம்பலையுமாகத் துடித்தேன்...''

''வைகைமாலை! அந்தச் செய்தியை நீயுமா நம்பி விட்டாய்? அது நம் பகைவர்கள் சாமர்த்தியமாகத் திரித்து விட்ட செய்தி! சோழ அரசுக்கு ஆதரவாயிருப்பவர்களை அழிக்க அவர்கள் எடுத்துக் கொண் டிருக்கும் சதி முயற்சியில் ஒரு சிறு பகுதி. எதற்கும் கலங்காத என்னையே அந்தச் செய்தி ஒரு கலக்குக் கலக்கி விட்டது. முக்கியமாக உன்னைப் பற்றிய நினைவில்தான் நான் கலங்கிப் போய்விட்டேன்...''

''அது சரி! சந்தகர் இப்பொழுது காஞ்சிபுரத்துச் சிறைக்கோட்டத்திலா இருக்கிறார்?''

''இல்லை, இல்லை! அதுவும் பகைவர்கள் திரித்து விட்ட கதைதான். அவர் காஞ்சிபுரத்து அரசாங்க விருந்தினர் விடுதியில் சௌக்கியமாயிருக்கிறார். சிம்மவர்மன் தன் சாம்ராஜ்ய வெறி தணிய அவரைத்தான் நம்பியிருக்கிறான்!'' என்று கூறிய பூதுகன், மிகவும் தாழ்ந்த குரலில், ''வைகைமாலை! சிம்மவர்மனின் ஆட்களும், பல்லவ சேனாபதியும் என்னைத் தீவிரமாகத் தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியும் அல்லவா? நான் எவ்வளவு பாதுகாப்பான பெரிய மாளிகையில் இருந்தாலும் ஜாக்கிரதையாயிருப்பது



நல்லது! இன்னும் நான் பல முக்கியமான காரியங்கள் செய்ய வேண்டியிருக்கின்றன. அவைகளையெல்லாம் வெற்றிகரமாக முடித்த பிறகு என்னுடைய உயிரைப் பற்றிய அக்கறை எனக்கு இல்லை...'' என்றான்.

''...உண்மைதான். ஆனால் உங்கள் உயிரைப் பற்றிய அக்கறை உங்களுக்கு இல்லாமல் இருக்கலாம். எனக்கு அதில் சிரத்தை காட்டப் பூரண உரிமை உண்டு. உங்களை ஒன்று கேட்கிறேன். நீங்கள் அதை மறுக்கக் கூடாது. அதோ அந்தச் சாளரத்தின் வழியே தெரியும் பாதி மதியைப் பாருங்கள். அதன்மீது ஆணையாகக் கேட்கிறேன். நீங்கள் உங்கள் உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் எந்தக் காரியத்திலும் இறங்குவதில்லை என்று சொல்லுங்கள்......!'' என்றாள் வைகைமாலை.

பூதுகன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே, ''வைகைமாலை! என்னால் இயலாத ஒன்றைக் கேட்கிறாயே! என்னை மன்னித்து விடு....!'' என்றான்.

''என்ன, மன்னிப்பதா? உங்கள் அன்புக்கு உகந்த என் வேண்டுகோளைப் புறக்கணிக்கிறீர்களே!'' என்று கூறிய வைகைமாலையின் குரல் தழுதழுத்தது. கண்களில் மளமளவென்று நீர் பெருகி மறைத்தது.

''ஆகா! இந்தப் பெண்களுக்குத்தான் எத்தகைய மென்மையான இயல்பு! வைகைமாலை! உன் வேல் விழிகளின் வீச்சு ஒரு ஆபத்து இல்லையா? அதிலிருந்து நான் எப்படித் தப்ப முடியும்? அதனால்தான் உன் வேண்டுகோளைப் பூர்த்தி செய்யத் தயங்குகிறேன்!'' என்று பூதுகன் கூறியதும் வைகைமாலையின் முகம் மலர்ந்தது.

''நீங்கள் மிகவும் பொல்லாதவர்...'' என்று கூறி வைகைமாலை நாணத்தினால் தலையைக் குனிந்து கொண்டாள்.

அப்பொழுது சுதமதி ஆகார வகைகளுடன் அங்கே வந்தாள்.

''சுதமதி! என் பசியைத் தணிப்பதற்கு இத்தனை உணவு வகைகள் வேண்டும் என்று நீ கண்டு பிடித்ததுமல்லாமல், ஆக்கியும் கொண்டு வந்துவிட்டாயே! வைகைமாலை பேச்சோடு சரி'' என்று குறும்பாகக் கூறிவிட்டு ஊஞ்சல் பலகையிலிருந்து பூதுகன் உணவருந்த எழுந்தான்.

''சுதமதி அக்காள் இருக்கும்போது அதை நான் கவனிக்க வேண்டிய அவசியம் நேருவதில்லை. அதுவும் உங்களுக்குப்

# தாய்மார்க்கு எச்சரிக்கை!

## கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உங்கள் குழந்தையின் **சளி உபாதைகளை** ஒழித்துக் கட்டுங்கள்!

**இந்த நல்ல சக்திவாய்ந்த மருந்தைத் தடவி, ஓரிரவிலேயே மூக்கு, தொண்டை, மார்பக உபாதைகளை நீக்குங்கள்!**

உங்கள் குழந்தைக்கு ஜலதோஷம் கண்டால், அலட்சியமாக இருந்துவிடாதீர்கள்! படுக்குமுன், அவன் முதுகிலும், தொண்டையிலும், மார்பிலும் விக்ஸ்வேபோரப்பைத் தேயுங்கள். எங்கெல்லாம் சளி உபாதை தருகிறதோ, அங்கெல்லாம் அவன் சீக்கிரமே நிம்மதி பெறுவான். உங்கள் குழந்தை இரவுமுழுதும் ஆனந்தமாக தூங்கும்பொழுதே விக்ஸ்வேபோரப் சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட்காலையிலேயே, அவன் தேகசுகம் பெறுகிறான்.

*2 விதங்களில் ஜலதோஷத்திலிருந்து குணம் தருகிறது!*



**1** மூக்கின் வழியாக வேலை செய்கிறது. உங்கள் குழந்தை விக்ஸ் வேபோரப்பின் தீவிர ஒளஷத ஆவிகளை உள்ளுக்கு சுவாசித்து, மூக்கு, தொண்டையிலுள்ள சளி உபாதைகளிலிருந்து நிம்மதி பெறுகிறது.



**2** சருமத்தின் மூலம் வேலை செய்கிறது. சருமத்தினூடே விக்ஸ் வேபோரப் உங்கள் குழந்தைக்கு உஷ்ணமும் சுகமும் தந்து அவன் மார்க்கபத்தை உடைத்தெறிகிறது.




**விக்ஸ்** வேபோரப்

328 Tam

மார்பு, தொண்டை, முதுகில் தேய்த்தாலே போதும்.

''விக்ஸ் வேபோரப்'' டிரேட் மார்க்

இன்றே விக்ஸ்வேபோரப்பை உபயோகித்து பாருங்கள்!

*புதிய* கைக்கடக்கமான பரீட்சார்த்த சைஸ் டின் 40 ந.பைசா தான்

வரி எக்ஸ்ட்ரா



பிரியமான உணவு வகைகளைத் தானே சித்தம் செய்து உங்களுக்குப் பரிமாறுவதில் அவளுக்குத் தனி ஆசை!'' என்றான் வைகைமாலை, குறும்புத்தனமாகப் பார்த்துக் கொண்டே.

''இல்லை, இல்லை! நீங்கள் இருவரும் பேசுவதைத் தடுக்க வேண்டாம் என்று தான் சமையலறைக்குப் போய் விட்டேன்!'' என்றாள் சுதமதி.

* * *

மூவரும் சாப்பிட்டு முடிந்ததும், மேல்மாடத்துக்குச் சென்றனர். சந்திரன் இப்பொழுது நடுவானத்துக்கு வந்திருந்தான். குளிர்ந்த காற்று சுகமாக வீசியது. பால் போன்ற வெண்ணிலவில் காவிரிப்பூம்பட்டினமே மோகன வெள்ளத்தில் முழுகியிருந்தது.

''சுதமதி! நீங்கள் இருவரும் கொடும்பாளூருக்குப் போய் வந்த செய்தியையெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டாமா?'' என்று கேட்டான் பூதுகன்.

''வைகைமாலை ஒன்றும் சொல்லவில்லையா? அவள் சொல்லியிருப்பாளென்று நினைத்து நான் சும்மா இருந்து விட்டேன்!'' என்றாள் சுதமதி.

''இல்லை, அக்கா! அவர் காஞ்சிபுரத்தில் கொடியவர்களின் கையில் சிக்கி, பிறகு தப்பி வந்திருக்கிறார். அந்தச் சுவாரஸ்யமான விவரங்களைக் கேட்பதிலேயே வெகு நேரம் கழிந்து விட்டது. இப்பொழுது சொல்லேன்!'' என்றாள் வைகைமாலை.

''கொடும்பாளூரில்தான் சுதமதி மயக்கமடைந்து கீழே விழுந்து விட்டாளே! கொடும்பாளூருக்கு அரசாங்க விருந்தாளியாக வந்த தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளி கொண்டார் பேசியதெல்லாம் அவளுக்கு எப்படித் தெரியும்?'' என்றான் பூதுகன்.

''ஹா! இது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டுச் சுதமதி வியப்பில் ஆழ்ந்தாள்.

''இதுகூட நான் தெரிந்து கொள்ளாவிட்டால், நான் சோழ ராஜ்யம் நிறுவினாற்போலத்தான்!'' என்று கூறி மெல்ல நகைத்தான் பூதுகன்.

''நான் கொடும்பாளூரில் மயக்கமடைந்தது தெரிந்தது என்றால் மற்றதெல்லாம் தெரியாதா? எங்களைத்தான் கேட்க வேண்டுமோ?'' என்றாள் சுதமதி.

''அப்படிக் கேள், அக்கா...!'' என்றாள் வைகைமாலை குறும்பாகச் சிரித்துக் கொண்டே.

''சுதமதி! ஒற்றர்களின் உதவியைக் கொண்டு எல்லாவற்றையும் தெரிந்து கொண்டுவிட முடியாது!'' என்றான் பூதுகன். பிறகு, ''வைகைமாலை! புலிப்பள்ளி கொண்டார் சொன்னதெல்லாவற்றையும் நீ கேட்டிருப்பாயே. போகட்டும். நான் கொடும்பாளூரில் நடந்தவற்றையெல்லாம் இப்பொழுது சொல்லுகிறேன். நீயும் சுதமதியும் சரிதானா என்று அபிப்பிராயம் சொல்லுங்கள்—என்ன? முதலில் புலிப்பள்ளி கொண்டார் இழிவாகப் பேசினார். பிறகு, நந்திபுர நகர்க் காவலர் இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனியைத் தம் மகன் கோளாந்தகனுக்கு மணம் முடிக்கப் போகும் விஷயத்தைப் பற்றிப் பேசினார். திருபுவனிக்குத் திருமணத்தில் இச்சையில்லை. அவள் சீவர ஆடை



யணிந்து பௌத்த மதத்தில் சேரவே விருப்பம் கொண்டுள்ளாள். இந்த விவரங்களைப் பராந்தகன் சொல்லக் கேட்ட புலிப்பள்ளி கொண்டார் திகைத்துப் போனார். அந்தப் பெண் உண்மையில் இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனியில்லை......'' என்று கூறிப் பூதுகன் சிறிது பேச்சை நிறுத்தினான்.

''கொடும்பாளூரில் நடந்தவைகளெல்லாம் உங்களுக்கு அப்படியே தெரிந்திருக்கிறதே......!'' என்று கூறி வைகைமாலை திகைத்தாள்.

''நன்றாக எல்லாவற்றையும் தெரிந்து வைத்துக் கொண்டுதான் நம்மை வேவு பார்க்கிறார்!'' என்றாள் சுதமதி.

''சுதமதி! யாரை யார் வேவு பார்ப்பது? நான் அவ்வப்போது ஒற்றர்கள் மூலம் கேட்டறிந்த செய்திகளெல்

லாம் மூற்றிலும் சரியானவைதானு என்று ஒரு முறை கவனித்துப் பார்த்தேன்!'' என்ருன் பூதுகன்.

அப்பொழுது ஊர் அடங்கி விட்டது. அந்த இரவின் அமைதியில் சந்திரன் வானவீதியில் தனியாட்சி செலுத்திக் கொண்டிருந்தான். அங்கொன்றும் இங்கொன்றுமாகத் திரிந்து கொண்டிருந்த வெண்முகிற் கூட்டங்களுக் கிடையே வைரத் துகள் போல் விண் மீன்கள் ஒளி வீசிக் கொண்டிருந்தன.

சிறிது நேரம் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்த பூதுகன், ''வைகைமாலை! நேரமாகி விட்டது, கீழே போகலாமா?'' என்று கேட்டுக்கொண்டே எழுந்தான். சுதமதியும் வைகைமாலையும் அவனைப் பின்தொடர்ந்து சென்றனர்.

* * *

**பூ**துகன் காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்து சில நாட்களாகி விட்டன. தன் அருமைக் காதலி வைகை மாலையின்



இனிய உரையாடலிலே அவனுக்கு நாட்கள் கணப் பொழுதாகக் கழிந்து விட்டன. அவளது இன்பப் பேச்சிலே தன்னை மறந்தான். ஆனாலும் அவன் உள்ளத்துக்குள் ஒன்றே ஒன்று மட்டும் தலை தூக்கிக் கொண்டு தான் இருந்தது. அது தன் தாய்த் திருநாட்டின் விடுதலையைப் பற்றித்தான்!

அன்று காலையில் எழுந்ததும் பூதுகன் மிகவும் சுறுசுறுப்பாக ஏதோ ஓலையில் எழுதிக் கொண்டிருந்தான்.

வைகை மாலையும் சுதமதியும் ஒரு அதிசயச் செய்தியோடு பூதுகனைக் காண ஓடி வந்தனர்! ஆனால் அவன் ஓலையில் மும்முரமாக ஏதோ எழுதிக் கொண்டிருப்பதைக் கண்டதும் அவர்கள் சிறிது தயங்கி நின்றனர்.

அவன் எழுதி முடித்ததும் வைகைமாலை, சுதமதி இருவரும் மிகவும் பரபரப்புடன் அவனிடம் வந்தனர்.

''இதைக் கேட்டீர்களா? அக்காள் தேவி ஆலயத்துக்குச் சென்றிருந்தாள். அங்கே ஜனங்கள் கும்பலாகக் கூடிப் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்களாம். கலங்கமாலரையரும் சிம்மவர்மனும் கொடும்பாளூரில் பாதாளச் சிறையில் அடைக்கப்பட்டு விட்டனராம். விருந்தினராக வந்தவர்களைக் கொடும்பாளூரில் ஆதித்தனும் பராந்தகனும் மிகவும் அன்போடு வரவேற்றுக் கோட்டையைச் சுற்றி அழைத்துச் சென்று மர்மங்களை யெல்லாம் காட்டினார்களாம். கோட்டைக்குள் ஓரிடத்தில் காணப்பட்ட ஒரு குமிழியைக் கலங்கமாலரையரும் சிம்மவர்மனும் விஷயம் தெரியாமல் திருகி விடவே, பாதாளச் சிறையில் அகப்பட்டுக் கொண்டு விட்டார்களாம். ஊர் முழுவதும் இதே பேச்சாயிருக்கிறது!'' என்ருள் வைகைமாலை.

''ஹஹ்ஹஹ்ஹா! நம் திட்டங்கள் பிரமாதமாக நிறைவேறி விட்டன. சதிகாரக் கலங்கமாலரையனும் ஆதிக்கவெறி கொண்ட சிம்மவர்மனும் தாங்களே தங்களுக்கு ஏற்ற தண்டனையை விதித்துக் கொண்டு விட்டனர்! பல விதத்திலும் நமக்குத் தொல்லை கொடுத்து வந்த கலங்கமாலரையன் ஒழிந்தது நம் வருங்கால வெற்றிக்கு ஒரு நல்ல சமிக்ஞை. சுதமதி! எனக்கு உடனே ஒரு நம்பிக்கையுள்ள குதிரை வீரன் வேண்டும். அவன் இங்கிருந்து வாயு வேகத்தில் பறந்து காஞ்சிபுரம் செல்ல வேண்டும். அங்கே பல்லவ மன்னன் நந்திவர்மனைக் கண்டு அவனிடம் நான் கொடுக்கும் இந்த ஓலையைச் சேர்த்து விடவேண்டும்!'' என்று ஆவலுடன் கூறினுன் பூதுகன்.

''ஆகா! இப்போதே ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறிவிட்டுப் போனுள்.

உடனே பூதுகன் ஒரு ஓலை நறுக்கை எடுத்து அதில் விறுவிறுவென்று ஏதோ எழுதி அதை மடக்கி வைத்தான்.

சுதமதி ஒரு திடகாத்திரமுள்ள மனிதனை அழைத்து வந்தாள். பூதுகன் அவனிடம் ஓலையைக் கொடுத்து விட்டுச் சிறிது நேரம் மெதுவான குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்து விட்டு அனுப்பினுன். பூதுகன் முகத்தில் இப்பொழுது ஒரு அசாதாரண அமைதி காணப்பட்டது.

(தொடரும்

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற

## ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்






✻ ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாகப் பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகு ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாகவும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

✻ சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

குரூப் லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

# நேப்பாள விஜயம்

சுப்புடு



பசுபதிநாதர் ஆலயத்தின் பின்புறம் ஓடும் பாகமதி நதி தீரமும், ஜானகி மந்திரம்.

உலகில் ஒரு அற்புதமாய் விளங்கும் இமாலயத்துக்குச் சென்று வர வெகு நாளைய ஆவல் எனக்கு. ஆனால் சந்தர்ப்பம் கிட்ட வேண்டாமா? கைலாசத்துக்குக் கைலாகு கொடுத்து அழைத்துச் செல்ல வயதும் ஆகவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் நேப்பாளத்தில் இருக்கும் இந்தியத் தூதுவர் காந்தி ஜயந்தி கொண்டாடத் திட்டமிட்டு ஒரு நல்ல "கலாசாரக் கோஷ்டி"யை இந்தியாவினின்றும் இறக்குமதி செய்ய ஏற்பாடு செய்தார். ஒரு வடக்கத்தி சாஸ்திரிய சங்கீத நிகழ்ச்சியும், தென்னாட்டிலிருந்து பரத நாட்டிய நிகழ்ச்சியும் தருவிக்கத் தயார் செய்தார்.

சுநாதம் படைத்த குமார கந்தர்வாவும், நடனமணி குமாரி வஸந்தாவும் இந்தக் கைங்கரியத்துக்கு முன்வந்தார்கள். பிந்தைய கலைக் கோஷ்டியுடன் கூட அடியேனும் ஒட்டிக் கொண்டேன்.

பூபாளம் பாடிக் கொண்டே நேப்பாளுக்குக் கிளம்பினோம். இந்தியா எங்கணும் ரயில் வண்டித் தொடர்கள் ஒரே மாதிரி ஓடுவதாலும், ஒரே மாதிரி சத்தம் செய்வதாலும், வட இந்தியாவில் வழி நெடுக ஒரே மாதிரி தண்ணீர் சாய் கிடைப்பதாலும், ராக்சால் வரை உள்ள ரயில் பிரயாண விஸ்தரிப்புகளை நேயர்களின் கற்பனைக்கே விடுகிறேன்.

ராக்ஸால் நேப்பாளத்தின் அடிவாரம். உலகிலேயே எஞ்சி நிற்கும் ஒரே இந்து ராஜ்யம் இங்கிருந்துதான் துவங்குகிறது.

ராக்ஸாலிலிருந்து, நேப்பாளத்தின் தலைநகராகிய காட்மண்டுவுக்கு (காஷ்ட மண்டபம் - கட்டையினாலான வீடுகள்) ஆகாய விமானம் மூலம் போனால் இருபது நிமிஷம்தான் பிடிக்கும். கண்மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் போய் விடலாம். ஆனால் எங்களுக்கு விமானப் பிரயாணம் பிராப்தியில்லை.

கைலாஸம் போக வேண்டுமென்றால் ராக்ஸாலிலிருந்து மலை வழியாக ஜீப்பில் போவதைவிடச் சுருக்கமான குறுக்கு மார்க்கம் வேறு கிடையவே கிடையாது. எட்டாயிரத்துச் சொச்சம் அடிகள் ஏறி நாலாயிரம் அடிகள் இறங்க வேண்டும்; அதாவது நிச்சயமாய் ஏறி இறங்கினால்.

முதல் முப்பது மைல் பூமி இருக்கிறது: புரியவில்லை அல்லவா? அதாவது ரஸ்தாவே இல்லை. ஜீப்பில் அஷ்டாவதானம் செய்து போக வேண்டும். இடையில் இரண்டு மைல் இருப்புப் பாதை மீதே ஜீப் செல்கிறது. அது எப்படிச் செல்கிறது என்பது அந்த ஜீப்புக்குத்தான் வெளிச்சம்.

முதல் முப்பது மைலுக்குள் முதுகெலும்பை முறித்துக் கொள்ளாதவனுக்கு மூப்பே கிடையாது. ஸதாயுஸ்தான்;

இந்த ஊர்த்துவ தாண்டவம் அமோலக் கஞ்சில் வந்து முடிகிறது. இங்கிருந்துதான் மலை ஏறு படலம் துவங்குகிறது.

சிறுகதை இலக்கியப் பிரகாரம் இந்த யாத்திரையை "உயிரோடு போய்ச் சேர்ந்தோம்" என்று ஒரே வாக்கியத்தில் சொல்லி விடலாம். "திருபுவன ராஜபாதை" என்று மகாராஜாவின் நாமதேயத்துடன் இந்திய ராணுவப் பொறி இயல் பகுதிக்காரர்கள் ஆக்கியிருக்கும் இந்தப் பாதை ஓர் அற்புதச் சாதனை. சுமார் 135 மைல்கள் கொண்ட இம்மலைப் பாதையை



ஜனகபுரி, வைதேகி பிறந்த இடமும்.

நான்கு வருடங்களில் செய்து முடித்துள்ளார்கள். இதில் பெருமைப்பட வேண்டிய அம்சம் என்னவெனில் முக்காலே மூணு வீசம் பேர்கள் தென்னாட்டவர். எங்கள் வருகையை அறிந்து அவர்கள் உவகையுடன் அளித்த வரவேற்பு நெஞ்சை விட்டு அகலவே இல்லை. ஒவ்வொரு வளைவையும், திருப்பத்தையும் அவர்கள் நிர்மாணித்திருக்கும் அழகே அலாதி.

வழியெல்லாம் மலை அருவிகள் பிரதி எதிர் பார்க்காது பொழிந்து கொண்டிருக்கும் காட்சியும் உயர உயர மேக மண்டலத்துடன் உறவாடும் அளவுக்கு அவற்றினிடையே ஊர்ந்து செல்லும் அனுபவமும், அடிக்கடி, நாம் இந்த உலகில் உள்ளோம் என்பதை ஞாபகமூட்டக் கிடுகிடுபள்ளத்தில் அம்மானை ஆட்டும் பயங்கரமும், எல்லாம் மறக்க முடியாத அபூர்வ சம்பவங்கள்.

இரவு ஒன்பது மணிக்குச் செம்பட்டை மயிரும் தும்பைப்பூ புருவமுமாய்க் காட்மண்டு வந்து சேர்ந்தோம். அண்ணாமலையில் கார்த்திகை தீபம் போல் மலை எங்கும் சுடர்விட்டு எரியும் தீபங்கள் விளங்கிய காட்சி கண் கொள்ளாத காட்சியா யிருந்தது.

காட்மண்டு பீடபூமி. சுமார் நாலாயிரம் அடிகள் உயரத்திலுள்ள இது சமதரையும் சம சீதோஷ்ணமாயும் அமைந்துள்ளது.

நேப்பாளத்தில் பெரும்பான்மையோர் இந்துக்களே. ஓரளவுக்குப் பௌத்தர்களும் இருக்கிறார்கள். ஒரு விஷயம். இது ஆஸ்திகத்தின் உறைவிடம். பாழ் நெற்றியைப் பார்க்க முடியாது. ராஜதூதுவனாயிருக்கட்டும், துப்பட்டா விற்பவனாக இருக்கட்டும். துல்லியமாய்க் குங்குமமிடாமல் காண முடியாது. ஸ்திரீகள் நெற்றியிலும் குங்குமம் இட்டு அழகு செய்து கொள்ளுகிறார்கள். வழி நெடுக உள்ள கோவில்களை வணங்காமல் செல்லும் நேப்பாளியைக் காண முடியாது.

வேறொன்றும் வேண்டாம். புத்த பகவான் அவதரித்த லும்பினித் தோட்டம் இங்குதான் இருக்கிறது. வைதேகி வாழ்ந்த ஜனகபுரியும் இந்த மண்ணில்தான் உள்ளது.

பல ஜாதிகள் வசிக்கும் இத்தேசத்தில் ஜாதி வேற்றுமையில்லாமல் சகோதரத்வத்துடன் வாழ்வது ஒரு சிறந்த அம்சம். பிராம்மணர்கள். நேவாரிகள், காஸ்கள், க்ஷத்திரியர்கள், லிம்புக்கள், குருங்கர்கள், லேப்சர்கள், ஷெர்பாக்கள், தாமங்கர்கள் இத்தியாதி.

ஸ்படிகம் போன்ற தண்ணீருடன் நாட்டை வளப்படுத்தும் இரு மகோன்னத நதிகளாகிய பாக்மதியும், விஷ்ணுமதியும் சங்கமமாகும் இடத்தில் காட்மண்டு அமைந்திருக்கிறது.

ஆசியாக் கண்டத்திலேயே மைதானமாகிய துண்டிகேல் என்கிற பசுந்தரையில் தேசிய விழாக்களும் ராணுவ அணிவகுப்புகளும் நடக்கும். மைதானத்தைச் சுற்றிப் பிரும்மாண்டமான உருவச் சிலைகள் காட்சியளிக்கின்றன. அரசாண்ட ராணா வம்சத்தாரின் இவ்வுருவச் சிலைகள் வெகு நேர்த்தியாகவும், கலைச் சின்னங்களாகவும் துலங்குகின்றன.

## சிங்கா தர்பார்

இந்த ஊரில் ஏழை - பணக்காரன் என்ற வித்தியாசமே இல்லை. ஆச்சரியமாயிருக்கிறதல்லவா? காரணம் கேட்பீர்களானால் மேலும் ஆச்சரியப்படுவீர்கள். இங்கே எல்லோருமே தரித்திர நாராயணர்கள்தாம். ராஜ குடும்பத்தைச் சேர்ந்த சிலரே பணக்காரர்கள். அவர்கள் மாடமாளிகை கூட கோபுரங்கள் கட்டிக் கொண்டு, பெருவாழ்வு நடத்துபவர்கள். கஷ்டம் கண்டறியாதவர்கள். அவர்களை விட்டால் உழவர்களும், தச்சர்களும், கொத்தர்களும், கூலிகளும்தான். உழைப்பையே உன்னதமாகக் கருதும் இந்த உத்தமர்களுக்கு வாழ்க்கையில்தான் என்ன பொறுமை? "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்ற பழமொழிக்கு திருஷ்டாந்தமாக விளங்குபவர்கள். ஆணும் பெண்ணும் சுமக்க முடியாத சுமையைச் சுமந்துகொண்டு தம்மால் வெறும் உடலுடன் நடக்க முடியாத மலைச்சாரலில் கருமமே கண்ணாகச் செல்வது ஒரு கண்கொள்ளாக் காட்சி.

சிங்கா தர்பார் என்று ஆரம்பித்துத் தங்காமல் எங்கோ போய் விட்டேனே! முன்னாளில் ராணாக்கள் என்று அழைக்கப்படும் பிரதமர்களின் வாசஸ்தலமாய் விளங்கிய இந்த மகோன்னதக் கட்டடம் இப்போது சர்க்கார் காரியாலயத்தைத் தாங்கி நிற்கிறது. உள்ளேயுள்ள தர்பார் மஹால் அதிநுட்பமான சித்திர வேலைகளுடன் கூடியது. பளிங்குகளும், கண்ணாடிகளும், வர்ண ஜாலங்களும் எல்லாம் நம்மைத் திகைப்புறச் செய்யும் முறையில் அமைந்திருக்கின்றன. இந்தக் கோட்டையில் இருநூறு அறைகள் இருக்கின்றன என்று சொல்லப்படுகிறது.

## ஹனுமான் டோகா

மல்ல அரசர்களின் வாசஸ்தலமாய் விளங்கிய இந்த அரண்மனை பர்மிய பகோடாக்களை ஒத்த கோபுரமும், அதிநுட்பமான வேலைப்பாடுகளுடைய மர முகப்புகளும், தங்கமூலாமும், எல்லாம் அருமைதான் போங்கள்! அதை ஒட்டி உள்ள பவானி கோவில் வானை யளாவுகிறது. அரண்மனை வாசலில் ஆஞ்சநேயப் பெருமான் விசுவரூபத்துடன் விளங்குகிறார். கோவிலுக்குள் இந்துக்கள் அல்லாதவர்கள் வர முடியாது. மதப்பற்றின் சொத்தைப் பார்த்து அனுபவிக்க விரும்புகிறவர்கள் இங்கேவந்தால் போதும்.

தசரா சம்பந்தமான பூஜைகள் இங்கே பெருத்த அளவில் நடைபெறுவது போல் உலகிலேயே இல்லையெனலாம். ஹனுமான் டோகாவுக்கு எதிர்ப்புறத்திலுள்ள விடுதியில் நமது இந்திய தூதர் காரியாலயம் இருக்கிறது. புத்தகசாலையை வெகு நல்ல முறையில், கலாசாரப் பரிமாறலுக்கு உகந்த வகையில் நடத்துகிறார்கள். அக்டோபர் இரண்டாம் தேதியன்று காலை உலகம் போற்றும் காந்தி ஜயந்தி கொண்டாட்டம் துவங்கியது.

ஒருபுறம் நாங்கள் கருணாமூர்த்தி காந்தியின் அஹிம்சைத் தத்துவத்தை உலகுக்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கும்போது, ஹனுமான் டோகாவில் ஆயிரக்கணக்கான எருதுகளும், பல்லாயிரக்கணக்கான ஆடுகளும் பலிக்கு இரையாகிக் கொண்டிருந்தன.

பார்ப்பதற்கும் பழகுவதற்கும் சாந்த சொரூபமாக விளங்கும் நேபாளிகளுக்குக் கோபம் வந்துவிட்டால் நரசிம்ம அவதாரம்தான். ரத்தக் கண்ணி இல்லாமல் உடைவாளை (குக்ரி) உறையில் போட மாட்டார்கள்; அப்படி இவர்களுக்குக் கோபமூட்டும் காரணங்கள் இரண்டே இரண்டுதான். ஒன்று தன்மானம்; மற்றொன்று இந்து மதத்துக்கு இழுக்கு.

மூடியரசின் கீழ் பலகாலம் இருந்தபயனாக இங்கு கல்வி விஷயத்தில் பிற்போக்கான நிலைமைதான். அரை சதவிகிதத்துக்கு மேல் படித்தவர்கள் இல்லை எனலாம். இப்போது கல்வியிலும் கலைகளிலும் ஊக்கம் அதிகமாகி வருகிறது. ஜனங்களுக்குள் விழிப்பும், ஜனநாயக உணர்ச்சியும் அதிகமாகி வருகிறது. இந்தியாவின் இணைப்பும் நல்லுறவும் இன்றி அமையாதவை என்ற உணர்வு இங்கு அனைவருக்கும் மேலோங்கி நிற்கிறது. பாரதசர்க்கார் பல வழிகளிலும் இத்தேசம் முன்னேறச் சகாயம் செய்து வருகிறார்கள். நமது நிதி இலாகாவில் இதற்கென்றே ஒரு தனிஸ்தாபனம்கூட இயங்குகிறது.

காட்மண்டுவின் ஹிருதய ஸ்தானத்திலே கி. பி. 1598 வருஷம் கட்டப்பட்ட காஷ்ட மண்டபம் கொலு வீற்றிருக்கிறது. ஒரு மரத்தின் கட்டைகளால் நிறுவப்பட்ட இந்தக் கட்டடம் நம் முன்னோர்கள் சிற்ப ஞானத்துக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

பொருட்காட்சிச் சாலையில் நாம் பார்க்க வேண்டிய முக்கிய வஸ்து நெப்போலியன், ஜங்பகதூர் ராணாவுக்கு அளித்த வாள். இந்த வாளை எவ்வாறு கையாண்டான் அந்த மகானுபாவன் என்று எண்ணி வியக்க வேண்டியிருந்தது. பக்கத்தில் இருக்கும் சுயம்புநாதர் ஆலயம் ஒரு குன்றின்மேல் காட்சியளிக்கிறது. தூரத்திலிருந்து பார்க்கும்போது, "குன்று தோறும் அழகர் கோயில் வாழ்க" குமரனின் ஆலயங்கள் நினைவுக்கு வந்தன. அதுவும் அதன் பின் பிரகாசிக்கும் வெள்ளிப் பனிமலைகளின் ரம்மியமும் நம்மை மெய்மறக்கச்

பசுபதிநாதர் ஆலயம் (முன்புறம்) பிரம்மாண்டமான நந்திபகவானைக் கவனிக்கவும்.



செய்து விடுகின்றன, மூந்நூறு படிக்கட்டுகள், முழங்காலைப் பதம் பார்க்க இருக்கின்றன;

மேலே சாந்தி நிலவும் கோயிலில் தர்ம சக்கரத்திலுள்ள போதனைகளை மணியாய்க் கட்டித் தொங்கவிட்டிருக்கிறார்கள். செங்கல் வினாலான பெரிய ஸ்தூபி ஒன்று மையமாய் அமைந்துள்ளது. தங்கக் குடை தகதகவென்று ஒளி வீசி மின்னும் இந்த ஸ்தூபி பௌத்தர் களுக்கு முக்கிய யாத்திரை ஸ்தலங்களில் ஒன்றாய் அமைந்திருக்கின்றது.

## பசுபதிநாதர் ஆலயம்

**வா**ருங்கள், பக்தர்காள் கைலயங்கிரியான் வாசஸ்தலத்துக்கு! இந்த எல்லையை மிதித்ததுமே நமது மனதில் ஒரு சாந்தியும், ஒரு சலனமற்ற நிலையும்வந்து விடுகின்றன. ஆத்மீகத் துறையில் தென்னாடு கண்ட முன்னேற்றத்தின் பெரும் சின்னத்தைக் காண விரும்பினால் பசுபதிநாதர் ஆலயத்தை நாடி வரவேண்டியதுதான். வாகன வசதிகள் இல்லாத பண்டைக்காலத்திலே கால் நடையாய்ச்சென்று இந்த ஸ்தலத்தைப் புனிதமாக்கிய சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் கருணையை என்னவென்று சொல்ல? சிவராத்திரியன்று ஹிந்து சமுதாயமே இங்கு திரளாக வந்து விடுவார்கள். இங்கு உள்ள நான்கு முக லிங்கமும், ஏகமுக ருத்திராக்ஷமும், சாளக்கிராமமும், உலக அதிசயங்களில் சேர்க்கப்படவேண்டியவை. இங்குள்ள பூசாரிகள் தென்னாட்டைச் சேர்ந்தவர்கள். வாழையடி வாழையாய் மகாதேவனுக்குத் தொண்டு செய்து வருகிறார்கள். தீவிர பிரும்மச்சரியமும், ஆஸ்திக சேவையும் இவர்கள் வதனங்களில் தனிச் சோபையை அள்ளி வீசுகின்றன. பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஜெய்சிங் ராம் தேவ் என்ற அரசன் கட்டிய இந்தக் கோவிலைப் பார்ப்போர் பரவசமடைந்து விடுவார்கள். இது முக்காலும் சத்தியம்.

இது கொலு வீற்றிருக்கும் பாக்மதி நதி ஸ்படிகம் போன்ற தண்ணீருடன் குதித்துக் கும்மாளி போட்டுக்கொண்டு போகும் காட்சி கண் கொள்ளாதது. இதைப் பற்றி ஒரு விசேஷம் சொல்லுகிறார்கள். எதையும் நம்பாத கலியுகத்தில் இதையும் நம்பா விட்டால் பரவாயில்லை என்ற தைரியத்தில் எழுதுகிறேன். சுவர்க்கத்துக்குப் போக அருகதையுள்ளவர்களே இந்தப் பசுபதி நாதர் எல்லைக்குள் மரணம் எய்துவார்களாம். நாங்கள் போன அன்று ஒரு சடலம், கால்கள் மாத்திரம் தண்ணீரில் மூழ்கப்பட்டுக் கிடந்தது. நான்கு நாட்களாய் அது அங்கு இருக்கிறதாம். இதில் ஜாகேம் என்னவென்றால் பசுபதி நாதர் எல்லைக்குள் மரணம் எய்துகிறவர்களின் சடலங்களை இவ்வாறு கிடத்தி வைத்துவிட்டுப் பக்கத்திலிருக்கும் பிரும்மாண்ட விருக்ஷம் ஒன்றில் புஷ்பிக்கும் ஒரு சிவப்பு மலரை எடுத்துப் பசுபதி நாதர் ஆலயத்திலுள்ள லிங்கத்தின் மேல் சாத்தி விடுவார்களாம். அந்தப் புஷ்பம் கீழே விழுந்தாலன்றிச் சடலத்தைத் தகனம் செய்ய மாட்டார்கள். ஆச்சரியப்பட வேண்டிய விஷயம் என்னவெனில் நான்கு நாட்களானாலும் சடலம் கெடுவதோ, துர்நாற்றமடைவதோ இல்லை. இது நாங்கள் பிரத்யட்சமாகப் பார்த்தது.


குன்றுமேலாடும் சுயம்புநாதர்

## பௌத்தநாதர் ஸ்தூபி

**உ**லகிலேயே பெரிய ஸ்தூபியாகத் துலங்கும் இந்த ஸ்தூபி காட்மண்டுவின் வடகிழக்கு எல்லையில் இருக்கிறது. தங்க முலாமினால் தகதக வென்றும் மின்னும் இது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டதாக மதிப்பிடப்படுகிறது. திபேத் தேசத்து லாமாக்களுக்கு க்ஷேத்திர ஸ்தலமாக விளங்குவதுடன் அவர்களுடைய ஆதீனத்தில் இருக்கிறது. அமைதி நிலவும் இந்தச் சூழ் நிலையில் புத்தர் பெருமான் என்ன நாம் கூட நிர்வாணம் அடையலாம்; சந்தேகமில்லை.

## ஏன் பள்ளி கொண்டீர்......?

**அ**ப்படிக் கேட்கத் தோன்றுகிறது. பாலாஜி தண்ணீர்மண்டபத்தோட்டத்தினுள் பிரவேசிக்கும் போது: இயற்கை வழங்கும் இருபத்திரண்டு அருவிகள் சதா சர்வதா சலசலவென்று பொழிய ஒரு பத்தடிக் குளத்தில் பத்மநாபன் பள்ளி கொண்டிருக்கிறான். பாம்பு மன்னன் மீது ஜலமட்டத்துக்குக் கீழே விளங்கும் நாராயணன் முக விலாசம் தேஜோ மயமாயிருக்கிறது. நமது கலாசாரம் இமயம் முதல் குமரி வரை எவ்வளவு ஒருமைப்பாட்டுடன் விளங்கியிருக்கிறது ஒரு காலத்தில் என்பதற்கு இது ஒரு சான்று. இருந்தது ஐந்தே நாட்கள். அசுவமேத யாகமா செய்ய முடியும்? பார்க்க முடிந்ததெல்லாம் பார்த்தோம்; பரவசமானோம். இனி எங்களைப் பற்றியும் எங்கள் சாதனைகளைப் பற்றியும் கொஞ்சம் தம்பட்டம் அடிக்க வேண்டாமா?

## விருந்துபசாரம்

**நா**ங்கள் நேப்பாளத்தில் கால் வைத்த நாள் முதல் அல்லூராரின் அன்புக்கு இலக்காகித் திணறிப் போனோம்; நேப்பாள-இந்திய

உறவுச் சங்கத்தார் ஒரு நாள் எங்களுக்கு ஒரு கலாசார விருந்து அளித்தனர். அதைப்பற்றி மாத்திரம் சொல்ல விழைகிறேன்.

கிராமிய நடனங்கள் பாட்டுக்கள் சம்பந்தப்பட்டவரையில் பாரத புண்ணிய பூமிக்கு ஈடு இணை உலகிலேயே இல்லை என்று சொல்லிவிடலாம். நேப்பாள கிராமிய நடனத்துக்கும், நமது நடனங்களுக்கும் அடிப்படையில் எவ்வளவு ஒற்றுமை என்பது நிதர்சனம். அறுவடை, போரடித்தல் காமன் பண்டிகை எல்லாம் நமது பாணி தான். ஒரு சிறிய மத்தளம்; (மாதள் என்று அவர்கள் சொல்லுகிறார்கள்) ஐந்து விரல்களையும் சேர்ந்தாற் போல் வைக்க முடியாத கற்றளவே. அதிலே இரண்டே விரல்களினால் அவர்கள் எழுப்பும் நாதமும், கோவைகளும் பிரமிக்கத் தக்கவையா யிருக்கின்றன. கலப்படமில்லாத கிராமியப் பாட்டுகள் பாடும் ஒரு நேப்பாள நபர் என் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தார். அவர் பாடும்போது ஒரு பிரத்தியேகச் சூழ்நிலையையே உண்டுபண்ணி விடுகிறார். மலைகளும், மந்தமாருதமும், சில்லணியும் எல்லாம் பாட்டின் த்வனியிலேயே சிருஷ்டித்துப் புல்லரிக்கச் செய்து விடுகிறார்.

எங்களுக்குக் கௌரவம் செய்த வகையைக் கொஞ்சம் சொல்லி விடுகிறேன். ஆணுக்கு ஒரு நேப்பாளக் கறுப்புத் தொப்பி; ஒரு மத்தளம். ஸ்திரீகளுக்கு ஒரு குக்ரி ப்ரூச். குக்ரி என்பது நேபாளத்துக்கே உரியதான கத்தி. ஒரு முழமே நீளமுள்ள இதனால் ஒரு எருமைக் கடாவை எமலோகத்துக்கு அனுப்பி விடுவார்கள். இதைச் சிறிய அளவில் உறையுடன் செய்து ப்ரூச் மாதிரி மார்புக்குமேல் மேலாக்கில் குத்திக் கொள்ளுகிறார்கள் ஸ்திரீகள். இதனுடைய தாத்பரியத்தை ஒரு நண்பர் வேடிக்கையாய்ச் சொன்னார். அக்காலத்து ராணுக்களுக்கு அளவு கடந்த அழகிகள் அந்தப்புரத்திலுண்டாம். சதியும் சூதும் நிறைந்த சூழ்நிலையில் தற்காப்புக்குப் பழி தீர்க்கவும் இந்த அருமையான சாதனத்தைப் பயன்படுத்தி வந்தார்களாம். இந்தப் பரிசை உவகையுடன் வாங்கி அணிந்த குமாரி வஸந்தாவுக்கும் அவர் தமக்கைகளுக்கும் அந்த மாதிரி சந்தர்ப்பம் ஒன்றும் வாழ்க்கையில் வராமலிருக்க ஆண்டவன் அருளட்டும்!

பௌத்தநாதர் ஸ்தூபி





ஒரு சாதாரண ஜன்னல்-ஆனால் மரவேலைப் பாடுகள் மலைப்பை உண்டுபண்ணுகின்றன.

## நாட்டிய வைபவம்

சுமார் எண்ணூறுபேர் ஜனத்திரளைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். 30×30" ஒரு பிரும்மாண்ட மேடையைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். மூன்று மணி நேரம் சுத்த கர்நாடக சங்கீதமும் சாஸ்திரிய பரத நாட்டியமும் அவர்களுக்கு அளித்த உவகை என்னைப் பிரமிக்கச் செய்தது. மருந்துக்குக்கூட வடக்கத்திய சங்கீத வாடையில்லாமல் இருந்தும், அவர்களை நமது பாணியில் அமைந்துள்ள ஸ்வர அழுத்தமும், தாள விந்நியாசங்களும், ஜதிப்பின்னல்களும், கதி பேதங்களும் கவர்ந்து விட்டன. சமஸ்கிருதத்தில் நல்ல பாண்டித்தியம் உள்ள நேப்பாளிகள் ''சாயங்காலே வனாந்தே'' என்ற ஸ்லோகத்துக்கு அபிநயம் பிடித்தபொழுது சொக்கியே போனார்கள். மாலைவேளையைச் சித்திரிக்கக் குமாரி வஸந்தா பிடித்த அபிநயங்கள் புல்லரிக்கச் செய்து விட்டன. நான் என்ன சொல்லக்கிடக்கிறது!

## முடிவுரை

''உயிரோடு போய்ச் சேர்ந்தாற்போல்
உயிரோடு வந்து சேர்ந்தோம்''

என்று ஏன் முடிக்கிறேன் என்றால், இரண்டு வாரம் கழித்து இதே மலைப்பாதை பீஹாரிலிருந்து சென்ற கலாசாரக் கோஷ்டி ஒன்றை வண்டி குடைசாய்த்துப் பல பேரைப் பலி கொண்டு விட்டது.

பசுபதிநாதருக்கு உளமார்ந்த நன்றியுடன் இதை முடித்துக் கொள்ளுகிறேன்.

**நல்ல தேநீர் தயாரிக்க**
**தேயிலை ஊறும் நேரத்தைக்**
**கணக்கிடுங்கள்**



தேநீர் பாத்திரத்தில் தேயிலை வெகு நேரம் ஊறவைக்கப்பட்டால், தேநீர் அதன் எல்லா நல்ல குணங்களையும் இழந்துவிடும்.

**ஐந்து முக்கிய விதிகளை பின்பற்றுங்கள்**

1. நம்பகமான வியாபாரியிடம் மட்டுமே தேயிலையை வாங்கவும்.
2. புதிய நீரை எடுத்துக்கொள்ளவும். நீரை நன்கு கொதிக்கும்வரை சூடு செய்து, கெட்டிலை அடுப்பிலிருந்து அகற்றிவிடவும். தேநீர் பாத்திரத்தை வெந்நீரால் நன்கு அலம்பி கழுவவும்.
3. ஒவ்வொரு பேருக்கும் ஒரு தேக்கரண்டி வீதமும், தேநீர் பாத்திரத்தை உத்தேசித்து ஒரு தேக்கரண்டி அதிகமாகவும் கணக்கிட்டு தேயிலையை தேநீர் பாத்திரத்தில் எடுத்துப் போடவும்.
4. கொதிக்கவைத்த நீரை உடனுக்குடன் தேநீர் பாத்திரத்தில் ஊற்றி, தேயிலையை மூன்று முதல் ஐந்து நிமிடங்கள் வரை ஊறவைக்கவும்.
5. தேநீரை கோப்பையில் ஊற்றி, பாலையும் சர்க்கரையையும் ருசிக்கு ஏற்றவாறு சேர்த்துக்கொள்ளவும். சுவைத்து அருந்தவும்.






- நட்பின் சின்னம்

TEA BOARD INDIA

௮௩




பின்னிரவு வேளை: இருஷ்ண பட்சமாதலால் நிலவு தனக்குள் தானே மயங்கிக் கொண்டிருந்தது. வெளியே வீதியிலும் சுற்றியிருந்த உலகத்திலும். புது வீட்டில், புது இடத்தில், வீதியையொட்டியிருந்த அறையில் படுத்திருந்த பன்னீர்செல்வத்துக்கு இன்னமும் தூக்கம் பிடிக்கவில்லை.

அவனது மனைவியும் குழந்தைகளும் இன்னமும் வந்தபாடில்லை. இந்த வீட்டுக்கே இரண்டு நாட்களுக்கு முன்புதான் அட்வான்ஸ் கொடுத்து அமர்த்திக் கொண்டான் அவன். முதல் நாள் இரவு கூட அதே அறையில் நிம்மதியாகத் தூங்கியிருக்கிறான். ஆனால் முதல் நாள் இரவுக்கும் இந்த இரண்டாவது நாள் இரவுக்குமிடையில் என்ன அப்படிப்பட்ட வித்தியாசம் வந்து விட்டது?

வித்தியாசம் வந்துவிட்டது உண்மை தான். அன்று மாலை ஐந்து மணிக்கு வந்து சேர்ந்தார் அந்த மனிதர், தம்மைப் பஞ்சாயத்து போர்டு அங்கத்தினர் அருமைநாயகம் என்று சொல்லிக் கொண்டு.

பன்னீர்செல்வத்துக்கு அந்தச் சம்பாஷணை அப்படியே ஞாபகத்துக்கு வந்தது.

''நமஸ்காரம்'' என்றார் அருமைநாயகம்.

''வாருங்கள், உட்காருங்கள்......'' என்று வரவேற்று உபசரித்தான் பன்னீர்செல்வம்;

தம்மை இன்னார் என்று அருமைநாயகம் அறிமுகப்படுத்திக் கொண்ட பிறகு. ''பி. டபிள்யூ. டி. சூபர்வைசர் ஒருத்தர் நம்ம ஊருக்கு மாற்றி வந்திருக்கிறார் என்று எனக்கு இரண்டு நாட்கள் முன்னதாகத் தெரிந்திருந்தால் இதைவிட அருமையான வீடு உங்களுக்காக அமர்த்தியிருப்பேன், மிஸ்டர் பன்னீர் செல்வம்!'' என்றார் தடபுடலான குரலில். அவரது பருத்த உடலும், குத்து

மீசையும், குண்டு குண்டான வைரக் கடுக்கன்களும் 'இவர் செய்தாலும் செய்வார்' என்றே எடுத்துக் காட்டின.

பன்னீர்செல்வம் மிகவும் மெதுவாகவே பதிலளித்தான்:

''எங்கள் குடும்பம் கொஞ்சம் பெரிய குடும்பம், ஸார்! வீடும் கொஞ்சம் பெரியதாக இருந்தால்தானே சௌகரியம்? இதை விடவும் பெரிய வீடு இந்த ஊரில் எனக்குக் கிடைக்குமென்று தோன்றவில்லையே. தவிரவும் இந்த வீதியிலேயே இரண்டொரு குழாய்கள் இருந்தாலும், அவற்றைச் சுற்றித் திருவிழாக் கூட்டம் போலிருக்கிறதே எப்போதும்! கிணறில்லாமல் குழாய் மட்டும் இருப்பது பெரிய சௌகரியமில்லையோ!''

'அதில் தான் ஸார் எல்லாமே இருக்கிறது! இந்த வீட்டில் கிணறில்லாமல் குழாய் மட்டும் இருக்கக் காரணம் என்னவாயிருக்குமென்று யோசித்தீர்களா?'

பன்னீர்செல்வம் ஒன்றும் புரியாமல் விழித்தான்.

வந்தவர் மேலே சொன்னார்: ''தெருவெல்லாம் கிணறு




இருக்க இந்த வீட்டில் மட்டும் ஏன் ஸார் குழாய் இருக்க வேண்டும்? இந்த வீட்டுச் சொந்தக்காரர் மிராசு ஆனிமுத்துப் பிள்ளையவர்கள் கொல்லையில் கூப்பிடு தூரத்தில், தமது வயலில் பம்பு செட் வைத்து வெள்ளாமை நடத்தி வருகிறார். அங்கே யிருந்து குழாய் 'கனெக்ஷ'னைத் தம் வீட்டுக்கு மட்டும் கொண்டு வந்து விட்டார். இது உண்மைதான். ஆனால் வீடு என்று கட்டினால், கிணறென்று இருக்க வேண்டாமா, ஸார்?''

பன்னீர்செல்வம் நிமிர்ந்து உட்கார்ந்தான். அருமைநாயகம் தொடர்ந்து பேசினார்:

''இந்த வீட்டில், இப்போது நீங்களும் நானும் பேசிக் கொண்டிருக்கிறோமே ஸார், இந்தப் பெரிய கூடத்தின் அடியில் இதற்கு முன்னால் ஒரு பெரிய கிணறு இருந்தது! சாதாரணமாகப் பெரியவர்கள் சொல்லுவார்கள், ஒரு கிணற்றைத் தூர்த்துவிட்டு அதன்மேல் கட்டப்படும் ஒரு கட்டடமும் அதில் குடியிருப்பவர்களும் அவ்வளவாகச் சுகப்பட......''

வந்தவர் முடிக்கவில்லை, வாசலில் பால்காரன் கூப்பிட்டான். நெற்றியில் துளித்த வியர்வையைப் பன்னீர்செல்வம் துடைத்துக்கொண்டே, தம்ளரில் பால் வாங்கினான். பால்காரன், ''ஸார்! நாளைக் காலையில் மட்டும் மன்னித்துக்கொள்ளுங்கள். என்னால் வர முடியாது. நம் வீட்டுக் கிணற்றில் ஒரு பூனை விழுந்து விட்டது. அதை இழுத்து வெளியே போட்டுவிட்டு, இரவு முழுவதும் கிணற்றுத் தண்ணீரை யெல்

லாம் வெளியே இறைத்தாக வேண்டும், ஸார்'' என்றும் சொல்லி விட்டுப் போனன்.

மறுபடியும் தன்னிடத்தில் வந்து உட்கார்ந்து கொண்ட பன்னீர்செல்வத்தைப் பார்த்து அருமைநாயகம், '' அவன்கூட இப்போது தன் வீட்டுக் கிணற்றைப் பற்றிச் சொல்லிவிட்டுப் போகிறன் !'' என்றார் சிரித்துக் கொண்டே.

பன்னீர்செல்வத்தின் மனம் ஒருவிதமாக உள்ளே குழம்பிக் கொண்டிருந்தாலும் வெளிப்படையாக அவன், ''பார்த்தீர்களா, கிணறு என்று இருந்தால் ஏற்படும் தொல்லைகளை ! பூனை விழுந்து விட்டதாம் !'' என்றான். இதற்கும் 'கடகட' வென்று சிரித்தார் அருமைநாயகம்.

'' பூனை விழுந்தாலும், பூதம் விழுந்தாலும் கூடப் பரவாயில்லையே ! ஆனல் இளம் பெண்ணெருத்தி விழுந்தால்...?''

அருமைநாயகம் பன்னீர்செல்வத்துக்குச் சொன்னது இதுதான். வார்த்தைகளில் அழகு சொட்டச்சொட்டச் சொன்னர் அவர் இதை:

* * *

ஆணிமுத்து தமது வாழ்நாளில் நல்ல செல்வம் திரட்டி விட்டார். ஊரில் நஞ்சையும் புஞ்சையும் தென்னந் தோப்பும் எலுமிச்சைக் காடுமாக எங்கு திரும்பினுலும் ஆணிமுத்துவின் சொத்துத்தான்.

ஆணிமுத்துவுக்கு ஒரே ஒரு அருமை ஆண் மகன்தான். மகனுக்கும் செல்லமாகச் செல்லமுத்து என்று பெயர் வைத்திருந்தார். அவனைப் பட்டணத்துப் படிப்புக்கு அனுப்பியிருந்தார். நெற்றி வியர்வையை நிலத்தில் கொட்டித் தந்தை உழைத்து அனுப்பிய காசை மகன் பட்டணத்துச் சொகுசுகளில் ஆகாரம் பண்ணிக் கொண்டிருந்தான்.

ஆணிமுத்துப்பிள்ளையின் வாழ்க்கையையோ அல்லது அவரது மகன் செல்லமுத்துவின் இளவட்டத்தின் முழு அத்தியாயத்தையோ ஆராய வேண்டியதில்லை; நேரே விஷயத்துக்கு வந்தால், ஒரு பெண் ஊரில் ஆணிமுத்துவைத் தேடிவந்த விஷயம் குறிப்பிட வேண்டும்.

நேரே விஷயத்தை அக்கறையாகச் சொல்லுபவர்போல் இப்படிச் சொல்லிவிட்டு மேலே தொடர்ந்தார் அருமைநாயகம்.

* * *

ஒருநாள் மாலை நேரம். ஊர் ரயிலடியில் மாலை ஐந்தரை மணி பாஸஞ்சர் வண்டி வந்து புறப்பட்டு விட்டது. அந்த நேரத்தில் ஊரே அமைதி நிலையை அடைந்துவிடும்போது, ரயிலடியைப் பற்றிச் சொல்ல வேண்டுமா ? அன்றைக்கு அங்கே ரயிலிலிருந்து இறங்கியது ஒரே ஒரு பிரயாணிதான். அதுவும் இளம் பெண்ணெருத்தி.

ஸ்டேஷன்மாஸ்டரும் டிக்கெட் பரிசோதகருமாக இருந்தவரிடம் தனது டிக்கட்டை அவள் கொடுத்து விட்டு அவரைப் பார்த்து, ''ஏன் ஸார், மிராசுதார் ஆணிமுத்துப் பிள்ளையவர்கள் வீடு எது?''என்று கேட்டாள்.

நவநாகரிகமான அழகிய அந்த யுவதியைப் பார்த்ததுமே—அவள் அந்த ஊரில் தன்னந்



சுவாமி விவேகானந்தர் வேடிக்கையாகப் பேசுவதில் வல்லவர். அவநம்பிக்கை கொண்டு தர்க்கிப்பவர்களைப் பதில் பேச முடியாமல் செய்வதில் அவருக்குள்ள திறமை சொல்லத் தரமன்று. ஒரு தடவை பேச்சுவாக்கில் அவரிடம் ஒரு பண்டிதர் சொன்னார் :

''நானும் ஒரு வேதாந்தி தான். ஆனால் அவதார புருஷர்களின் ஆத்மீக சக்தியில் எனக்கு நம்பிக்கை கிடையாது. புராணத்தில் வரும் அவதாரக் கதைகளிலும் எனக்கு நம்பிக்கை கிடையாது. நாம் எல்லோரும் பரம்பொருளே என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அப்படி இருக்கும் பொழுது எனக்கும் ஒரு அவதாரத்துக்கும் என்னவேறுபாடு இருக்கமுடியும்?''

இவ்விதம் பேசிய பண்டிதரைப் பார்த்து, விவேகானந்தர் சொன்னார் :

''நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. ஆனால் ஹிந்துக்கள் மீன், ஆமை, பன்றி ஆகியவற்றை அவதாரமாகவே கருதுகிறார்கள். தாங்களோ அவதாரங்களுக்கும் பரம்பொருளான தங்களுக்கும் வேறுபாடு இல்லை என்று சாதிக்கிறீர்கள். தாங்கள் ஒன்று கூற முடியுமா, மேற்கூறிய அவதாரங்களில் தாங்கள் எந்த அவதாரத்தைச் சேர்ந்தவர் என்று?''

அவர் பேச்சை முடிப்பதற்கு முன்பு கூடியிருந்தவர்கள் அனைவரும் 'கொல்' என்று சிரித்து விட்டார்கள். பண்டிதர் வெட்கித் தலைகுனிந்தார்.

---

தனியாக இறங்கியதைக் கண்டதுமே—ஆச்சரியத்தில் மூழ்கியிருந்தார் ஸ்டேஷன்மாஸ்டர்; இப்போது ஆணிமுத்துவைப் பற்றி—ஊரில் பிரபலஸ்தரான ஒரு மனிதரைப் பற்றி—அவள் கேட்டதும் அவரது ஆச்சரியம் பன்மடங்கு பெருகியது.

அவர் சொன்னார் :

''இரண்டு பர்லாங்கு தூரம் நடந்தால், ஊரில் முதலிலேயே பிரதம வேளாளர் வீதியே தென்படும். அங்கே யாரைக் கேட்டாலும் ஆணிமுத்துவின் வீட்டைக் காட்டுவார்கள்.''

''சரி, ரொம்ப நன்றி'' என்று கூறி முன்னேற முனைந்தவளை அப்போதுதான் கை காட்டியிலிருந்து அங்கே வந்திருந்த போர்ட்டரின் குரல் மறித்தது.

''நீங்கள் பிள்ளையவர்களையே பார்க்க வேண்டுமா?''

அவள் நின்று திரும்பி, ''ஆமாம்'' என்று கூறினாள்.

உடனே போர்ட்டர் ரயில் தண்டவாளத்தை யொட்டிக் கூப்பிடு தூரத்திலிருந்த பச்சைப் பசேலென்றிருந்த வயலையும், அதன் நட்ட நடுவில் பெரிய வைக்கோல் போரைச் சுற்றிப் போடப் பட்டிருந்த களத்தையும் காட்டி, ''ஆணி முத்துப் பிள்ளையவர்கள் இப்போது அங்கேதான் கண்டு முதலைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறார். இன்னும் ஒரு அரைமணியாவது அங்கே யிருப்பார்!'' என்றான்.

உடனே அந்தப் பெண், ''அப்படியா? ரொம்ப சந்தோஷம். நானும் அவரைத் தனிமையில்தான் பார்க்க வேண்டும்......'' என்று கூறி விட்டு, கையிலிருந்த ஸூட்கேஸுடன் சரளைச் கல் பிளாட்பாரத்தில் 'சரக் சரக்' என்று வேகமாக நடக்க ஆரம்பித்தாள்.

* * *

வயலுக்குக் குறுக்கேயிருந்த தடத்தில் அவள் நடக்க ஆரம்பித்ததும் களத்திலிருந்து அந்தத் தடப்பாதையைக் குறுக்கே வெட்டிக் கொண்டு போய்க் கொண்டிருந்த இன்னொரு பாதை வழியாக ஆணிமுத்துப் பிள்ளை அன்றைய வேலை முடிந்து ஆட்களை யெல்லாம் வீட்டுக்கு அனுப்பிவிட்டுத் தாம் மட்டும் தனியாகப் புறப்பட்டிருந்தார். இரு தடப்பாதைகளும் சந்தித்த இடத்தில், இருவரும் ஒருவரை யொருவர் சந்தித்தார்கள்.

''ஆணிமுத்துப் பிள்ளை அவர்கள் தாங்கள் தானே?'' என்றாள் அந்தப் பெண்.

''ஆமாம்......''—பதில் குழறியது அவர் வாயில். யுவதியை அச் சமயத்தில் அங்கே தனிமையில் பார்த்ததே ஆச்சரியம்; அதிலும் அவள் தன்னைத் தேடிக் கொண்டு வந்தது, அவரைத் தூக்கிவாரிப் போட்டது.

''நமஸ்காரம் ஸார்...!'' என்றாள் அவள் பணிவாக;

''யார் நீ... நீங்கள்......''

''நீ என்றே அழைக்கலாம், பாதகமில்லை... மிஸ்டர் செல்லமுத்துவோடு கல்லூரியில் படித்தவள் நான்...''

''அப்படியா?''

''இங்கேயே சொல்லட்டுமா, இல்லாவிட்டால் வீட்டுக்குப் போய்ச் சாவகாசமாகச் சொல்லட்டுமா?''

அவளுடைய இக் கேள்வி ஆணிமுத்துவுக்கு அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சியாக இருந்தது. செல்லமுத்துவுக்குத் தெரிந்தவளாம்! ஏதோ முக்கியமான விஷயத்தை வீட்டுக்கு வேறே வந்து சொல்கிறாளாம்! பிள்ளை பேசாமலிருந்தார். இதயத்துள் குமுறிக்கொண்டே. பட்டணத்தில் செல்லமுத்துவின் நடவடிக்கைகளும் பணம் காசை விரயம் செய்வதும் அவருக்குத் தெரியும். அவன் என்ன செய்தானோ? இந்தப் பெண் எதற்காக வந்தாளோ?

அவளே மீண்டும் தொடர்ந்தாள்: ''சரி! இங்கேயே சொல்லிவிட்டு, இப்படியே இரவு வண்டியில் ஏறிப் போய்விடுகிறேன் நான். என்னால் உங்கள் கௌரவத்துக்கு ஒரு ஹானியும் ஏற்படக் கூடாதுதான். ஆனால், உங்கள் மகனால் என்னுடைய கௌரவத்துக்கும் ஹானி ஏற்பட விடமாட்டேன்......''

ஆணிமுத்து, ''சொல்வதைக் கொஞ்சம் விவரமாகச் சொல்லம்மா...'' என்று கெஞ்சாத குறையாக அவளைக் கேட்டார்.

''உங்கள் மகன் செல்லமுத்து ஆறுமாதங்களுக்கு முன்னாலே என்னை ரிஜிஸ்தர் திருமணம் செய்து கொண்டார்...''

# காலமெனும் மணலிலே அடிச்சுவடுகள்

காலத்தின் அழிக்கும் சக்தியை எதிர்த்து இன்று
முள்ள புராதன எகிப்திய எழுத்துக்களினுள்ளே
மறைந்து கிடக்கும் இரத்தக் கிளறிகள், நவரஸச்
சம்பவங்களைக் கண்டவர் யார்? மென்மையான அந்த
ராணியின் சிரம் மண்ணோடு மண்ணாகியது. ஆனால்
கல்லில் செதுக்கப்பட்ட இந்த விஷயம் சரித்திர
வல்லுநருக்கும் சித்திர நிபுணர்களுக்கும் ஆனந்தமும்,
ஆர்வமும் அளிக்கின்றன. அது நற்செய்தியோ அன்றி
வேறு செய்தியோ, ஒன்று நிச்சயம். மனிதன் பிறர்
அறியக்கூடிய முறையில் தன் எண்ணங்களை வெளியிட
உணர்ந்தது முதல் இவ்விஷயங்களைத் தன் பின் வரு
வோருக்குத் தெரியப்படுத்த விரும்பி வந்திருக்
கிறான். இன்று சுலப எழுது முறையே சடுதி
யாகச் செய்தி அனுப்ப உதவும் சாதனம்.

**ப்ளாட்டோ பேனாக்கள் சுலபமாக எழுதும் சாதனங்கள்**





ஒரு மாத்ரே தயாரிப்பு **plato**




எல்லா வியாபார விஷயங்களுக்கும்
எங்கள் பிரத்யேக விநியோகஸ்தர்
களுக்கு எழுதவும்:

பெஸ்ட் பௌண்டன் பென் டிபோ, 79, தேவகரான் மான்ஷன், ப்ரின்ஸெஸ் தெரு, பம்பாய்.

Shilpi MP 496 Tamil-A

# தரத்திற்கும் உறுதிக்கும் நிகரற்ற

ஹத்திபாயின் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்!





## ஹத்திபாயின்



தராசு மார்க்

''தராசு'' அடையாளமுள்ள ஹத்தி பாயின் மலிவான, உத்திரவாத முள்ள, நீண்டு உழைக்கும், ஸ்டெ யின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களை உபயோகியுங்கள்.

## ஹத்திபாய் துளஸிதாஸ் அண்டு ஸன்ஸ்

122, கன்ஸரா சால், பம்பாய் 2.



“என்ன, என்ன!” — பிள்ளையவர்களுக்கு உலகமே சுற்றுவது போலிருந்தது. இருந்தாலும் அவர் சமாளித்துக் கொண்டார்.

“உண்மைதான். அவரும் நானும் ஒருவரை யொருவர் நேசித்து மணம் புரிந்து கொண்டோம். இந்தக் கல்யாணத்துக்கு முன்னாலேயே மனப்பூர்வமாக எனக்கு எழுதிக் கொடுத்த ஒப்பந்தக் கடிதமும் இதோ இந்தப் பெட்டியிலேயே பத்திரமாக வைத்திருக்கிறேன். இதன் ஒரு பிரதியையும் கல்யாண ரிஜிஸ்திராரிடம் தாக்கல் செய்து வைத்திருக்கிறேன். இப்போது என்னை உங்கள் மகன் கொன்றுவிடத் திட்டம் போட்டிருக்கிறார். இனிமேலும் கல்யாண விஷயத்தை உங்களிடம் கூறாமல் ஒத்திப் போடுவதில் அர்த்தமில்லை என்றுதான் ஓடிவந்தேன். இதோ பாருங்கள்! உங்கள் மகனுக்கு என்னிடமிருந்த அன்பு கசந்த பிறகு, அவரோடு நான் வாழ்வதில் — வாழ விரும்புவதில் அர்த்தமில்லை. உங்கள் மனத்தைச் சாந்தப்படுத்தவே அவர் என்னைக் கொல்ல விரும்புகிறார் என்று தெரிகிறது. அவரிடமிருந்துநானாகவே விலகிப் போகப் போகிறேன். அப்படி அவர் என்னைக் கொன்றாலும் கொன்றுவிட்டுப் போகட்டும், பாதகமில்லை! உங்கள் காதில் இதைப் போட்டு வைக்க வேண்டும் என்றே இதைச் சொன்னேன் ......... வருகிறேன். நமஸ்காரம்.”

அவள் மேலும் அங்கே இருக்காமல், தண்டவாளத்தில் தனது மிதியடிகளின் சத்தம் அதிமும்முரமாகக் கேட்கக் கையிலிருந்த ஸூட்கேஸுடன் வேகமாக ஸ்டேஷனை நோக்கி நடந்து விட்டாள்.



ஆணிமுத்துப் பிள்ளை வெகு நேரம் வயல் வரப்பிலே உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தார். செல்லமுத்து இத்தனை தூரத்துக்குப் போவான் என்று அவர் எதிர்பார்க்கவே இல்லை. அவனைப் பட்டணத்துக்கு அனுப்பியது தவறு; தக்க வயதில் கல்யாணம் செய்யாமல் இப்படி விட்டு வைத்திருப்பது தவறு. இந்த இமாலயத் தவறுகளுக்கு வருந்தினார் பிள்ளையவர்கள்.

பெருமூச்சோடு எழுந்தார். மெல்லிய நிலவொளியில் சூழ்நிலையைக் கவனித்தார். கண் எட்டும் அளவுவரை பிராக ஆணிமுத்துப் பிள்ளையவர்களின் சொத்துத்தான்; கூப்பிடு தூரத்திலிருந்த ஊர் அவர் கௌரவம் வீதி வீதியாகப் பரிணமித்திருக்கும் உலகமாகும். 'மகன் எக்கேடு கெட்டுப் போகட்டும்' என்ற எண்ணத்தோடேயே தமது வீட்டை நோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்து விட்டார்.

ஓர் இளம் பெண்ணை இப்படி நிராதரவாக விட்டு விட்டுப் போகிறோமே என்ற எண்ணமோ, மகன் ஒரு பெரிய கொலைகாரனாக இருக்கிறானே என்ற அச்சமோ அவரைக் குத்தியதாகத் தெரியவில்லை. மண்ணாசை, பொன்னாசை, எல்லாவற்றுக்கும் மேலே மான, அவமானத்தின் மேலிருந்த ஆசைதான் ஆணிமுத்துவுக்கு அந்தச் சமயத்தில் பெரியதாகத் தோன்றி விட்டது.

'உணர்ச்சிகளை நசுக்கி உயிரோடு வதைக்கும் மனிதர்கள் கொலைகாரர்களிலும் பெரிய கொலைகாரர்கள்! இறைவா, எனக்கு என்ன வழி காட்டப் போகிறாய்?' என்று ஏங்கியவண்ணம் கைகாட்டி மரத்தடியில் உட்கார்ந்திருந்தாள் அந்தப் பெண். படுக்கையில் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்த ஆணிமுத்துவுக்கு, 'பெண்ணாசையை வளர்க்க ஒரு பெண்ணையே கொலை செய்ய முற்படும் மகன் மண்ணாசைக்காகவும் பொன்னாசைக்காகவும் தம்மையே—பெற்ற தகப்பனையே கூடக் கொல்லலாம்' என்று தோன்றியது. முதலில் பட்டணத்துக்கு மறுநாளே புறப்பட்டுச் சென்று, செல்லமுத்துவுக்கு நல்ல புத்தி சொல்லி ஊருக்கு அழைத்துக் கொண்டு வந்து விடவேண்டுமென்று தீர்மானம் செய்து கொண்டார் ஆணிமுத்து.

* * *

இதுவரையும் கதை சொல்லிக் கொண்டு வந்த அருமைநாயகம் மேற்கொண்டுகதையைத் தொடராமல், “ஏன் ஸார், மணி எட்டடித்து விட்டதே! நீங்கள் சாப்பிடப் போக வேண்டாம்? ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டேனே!” என்று சொல்லிக்கொண்டே தமது இருக்கையை விட்டு எழுந்திருந்து விட்டார்.

பன்னீர் செல்வமும் கூடவே எழுந்தான். இந்த மனிதர் மேலே கதையின் முக்கியமான பகுதியைக் கூறாமல் புறப்படுகிறாரே என்ற ஆவலுடன் அதை அவன் கேட்கவும் கேட்டான் :

“என்ன ஸார், 'டப்'பென்று பாதியில் நிறுத்தி விட்டுப் புறப்பட்டு விட்டீர்கள்? இரவில், கைகாட்டி மரத்தடியில் உட்கார்ந்திருந்த அந்தப் பெண் என்னவானாள்? செல்லமுத்து சங்கதி என்ன? ஆணிமுத்துப் பிள்ளை மகனை அழைத்து வர மறுநாள் பட்டணம் போகவில்லையா?”

அருமைநாயகம் 'கடகட'வென்று சிரித்துக் கொண்டே, “அதற்கப்புறம் இந்த விவரத்தைச் சில வாக்கியங்களிலேயே முடித்து விடலாம்! ஆனால் இன்றைக்கு நான் உங்களிடம் சொல்ல வந்த முக்கியத்துவம் இந்த முடிவில்தான் இருக்கிறது! அந்தப் பெண், அந்த இரவில் கண் மண் தெரியாமல் நடந்து, ஒரு கிணற்றில் வந்து விழுந்து பிராணத்தியாகம் செய்து கொண்டாள். கிணறு இருந்த மனை ஆணிமுத்துவுக்குச் சொந்தம். பிறகு கொஞ்ச

நாலைக்குப் பிள்ளையவர்களுக்கு ஒரே தலைவலி தான். ஸ்டேஷன் மாஸ்டர், போர்ட்டர் உள்பட வாயை மூடுவது அவருக்கு எளிதான காரியமாக இருக்கவில்லை; செல்லமுத்துவை மறுநாளே ஊருக்குக் கொண்டுவர நினைத்தவர், மறு வருஷம் வரைக்கும் கூட ஊருக்குக் கொண்டுவராமல், பணத்தைப் பணமென்று பாராமல் அவளைத் தேசாந்தரம் சுற்ற வைத்தார் ஜாலியாக...... !''

''அப்படியா, அடப் பாவமே!'' என்று பரிதாபப்பட்டான் பன்னீர்செல்வம்.

அருமைநாயகம் அடித்துச் சொன்னார் :

''ஹூம், நீங்கள் ஒன்று! உங்களுக்காகத் தான் ஸார், நான் இப்போது பரிதாபப்படுகிறேன். அந்தக் கிணற்றை மூடிக் கட்டப்பட்ட வீடு இது; இதோ இந்தக் கூடத்துக்கு அடியில்தான் அந்தக் கிணறும் இருந்தது. அந்தப் பெண் விழுந்தது தற்கொலை மட்டுமல்ல ஸார், உண்மையாகவே செல்லமுத்துவின் தூர் எண்ணத்தின் வேகமே அவர்களுக்குச் சொந்தமான கிணற்றில் கொண்டு வந்து அவளைத் தள்ளியிருக்க வேண்டும்! எண்ணங்களுக்குத் தீவிரமான சக்தியுண்டு என்று சும்மாவா சொல்லியிருக்கிறார்கள்?... அப்போ, நான் உத்தரவு வாங்கிக் கொள்ளட்டுமா, ஸார்? நான் சொன்னதை மனத்தில் வைத்துக் கொண்டு எங்கேயாவது பயந்துவிடப் போகிறீர்கள்! ஜாக்கிரதையாக இருங்கள்; அவ்வளவுதான் சொல்வேன்! வரட்டுமா?...''

பிறகு அருமைநாயகம் தாமதிக்காமல் போய்விட்டார். பன்னீர் செல்வத்திடம் புயலான பயப் பிராந்தியை எழுப்பி விட்டுச் சென்று விட்டார் அவர்.

* * *

பன்னீர் செல்வம் இன்னமும் கண்கொட்டவில்லை. எழுந்திருந்து கடிகாரத்தில் மணியைப் பார்த்தான். அதிகாலை நாலு மணியாகி விட்டது. காலைக் காற்று ஜன்னல் வழியே வந்து மெதுவாக வீசியது. அவனுடைய உள்ளத்துக்குச் சற்று இதமாக இருந்தது. ஸ்டவ்வை மூட்டிக் காப்பிபோட்டுச் சாப்பிடலாமா என்று எண்ணினான். காலையில் பால்காரன் வரமாட்டேன் என்று சொல்லிப் போயிருந்ததால், இரவு கொஞ்சம் காய்ச்சிய பாலைத் தனியாக எடுத்து வைத்திருந்தான். விடியற்காலைக் காப்பிக்காக.

பாலும் ஸ்டவ்வும் கூடத்தில் இருக்கின்றன. கூடத்துக்குப் போவதா? பெருமாள் கோயிலிலிருந்து சேமக்கலத்தின் நாதம் மெதுவாகக் கேட்க ஆரம்பித்தது. பயமூட்டும் நள்ளிரவு வேளைதான் போய் விட்டதே. மெள்ளக் கூடத்துக்குப் போனான் பன்னீர்செல்வம். விளக்கைப் போட்டுக் கொண்டான்.

நிர்மலமானதொரு மனித இதயத்தைப் போல் கூடம் 'பளிச்'சென்று சுத்தமாயிருந்தது. அதற்கொரு ஆழம் இருந்து, அந்த ஆழத்துக்குள் ஒரு சுத்தமில்லாத கிணறு இருக்க வேண்டியதும் அவசியம்தானா?

ஜன்னலுக்கு வெளியே உஷத் காலத்தின் வெள்ளிய ஒளி உலகை அணைந்து வரத் துலங்கியது. உலகத்தில் உற்சாகத்தின் ரேகைதான் இந்த உஷைபோலும்! பன்னீர்செல்வமும் தனது மனப்பாரத்தையெல்லாம் உதறி விட்டுப் படுக்கையைச் சுருட்டி வைத்துக் கொல்லைப்புறம் போனான். முகம் கழுவிவிட்டு அவன் வீட்டுக் கூடத்துக்கு வந்தபோது, வாசற் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது.

கதவைத் திறந்தான். கையில் பாலுடன் பால்காரன் நின்று கொண்டிருந்தான்.

''வர மாட்டேன் என்று சொன்னாயே?'' என்று கேட்டான் பன்னீர்செல்வம், பால் வாங்குவதற்காகக் கையில் பாத்திரத்தை எடுத்து வந்துகொண்டே.

''கிணற்றில் விழுந்த பூனையை எடுத்து வெளியே போட்டதும் பிழைச்சு ஓடிடுச்சு ஸார், அது! எல்லாம் ஆண்டவன் இஷ்டம்! அதுக்கு இன்னும் ஆயுசு போட்டிருக்கான்! அது செத்திருந்தால்தானே கஷ்டப்பட்டு நீர் பூராவையும் இறைக்கணும்?''

பன்னீர் செல்வம் அவனைப் பார்த்து மெதுவாக, ''ஏம்பா, உன்னை ஒன்று கேட்கிறேன், உண்மையை மறைக்காமல் சொல்வாயா? இந்த வீட்டுக்கடியில் முன்பு ஏதாவது கிணறு இருந்ததா? அதைத் தூர்த்து விட்டு வீட்டைக் கட்டி யிருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

பால்காரனும் ஒரேயடியாகச் சிரித்தான். ''இந்த வீட்டுக்கடியில் கிணறு இருந்தது நிஜம்தான் ஸார். ஆனால் எந்த வேளையில் மிராசுப் பிள்ளையவர்கள் அதை வெட்ட ஆரம்பிச்சாரோ, கிணற்றில் ஒரு பொட்டுத் தண்ணீர் ஊற வேண்டுமே! ஊஹூம், கிடையாது! தண்ணீரே ஊறாத பள்ளத்தை என்ன செய்வார்களாம்? மண்ணிட்டு மூடத்தானே மூடுவார்கள்'' என்றான்.

பன்னீர் செல்வம் பிரமித்தான். ''மிராசுப் பிள்ளைக்கும் அருமைநாயகத்துக்கும் ஏதாவது தகராறு உண்டா?'' என்று விடாமல் மேலே கேட்டான் அவன்.

பன்னீர்செல்வத்தைச் சற்றே நெருங்கி வந்து பால்காரன், ''ஊரில் ஒருத்தர் நன்றாக வாழ்கிறார் என்றால் அது பல பேருக்குப் பிடிக்காதுங்க! அருமைநாயகத்தின் 'அழகான' பெண்ணைச் செல்லமுத்துத் தம்பி கல்யாணம் கட்டிக் கொள்ள மாட்டேன் என்று முகத்தில் அடித்தாற்போல் சொல்லிவிட்டாருங்க. அந்த ஆங்காரம் அருமை ஐயாவுக்கு இன்னும் நெடுநாள் இருக்குமுங்க. தவிரவும், ஊரிலேயே குழாய் வசதி உள்ள வீடு இந்த ஒரே ஒரு வீடுதாங்க. தன் சொந்த வீட்டுக்குக் கூடமிராசுப் பிள்ளை குழாய் வசதி வைத்துக் கொண்டதில்லை......'' என்றான்.

''ஆனால் நான் கேள்விப்பட்ட கதை......''

''அதுவா? அது இந்த ஊரில் பழகிப்போன கதை. அருமைநாயகம் சொல்லாவிட்டால் அந்தக் கதையை வேறே யாராவது வேண்டாதவங்க சொல்லி யிருப்பாங்க! எல்லாவற்றையும் இந்தக் காதாலே வாங்கி அந்தக் காதாலே விட்டுத் தள்ளுங்க!'' என்று கூறி விட்டுப் போனான் பால்காரன்.

இரவு முழுவதும் எங்கேயோ ஓடிப்போன தூக்கம் அந்தக் காலை வேளையில் அவனது விழிகளை அழுத்த ஆரம்பித்தது. மனக் கிணற்றின் ஊற்றுகளுக்குச் சற்றே அமைதியைத் தருவதற்காக.

# ஆஸ்த்மா-ஜலதோஷம்
## பிராங்கைட்டிஸ் செய்தி
### பல்லாயிரம் பேருக்கு உற்சாகம் தருகிறது

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத்திணறல், இருமல், தும்மல், மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான, அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றி சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.

# கரப்பான் சொறி
## 7 நிமிஷத்தில் கொல்லப்படுகின்றன

உங்கள் சருமத்தில் ஏதக்குறைபாடா? கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் ஒளிந்துகொண்டு தாங்க முடியாத அரிப்பு, வெடிப்பு, கரப்பான், தோல் உரிதல், எரிச்சல், படை, முகப்பருக்கள், கால்வலி முதலிய இதர கோளாறுகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான குணத்தையே அளிக்கவல்லது—ஏனெனில் இவை கிருமிகளுக்கான காரணத்தை கொல்லுவதில்லை. இந்தப் புதிய சிகிச்சை முறையான நிக்ஸோடர்ம் (Nixoderm) இந்தக் கிருமிகளை 7 நிமிஷத்தில் கொன்றுவிடுகிறது. தவிரவும் இது உங்களுக்கு மிருதுவான, மாசற்ற, அழகான சருமத்தை ஒரே வாரத்தில் அளிக்க உத்தரவாதம். அன்றேல் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் பணம் வாபஸ். இன்றே உங்கள் கெமிஸ்டிடமிருந்து உத்தரவாதம் பெற்ற நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்கி உங்கள் சரும உபாதைகளின் உண்மையான காரணத்தை அகற்றுங்கள்.

**Nixoderm**
நிக்ஸோடர்ம்
சரும உபாதைகளுக்கு

## கூந்தல் மற்றும் மூளை அபிவிருத்திக்கான தைலம்

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபக சக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

| | |
|---|---|
| பெரிய பாட்டில் | ரூ. 4/- |
| சிறிய பாட்டில் | ரூ. 2/- |

எங்கும் கிடைக்கும்

ஆயுர்வேத மருந்து
ராம்தீர்த்
பிராம்மி எண்ணெய்

**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**
பம்பாய்-14. (C. Rly)

ஆரோக்கியமாகவும், திடமாகவும் இருக்க யோகாசனங்களை விளக்கும் எங்கள் அழகான ஆஸனப் படத்திற்கு எழுதுங்கள். தபால் செலவு உள்பட ரூ. 2. மணியார்டரில் தொகை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். வீட்டிலேயே ஆஸனங்களைச் சுலபமாகப் பழகலாம்.

சென்னை டெப்போ:
4/441, தங்கசாலைத் தெரு, சென்னை



# பகுத்தறிவும்

திருமாவளவன் கடிதத்தைத் தபாலில் சேர்த்து விட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தான். ஆனால், கடிதத்தைத் தபால் பெட்டிக்குள் போடும் வரையில் அவனிடமிருந்த உறுதி, கடிதம் பெட்டிக்குள் விழுந்த உடனேயே ஏனோ தளரத் தொடங்கி விட்டது.

இத்தனைக்கும் திடீரென்று அவசரத்தில் எழுதிய கடிதமுமல்ல அது! ஒரு வாரம் இரவும் பகலும் தீர ஆலோசித்து எழுதியது. அப்படி விஷயமும் பிரமாதம் என்று சொல்வதற்கில்லை.

திருமாவளவனின் நடை வர வரத் தளர்ந்து கொண்டே போயிற்று! தான் கடிதத்தில் எழுதிய செய்திகளையெல்லாம் மறுபடியும் நினைவுறுத்திக் கொண்டான்.

கண்மணி கல்யாணிக்கு,

இந்தக் கடிதம் உனக்குப் பெருத்த ஏமாற்றத்தைத் தரும் என்றாலும் என் உறுதியையும் கொள்கையையும் கண்டு, நீயே என்னை மெச்சத்தான் போகிறாய்!

உன் கடிதங்கள் கிடைத்தன. ஒவ்வொரு கடிதத்திலும் மறக்காமல் இரண்டு வரிகளுக்கொருதரம் அவசியம் தீபாவளிக்கு வாருங்கள் என்று எழுதியிருப்பதைக் கண்டு என் மனம் பூரிப்படைகிறது.

ஆனால் நான் தீபாவளிப் பண்டிகைக்கு அங்கு வர இயலாதவனாக இருக்கிறேன் என்பதை மிகவும் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் ஒரு பகுத்தறிவுவாதி யென்பதும், எங்களூர்ப் பகுத்தறிவு மன்றத்தின் ஒரு நிர்வாக அங்கத்தினன் நான் என்பதும் ஏற்கனவே நீ அறிந்ததுதான்.

பொதுவாக இந்தப் பண்டிகை, நோன்பு இவைகளிலெல்லாம் எங்களுக்கு நம்பிக்கை

கிடையாது என்பது உலகறிந்த செய்தி! அப்படியிருக்க இந்தத் தீபாவளிப் பண்டிகையைக் காரணமாகக் கொண்டு மற்றவர்களைப் போல் நானும் மாமனார் வீடு செல்வதும் பண்டிகை கொண்டாடுவதும் சரியாகுமா? நான் வர முடியாததற்கு உண்மையான காரணம்:

சென்றவாரம் எங்கள் பகுத்தறிவு மன்றத்தில் நாங்கள் நிறைவேற்றிய ஒரு தீர்மானம்தான். எங்கள் கட்சிக் கொள்கையின்படி 'அங்கத்தினர்களில் யாரும் 'தீபாவளி' கொண்டாடக் கூடாது என்பதோடு தீபாவளி யன்று மாலை நடைபெறும் 'தீபாவளி எதிர்ப்பு'க் கூட்டத்துக்குத் தவறாமல் வரவேண்டும்' என்பதும் தீர்மானத்தின் முக்கிய அம்சமாகும்!

அதனால்தான் நான் வர இயலாதவனாக இருக்கிறேன். மேலும் நான் ஒரு சாதாரண அங்கத்தினன் அல்ல, செல்வாக்குள்ள முக்கிய நிர்வாக உறுப்பினர்களில் ஒருவன். அப்படியிருக்க, நான் உன் அழைப்பை எவ்வாறு ஏற்றுக்




கொள்ள முடியும்? வேண்டுமென்றால் தீபாவளிக்கு மறு தினம் வருகின்றேன். நீயும் நானும் அன்று புத்தாடைகள் புனைவோம். கதை கதையாய்ப் பேசுவோம்!

என் கொள்கையைக் காப்பாற்ற நீ உன் மகிழ்ச்சியைத் தியாகம் செய்யப் போகிறாய் என்பதை நினைவுறுத்தி, உன் மன்னிப்பையும் உன் பெற்றோர்களின் மன்னிப்பையும் கோரி, கடிதத்தை முடிக்கின்றேன்.

உன் அன்பன், திருமாவளவன்.

(பின் குறிப்பு:
இத்தனை நாள் லட்சுமி நாராயணன் என்று இருந்த என் பெயரைத் திருமாவளவன் என்று மாற்றிக் கொண்டிருப்பது உனக்குப் பிடித்தமாயிருக்குமென்று கருதுகிறேன்.)

கடிதத்தில் இருக்கும் ஒவ்வொரு வரியும் அவனுக்கு நன்றாக நினைவிருந்தது! ஏன்? ஒவ்வொரு சொல்லையும் பலமான சிந்தனைக்குப் பிறகுதானே அவனால் எழுத முடிந்தது? சே! இது என்ன பெருத்த சோதனையாகிவிட்டது! எதற்காக இந்தப் பாழும் தீபாவளி வந்து நம்மை வாட்டியெடுக்கிறது? வரமாட்டேன் என்று எழுதிய பிறகும்கூட ஏன் இப்படி — மனம் அலைபாய்ந்து கொண்டிருக்கிறது! வாழ்க்கையிலேயே 'தலை தீபாவளி' என்னும் திருநாள் ஒரே ஒரு தரம்தானே வருகிறது! அன்று அடையும் இன்ப அநுபவங்களுக்கு ஈடாக உலகில் வேறு என்ன இருக்கிறது?

என்னதான் இன்னும் சில நாட்களில் கணவனும் மனைவியுமாகச் சேர்ந்து எத்தனையோ

இன்பமாக வாழ்க்கையைச் சுவைக்கப் போகிறோமென்றாலும், தவம் செய்வதைப் போல், இந்த நாளுக்காகக் காத்திருந்து, நெடு நாள் பிரிவுக்குப் பிறகு தீபாவளியன்று தன் ஆசைக் கணவனைச் சந்திக்கப் போகிறோம் என்ற ஒரே எண்ணத்தில் தன் காதலைப் பல மாதங்களாகக் கடிதங்களின் மூலம்வளர்த்துக் கொண்டு, மனத்தையும் அதற்கேற்பக் கனிய வைத்துக் கொண்டு விட்டிருக்கும் கல்யாணியை, இந்தக் கடிதம் என்ன பாடு படுத்தும் என்பதை நினைக்கும் பொழுது அவனுக்குத் தாங்க முடியாத வேதனை உண்டாயிற்று.

உடல் முழுதும் ஏதோ முள்ளாகக் குத்திக் குதப்பியது. இதயம் கூடச் சற்றுத் துடிப்பை மறந்து விட்டாற் போலிருந்தது.

பொழுது மெதுவாக மங்கிக் கொண்டிருந்தது. விளக்கேற்றும் நேரம். தெருவெங்கும் சிறுவர்களின் கும்மாளமும், அவர்கள் கொளுத்தும் பட்டாசுகளின் வெடிச் சப்தங்களும், மத்தாப்புகளின் சோதியும் நிறைந்து மறு நாள் இரவு வரவிருக்கும் தீபாவளியைக் குதூகலமாக வரவேற்கத் தலைப்பட்டன.



திருமாவளவனுக்கு இந்தக் கோலாகலக் காட்சிகள் வெறுப்பை மட்டுமல்ல, வேதனையையும் தந்தன. நியாயமாக இந்நேரம் அவன் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருக்கவேண்டியவன்.

ஆனல், சமயம் பார்த்து ஒரு தீவிர பகுத்தறிவுவாதி இந்தப் பாழும் தீர்மானத்தை நிறைவேற்றி விட்டான். திருமாவளவனுக்கு மட்டும்தானா இந்தச் சோதனை? இன்னும் எத்தனையோ அங்கத்தினர்களுக்கும் இந்த அவதிதான்!

முக்கியமாக மன்றத் தலைவன் பிறைசூடிக்கும், செயலாளன் மேகநாதனுக்கும் இது தலைசிறந்த தலைதீபாவளி! ஆமாம், திருமாவளவனைக் காட்டிலும் சற்றுப் பசை உடையவர்கள் அவர்கள் இருவரும். பெரிய பெரிய இடங்களில் பெண் கொண்டவர்கள்! தலை தீபாவளிப் பரிசாக அவர்களுக்கு வைர மோதிரமும், மோட்டார் சைக்கிளும் காத்திருப்பதாக வதந்தி! அத்தகைய மாபெரும் பரிசுகளைத் தியாகம் செய்யத் துணிந்துவிட்ட அவர்களை நினைக்கும் பொழுது திருமாவளவனுக்கு, தான் செய்யப் போவது அப்படி ஒன்றும் மகத்தான தியாகமாகப் படவில்லை. என்றாலும் கல்யாணியை நினைக்கும்பொழுது அவனுக்கு எதையோ பறி கொடுத்து விட்டாற்போலிருந்தது.

சென்ற ஆனியில்தான் அவனுக்கும் திருமதி கல்யாணிக்கும் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்குப் பிறகு ஒரு வாரம்தான் அவனும் அவளும் சேர்ந்து இருந்தார்கள்; அதாவது, தொட்டும் தொடாமலும், நெருங்கியும் நெருங்காமலும் ஒருவர்க்கொருவர் தங்கள் உள்ளங்களையும், ஆசையையும் சரியாகப் பரிமாறிக் கொள்ள முடியாத ஒரு விசித்திர இன்பச் சூழ்நிலையில் தவித்துக் கொண்டிருந்து விட்டுப் பிரிந்து விட்டார்கள்.

இடைக்காலத்தில் தினமும் தவறாமல் கடிதங்கள் இங்கும் அங்குமாகப் பறந்து அவர்களது காதலை வளர்த்தன.

எப்படியோ நீண்ட நாட்களாக அவர்கள் எதிர்பார்த்திருந்த தீபாவளி; இன்னும் இருபத்து நான்கு மணி நேரத்தில் வரப் போகிறது! ஆமாம்! தீபாவளி வரத்தான் போகிறது! ஆனல்......!

'களுக்' கென்ற சிரிப்பொலி அவன் தலையைச் சற்று நிமிர்த்தியது! தெருவிளக்கைக் கையில் ஏந்தியவளாய் ஒரு பெண், தன் வீட்டுக்குள்ளிருந்து சிரித்துக் கொண்டே வெளியே வந்தாள்! தீப ஒளிபட்டு அவள் முகம் தங்கப் பிழம்பாக ஜொலித்துக் கொண்டிருந்தது.

''இன்னும் ஒரு மணி நேரம்தான் இருக்கிறது!......அப்புறம் உன் கொட்ட மெல்லாம் அடங்கி விடும்......''

அந்த அழகியின் பின்னல் அவளைக் கேலி செய்தவாறே வேறொரு யுவதி வந்து கொண்டிருந்தாள்.

தீபத்தை ஏந்திக் கொண்டிருந்த பெண்ணின் முகம் மலர்ந்த மலர்ச்சியும் அடைந்த பூரிப்பும் சொல்லத்தரமன்று.

ஆமாம்! அந்தப் பெண்ணின் கணவன் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் தீபாவளி கொண்டாடுவதற்கு வந்து விடுவான். அவனை வரவேற்க அவளுடைய தம்பியோ அல்லது தந்தையோ ரயில் நிலையத்துக்குப் போயிருப்பார்கள்.

இதைத்தான் அவளுடைய தோழிப் பெண் கூறி, 'இன்னும் ஒரு மணி நேரத்தில் உன் கொட்டம் அடங்கிவிடும்!' என்று கேலி செய்கிறாள்.

உண்மையில் இந்த ஒரு மணி நேரத்துக்குப் பிறகுதானே அவள் கொட்டம் அடிக்கத் தொடங்குவாள்? ஆனல் அது வெளியில் தெரியாது. அவ்வளவுதான்! அவளுடைய உள்ளம் அடிக்கப் போகும் கொட்டங்களெல்லாம் அவனைக் கண்ட பிறகுதானே?

அந்தப் பெண்ணைக் கண்டதும் திருமாவளவன் நெஞ்சைக் கல்யாணியின் நினைவு கூரென்று குத்தியது. குத்தியதோடு மட்டுமில்லை. நன்றாகக் குதறியும் விட்டது. வலிக்கும் தன் நெஞ்சை ஒரு கையால் அழுத்தியவாறே வீடு வந்து சேர்ந்தான்.

மணி ஏழடித்தது. ''ரயில் இந்நேரம் 'செந்துறை' ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டிருக்கும். அடுத்தது 'ஒட்டக் கோயில்'. இன்னும் அரைமணிக்குள் அரியலூர் வந்து விடும். ஸ்டேஷனில் அவனை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மாமனாரும் மைத்துனனும் வண்டியில் அவன் வராததைக் கண்டு ஏமாறப் போகிறார்கள்! அவர்களு



# மர்பி ரேடியோ

## இல்லத்திற்கு இன்பமளிக்கிறது

*

மர்பி ரேடியோ ஆப் இந்தியா லிட்.

பம்பாய் - 12

---

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி வியாதிகளுக்கு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

### மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம் : குறிப்பு:—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | இடம் | தேதி |
|---|---|---|---|
| கரூர் | 1 காலை | விருதுநகர் | 9 காலை 8 to 9 |
| சேலம் | 2 காலை & மாலை | கோயில்பட்டி | 9 10-30 to 12; முற்பகல் |
| ஈரோடு | 3 காலை | தூத்துக்குடி | 9 மாலை |
| திருப்பூர் | 3 மாலை | திருநெல்வேலி | 10 காலை & மாலை 11 காலை |
| கோயமுத்தூர் | 4 காலை & மாலை | ஸ்ரீவைகுண்டம் | 11 மாலை |
| பாலக்காடு | 5 காலை | அம்பாசமுத்திரம் | 12 காலை |
| பொள்ளாச்சி | 5 2-30 to 3-30 மாலை | தென்காசி | 12 மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 4-30 to 5-30 மாலை | திருவனந்தபுரம் | 13 காலை & மாலை |
| பழனி | 5 6-30 to 7-30 மாலை | ராஜபாளையம் | 14 காலை |
| திண்டுக்கல் | 6 காலை | சிவகங்கை | 14 மாலை |
| பெரியகுளம் | 6 மாலை | காரைக்குடி | 15 காலை & மாலை |
| மதுரை | 7 & 8 காலை & மாலை | தேவகோட்டை | 16 காலை |
| | | புதுக்கோட்டை | 16 மாலை |

○●○

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை — திருச்சிராப்பள்ளி — கும்பகோணம்

டைய பரிதாபகரமான தோற்றம் ஒரு கணம் அவன் மனக் கண்ணின் முன் தோன்றி அவனை வாட்டியது.

இந்நேரம் தான் வராத செய்தி கல்யாணி யின் காதுகளுக்கு எட்டியிருக்கும். அதைக் கேட்டவுடன் அவள் அடையும் வேதனை, ஏமாற்றம், அவளுடைய அழகிய முகத்தில் வடியும் கண்ணீர்; எல்லாம் படமாக விரிந்தன......''

ஒரு தரம் தீர்மானித்தபிறகு அதைப்பற்றி மறுபடியும் மறுபடியும் ஏன் சிந்திக்க வேண்டும்? இப்படியாகத் தன் மனச்சாட்சியோடு போராடிக் கொண்டிருந்து விட்டு எப்படியோ கண்ணயர்ந்து விட்டான்.

மறு நாள் பொழுது விடிந்ததும் வீட்டுக்காரரின் மகள் கமலா அவன் அறைக்கு வந்து, "என்ன அண்ணா, இன்னும் தூங்கறே?" என்று அவனை எழுப்பிக் கொண்டிருந்தாள்.

என்னவோ கனவு கண்டு கொண்டிருந்த திருமாவளவன் திடுக்கிட்டு எழுந்தான்.

"என்ன, வளவன்! இன்னும் எழுந்திருக்க வில்லையா?" வாசலில் பகுத்தறிவு மன்றத் தலைவன் பிறைசூடி நின்று கொண்டு அவனை அழைத்தான்.

பிறைசூடியும் உற்சாகமாய்க் காணவில்லை. அவன் முகத்திலும் ஒருவித சோகம் படர்ந்திருந்தது.

"தலையை இலேசாக வலிக்குது!" என்று கூறிக்கொண்டே எழுந்தான் வளவன்.

"மேகநாதன் மன்றத்தில் உனக்காகக் காத்திருக்கிறான். சீக்கிரம் வா!"

சிறிது நேரத்துக்குப் பிறகு இருவரும் செயலாளன் மேகநாதனைக் காண்பதற்குப் புறப்பட்டார்கள்.

"இரவு முழுவதும் தூக்கமில்லையப்பா!" பிறைசூடியின் குரலில் ஏக்கம் கலந்திருந்தது.

"நான் மட்டும் எங்கே தூங்கினேன்! இரவு முழுவதும் ஒரே கனவுதான்!"

"நீ கடிதம் எழுதிப் போட்டுவிட்டாயா?"

"நேற்று மாலைதான் எழுதினேன். இந்த நேரம் சேர்ந்திருக்கும்!"

"நான் வரமாட்டேனென்று தந்தியே கொடுத்து விட்டேன்! இல்லாவிட்டால் அவர்கள் வேறு ஸ்டேஷனில் வந்து எனக்காகக் காத்திருப்பார்கள்!"

"சே! நானும் அப்படித்தான் செய்திருக்க வேண்டும். வீணாக நேற்று முழுவதும் அவர்களை அரியலூர் ஸ்டேஷனில் காக்க வைத்து விட்டேன்!"

"மேகநாதனும் என்னவோ போல்தான் இருக்கிறான். ஒன்றும் சுரத்தாக இல்லை!"

"நாம் அவசரப்பட்டுத் தீர்மானத்தை நிறைவேற்றி விட்டோம். கொஞ்சம் நிதானித்திருக்கலாம்!"

"இனிமேல் என்ன செய்வது? நடந்தது நடந்து விட்டது!" என்று பேச்சை முடித்தான் பிறைசூடி.

பகுத்தறிவு மன்றப் படிப்பகத்தில் செயலாளன் மேகநாதன் இவர்களுக்காகக் காத்திருந்தான். மறு நாள் நடைபெறவிருக்கும் தீபாவளி எதிர்ப்புக் கூட்டத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றி மூவரும் பேசிக் கொண்டிருந்து விட்டுப் பிரிந்தார்கள்.

அன்று இரவுதான் தீபாவளி. நகர் முழுவதும் தீபாவளியின் மணம் நிரம்பி யிருந்தது. எங்கு பார்த்தாலும் குதூகலம். ஜவுளிக் கடைகள், பட்டாசுக் கடைகளிலெல்லாம் மக்கள் நெரிந்து கொண்டிருந்தார்கள். ஊரே இளுகுளுத்துக் கொண்டிருந்தது.

பகல் உணவுக்குப் பிறகு சாய்வு நாற்காலியில் அமர்ந்தவாறே தீவிர சிந்தனையில் லயித்திருந்த திருமாவளவன் தன்னை அறியாமலேயே கண்களை மூடினான். மூடிய அவன் கண்களுக்குள் ஒரு காட்சி விரிந்தது.

அரியலூர், சிவன் கோவில் வீதி. அதோ நீல வர்ணம் பூசிய கல்யாணியின் வீடு. மற்ற வீடுகளில் காணப்படும் கலகலப்பும் மகிழ்ச்சியும் அங்கு இல்லை.

தெருத் திண்ணையில் அவனுடைய மாமனார் எங்கேயோ பார்த்தவண்ணம் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. உள்ளே அவன் மாமி ஒரு மூலையில் படுத்துக் கிடந்தாள். அவள் முகத்திலும் ஈயாடவில்லை. துருதுரு



வென்று திரியும் மைத்துனன், கையில் ஒரு புத்தகத்துடன் அழுகையும் படிப்புமாக இருந்தான்.

'கல்யாணி! கல்யாணி!' ஏன் பேசமாட்டேனென்கிறாய்? திரும்பிக் கூடப் பார்க்க வில்லையே!

'கல்யாணி! கல்யாணி!' தன் முழு சக்தியையும் உபயோகித்து வாய் விழியக் கத்தினான் திருமாவளவன்.

"என்ன தம்பி, இது! விகாரமாகக் கூச்சல் போடறே!" என்று கேட்டுக் கொண்டு அவன் அருகில் நின்று கொண்டிருந்தார் வீட்டுக்காரர்.

பகல் கனவு கலைந்தது. நிலைமையை உணரச் சிறிது நேரம் பிடித்தது அவனுக்கு. ஆனால் கனவின் அதிர்ச்சியால் அவன் உடல் இன்னும் வெடவெடென்று நடுங்கிக்கொண்டு தானிருந்தது.

"ஒன்றுமில்லை! கனவு!" என்று பதறிய வண்ணம் எழுந்தான் திருமாவளவன்.

"மணி என்ன இருக்கும்!" அவன் குரலில் திடீரென்று ஒருவித வேகம் தொனித்தது.

"ஒன்பதுக்கு மேலே இருக்கும்: பகலில் படுத்தவன் நேரம் தெரியாமல் தூங்கிவிட்டிருக்கே......!"

"என்ன, ஒன்பதாகி விட்டதா?" வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தான் வளவன்.

இருந்தாற்போலிருந்து இவ்வளவு படபடப்பும் அவசரமும் எதனால் என்று புரியாமல் விழித்தார் வீட்டுக்காரர்.

"தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் எத்தனை மணிக்கு சார்?" என்று கேட்டான் வளவன்.

வீட்டுக்காரருக்கு ஒருவாறு விஷயம் புரிந்தது. அவனுடைய அவசரத்துக்கும் காரணம் என்னவென்பதை தெரிந்து கொண்டார்.

"ஒன்பது ஐம்பதுக்கு" என்றார் அவர்.

கடிகாரத்தைப் பார்த்தான். மணி சரியாக ஒன்பது அடித்து இருபது நிமிஷங்களாகியிருந்தன.

அவன் இருக்கும் இடத்திலிருந்து எழும்பூர் ரயில் நிலையம் செல்ல அரை மணி நேரத்துக்கு மேலே ஆகும். ஆட்டோ ரிக்ஷா கிடைத்தால் பதினைந்து நிமிஷங்களில் சென்று விடலாம். ஆனால் நினைத்த இடத்தில் திடீரென்று எங்கே கிடைக்கப் போகிறது? வேண்டாதபோது சுற்றிச் சுற்றி வரும்.

கையில் பிரயாணப் பையுடன் தெருவுக்கு வந்தான். நல்ல வேளையாக ஒரு ரிக்ஷா தென்பட்டது. சைக்கிள் ரிக்ஷாவாக இருந்தாலும் கொஞ்சம் வேகமாகப் போய்விடலாம். இது கை ரிக்ஷா. இதில் போய் எக்ஸ்பிரஸ் வண்டியைப் பிடிப்பது சந்தேகம்தான்! ஆனால் எக்ஸ்பிரஸ் வண்டி தவறினால் வேறு வண்டி கிடையாது.

எக்ஸ்பிரஸ் வண்டி காலை மூன்று மணி சுமாருக்கு அரியலூர் போய்ச் சேர்ந்துவிடும். எப்படியும் பண்டிகையில் கலந்து கொண்டு விடலாம்.

ரிக்ஷாக்காரன் கொஞ்ச தூரம் ஓடிவிட்டுப் பிறகு மெதுவாக நடக்க ஆரம்பித்துவிட்டான். பாவம்! அவனால் அதற்கு மேல் ரிக்ஷாவை இழுத்துக் கொண்டு ஓட முடியவில்லை. சோதனையாக வேறு ரிக்ஷாவோ, வண்டியோ வேறு எதுவும் கண்ணுக்குத் தென்படவில்லை.

திருமாவளவன் துடித்தான்; ரிக்ஷாக்காரனை விரட்டினான். ஒன்றும் பயனில்லை.

"என்னால் இனிமேல் ஓட முடியாது, சார்! வேண்டுமானால் இறங்கி விடுங்கள்!" என்று தீர்மானமாகச் சொல்லி விட்டான் அந்த ரிக்ஷாக்காரன்.

கைக்கடிகாரத்தைப் பார்த்தான் வளவன். ஒன்பது நாற்பது. இன்னும் பத்து நிமிஷத்துக்குள் எழும்பூர் சென்றுவிட வேண்டும். குறைந்தது இன்னும் ஆறு பர்லாங்கு தூரமாவது இருக்கும்.

யோசிக்க நேரமில்லை! திடீரென்று ரிக்ஷாவிலிருந்து குதித்தான்! மறு விநாடி தலை தெறிக்க ஓட்டமாக ஓட ஆரம்பித்து விட்டான் திருமாவளவன்.

பாதையில் சென்று கொண்டிருந்தவர்கள் அவனை வியப்புடன் பார்த்துச்சிரித்ததையோ, இப்படி ஒரு நகர வீதியில் தன்னைப் போன்றவன் ஓடுவது அநாகரிகம் என்பதையோ அவன் நினைக்கவே யில்லை!

ஒன்பது ஐம்பது. தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் கிளம்ப மணி அடித்து விட்டார்கள். கார்டு பச்சை விளக்கைத் தலைக்கு மேல் தூக்கித் தாலாட்டிக் கொண்டிருந்தார்; வண்டியும் கூவி விட்டது.

திருமாவளவன் கண்ணை மூடிக்கொண்டு ஓடி வந்தான். வழியில் நின்று கொண்டிருந்த டிக்கெட் பரிசோதகரை இடித்துத் தள்ளிக் கொண்டு பிளாட்பாரத்தில் நுழைந்தான்.

வண்டி நகரத் தொடங்கி விட்டது!

இன்னும் ஒரு மூச்சு! அவன் கையில் ஒரு பெட்டியின் பிடி சிக்கிவிட்டது! பிழைத்தான். எப்படியோ பெட்டிக்குள் ஏறிக் கொண்டு விட்டான் வளவன்.

வண்டி தாம்பரம் சென்ற பிறகுதான் அவனுடைய சுவாசம் ஒருநிலைப்பட்டு வந்தது. டிக்கட் இல்லாமல் ஏறிவிட்டோமே என்ற கவலை கூட இல்லை அவனுக்கு. வண்டியைப் பிடித்து விட்டோமே என்ற மகிழ்ச்சி மற்ற எல்லாவற்றையும் மறக்கடித்து விட்டது.

பெட்டிக்குள் மெதுவாகத் தன்பார்வையை ஓட்டினான் திருமாவளவன். அடே! அதோ உட்கார்ந்திருப்பவர்கள் இருவரும் ஏன் ரயிலில் பிரயாணம் செய்கிறார்கள்?

அவனைக் கண்டதும் தலைவன் பிறைமுடியும், செயலாளன் மேகநாதனும் ஒரு அசட்டுச் சிரிப்பை உதிர்த்தார்கள்.

பிறைமுடியின் மனைவி லால்குடியிலும் மேகநாதனின் இல்லாள் ஸ்ரீரங்கத்திலும் இருப்பது நினைவுக்கு வந்தது அவனுக்கு.

தலைவனும் செயலாளனும் தலையைக் கவிழ்த்துக் கொண்டார்கள்.

எக்ஸ்பிரஸ் ஜிகுஜிகுவென்று போய்க் கொண்டிருந்தது.

மறு நாள் பகுத்தறிவு மன்றத்தின் துணைச் செயலாளர் இரண்டு கடிதங்களைக் கையில் வைத்துக் கொண்டு ஒன்றும் புரியாமல் விழித்துக்கொண்டிருந்தார்.

ஒன்று; பிறைமுடி எழுதி வைத்திருந்த கடிதம். அதில்:

"திடீரென்று இன்று மாலை என் பாட்டனுக்கு உடல் நிலை மிகவும் மோசமாகி யிருக்கிறது என்று தந்தி வந்ததால், நான் இன்று இரவு மெயிலில் கிளம்புகிறேன்" என்று எழுதப்பட்டிருந்தது.

மற்றொன்று மேகநாதனுடையது. அதில், "என் மாமன் மோட்டார் விபத்தில் சிக்கிக் கொண்டதாகச் செய்தி கிடைத்தது. இரவு எக்ஸ்பிரஸ் வண்டியில் பயணப் படுகிறேன்" என்று தீட்டப்பட்டிருந்தது.

ஆனால்—

அதே நேரத்தில் அரியலூரிலும், லால்குடியிலும், ஸ்ரீரங்கத்திலும் மேற்படியார்களின் மனைவிமார்கள் மூவரும் புத்தாடைகள் அணிந்தவர்களாகக் கோயிலுக்குச் சென்று தங்கள் கணவன்மார்களின் மனத்தைச் சரியான சமயத்தில் மாற்றி, தீபாவளிப் பண்டிகையைக் கொண்டாட அனுப்பி வைத்ததற்காக இறைவனுக்குத் தங்கள் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்து நீர் மல்கும் கண்களுடன் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon